# கம்பர் கவிதைக் கோவை

(இராமாவதார காவியத்தினின்று திரட்டியது)

முதலாம் பாகம்

(பால-அயோத்தியா-ஆரணிய காண்டங்கள்)



இலங்கை

தபால் தகவல் மந்திரி

கனம். சு. நடேச பிள்ளை, B.A., B.L., F.R.E.S. அவர்களது

முன்னுரையுடன்



பதிப்பாசிரியன்

அ. சே. சுந்தரராஜன், B.A.,

இராமநாதன் கல்லூரி,

சுன்னாகம், இலங்கை.



விலை ] 1953. [ ரூ. 4.

# கம்பர் கவிதைக் கோவை

(இராமாவதார காவியத்தினின்று திரட்டியது)

முதலாம் பாகம்

(பால-அயோத்தியா-ஆரணிய காண்டங்கள்)



இலங்கை

தபால் தகவல் மந்திரி

கனம். சு. நடேச பிள்ளை, B.A., B.L., F.R.E.S. அவர்களது

முன்னுரையுடன்



பதிப்பாசிரியன்

அ. சே. சுந்தரராஜன், B.A.,

இராமநாதன் கல்லூரி,

சுன்னாகம், இலங்கை.



விலை ] 1953. [ ரூ. 4.

## உரிமையுரை.

---

திருமிகு செந்தமிழ் மரபு
செழித் தோங்கி வருகென
நங்கைமார்க்கும் நம்பிமார்க்கும்
இரு பெருங் கலைக்கழகங்களை
நிறுவிப் பெருவளஞ் செய்த
ஈழமா தேவியின் இன்தவப்
புதல்வராகிய பொன் இராமநாதனார்
அவர்களுக்கு இந்நூலை
நன்றினைவு கூர்ந்து
உரிமையாக்குகின்றேன்.

—பதிப்பாசிரியன்.

## பொருள் அடக்கம்.

## பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 22 | 5 | இன்தளிர் | இன்றளிர் |
| 28 | 20 | எதிர்பட்ட | எதிர்ப்பட்ட |
| 44 | 13 | எய்திய | எய்த |
| 45 | 15 | படரவே | படஅர்வே |
| 53 | 31 | உள்ளத்தளர்சியும் | உள்ளத்தளர்ச்சியும் |
| 62 | 3 | விரிந்து கீழ் | விரிந்து வீழ் |
| 63 | 35 | வெளிப்பட்ட | வெளிப்பட்டு |
| 75 | 8 | தூயவள் | தீயவள் |
| ,, | 28 | சொன்னான் | சொன்னாள் |
| 91 | 24 | வினங்கும் | விளங்கும் |
| 98 | 7 | படர் பந்துக்கள் | படர் பந்துகள் |
| 120 | 21 | சேர்துது | சேர்த்து |
| 151 | 24 | கூந்தலாகிய | கூந்தலாளாகிய |
| 189 | 6 | ன்றாழ்குழை | பொன்றாழ்குழை |

# முன்னுரை.

கம்ப ராமாயணத்தில் திருப்பாற் கடலைச் சார்த்திக் கூறும் உவமைகள் பல உள. கம்பரின் மனதில் திருப்பாற் கடலைப்பற்றி ஊன்றியிருந்த எண்ணங்கள் அவர் கவிதையில் சமயம் வாய்த்த பொழுதெல்லாம் இடம் பெற்றனபோலும். கம்ப ராமாயணமே திருப்பாற் கடலைப்போன்றது என்று கூறலாம். இக்காப்பியம் விரிந்த செய்யுட்பரப்பை உடையது; கருத்தாழம் பெற்றது; ஓசைப் பெருக்குடையது; கற்பனை மணிக்குவை பொதிந்தது; மூவாத கவியமுதம் தன்னகத்தே கொண்டது. இக்கவியமுதத்தைக் கடைந்தெடுத்துத் துய்க்க வேண்டுமென்ற பேரவா இக்காலத்தில் தமிழகத்தில் பல மக்களிடம் குடிகொண்டிருக்கின்றது. அதற்கேற்ப, கம்ப ராமாயணச் செய்யுட்களிற் சிறந்தவற்றைத் திரட்டிச் சில அறிஞர்கள் வெளியிட்டு வருகின்றனர்.

கம்பர் கவிதைக்கோவை என்ற இந்நூல் இத்தகைய வெளியீடுகளுள் ஒன்ருகும். இது கல்லூரிகளில் தமிழ் கற்கும் மாணவர்களுக்குக் கம்பராமாயணத்தில் சுவையை உண்டாக்கும் முக்கிய நோக்கத்தைக் கொண்டது. தமிழில் ஆர்வமுள்ள ஏனையோர்க்கும் இது பயன்படத்தக்கது. கம்ப ராமாயணத்தின் ஆறு காண்டங்களிலுமுள்ள சிறந்த செய்யுட் பகுதிகள் இந்நூலில் கதைப்போக்குக்கு இயைந்தவாறு கோக்கப்பட்டுக் குறிப்புரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இந்நூல் மூன்று பாகமாக வெளியிடப்படுகின்றது. முதற்பாகத்தில் பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம் என்ற மூன்று காண்டங்களினின்று திரட்டிய செய்யுட் பகுதிகளும், இரண்டாம் மூன்ரும் பாகங்களில் கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்ற மற்றைய காண்டங்களினின்று திரட்டிய செய்யுட் பகுதிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. முதற் பாகத்தைத் தொடர்ந்து இரண்டாம் மூன்ரும் பாகங்களும் விரைவில் வெளிவரும்.

இந்நூலைப் பதிப்பித்த ஆசிரியர் திரு. சுந்தரராஜன் அவர்கள் யாழ்ப்பாணத்தில் இராமநாத வள்ளல் நிறுவிய பரமேசுவரக் கல்லூரி, இராமநாதன் கல்லூரி என்ற இரு கல்லூரிகளிலும் உயர்வகுப்பு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்துப் பல ஆண்டுகளாகத் தமிழ்த் தொண்டுபுரிந்து வருகின்ருர்கள். இவர்கள் கம்ப ராமாயணத்தில் அதிகம் பயிற்சியுள்ளவர்கள்;

அதன் செய்யுள் நயங்களை நன்குணர்ந்து, பத சாரத்தை நுட்பமாக உணர்த்த வல்லவர்கள்; பெரியவாச்சான் பிள்ளை முதலிய வைணவச் சான்றோர்களின் வியாக்கியான மரபை அறிந்தவர்கள். இவர்கள் எழுதியுள்ள குறிப்புரை இந்நூலைப் படிப்பவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும்.

இந்நூலில் ஒவ்வொரு செய்யுட் பகுதியின்முன் எழுதப்பட்டிருக்கும் ஆரம்பக் குறிப்புகள் சிறந்த முறையில் அமைந்துள்ளன. இவை அவ்வச் செய்யுட் பகுதியின் சந்தர்ப்பத்தை விளக்குவதோடு செய்யுட்களில் சுவையை உண்டாக்கி, அவற்றின் நயங்களை உய்த்துணரச் செய்கின்றன. மிதிலைக் காட்சிப் படலத்தில் வரும் சூர்யோதய வர்ணனைச் செய்யுட்களைப்பற்றி எழுதப்பட்டிருக்கும் ஆரம்பக் குறிப்பை இதற்கு ஓர் உதாரணமாகக் கூறலாம். இச்செய்யுட்களிற் கூறப்பட்ட உவமைகளில் இராமாயணச் சரிதத்தின் உட்கிடக்கை தொனிப்பதை இவ்வாரம்பக் குறிப்பு அழகாகப் புலப்படுத்துகின்றது. ஆரம்பக் குறிப்புகள் செவ்விய உரை நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. கம்பரின் கவிதைச் செஞ்சொற்கள் ஆங்காங்கு ஆளப்பட்டிருக்கின்றன.

இப்பதிப்பு மாணவர்களுக்குப் பல வகையிலும் பயன்படக் கூடியதாகும்.

பரமேசுவரக் கல்லூரி,<br>
யாழ்ப்பாணம்,<br>
15—8—1950

சு. நடேச பிள்ளை.

# ஆசியுரை.

## கம்பர் கவிதைக் கோவை.

---

கற்பகக் கனிபி ழிந்து காதலின் கலையைக் கூட்டி
அற்புதக் கனவு காணும் ஆயிரம் அழகு சேர்த்தே
விற்புய வீர மூட்டி வியன்பெரும் கவிதை செய்தான்
பொற்புறு புலவன் கம்பன் பொன்முடி தமிழுக் கீந்தான்.

ஓமர், தாந்தே, வர்ஜில், மில்டன், ஷேக்ஸ்பியர், காளிதாஸன், வியாஸர், வான்மீகி ஆகியோர் உலகமகாகவிகள். இவர்களுடன் வைத்து மதிக்கத்தக்க தமிழ்க்கவியரசன் கம்பனே. மேற்சொன்ன மகாகவிகளின் நயங்களெல்லாம் ஒருங்கே கொண்ட கலைக்கோயில் கம்பராமாயணமே.

கம்பராமாயணம் எல்லையற்ற வாழ்வுச் சித்திரம்; ஆழ்ந்த கலைக்கடல்; ஆயுளெல்லாம் ஆராய்ந்து இன்புறத்தக்க காவியச்சுரங்கம். அதை வடித்தெடுத்துக் கோவையாகத் தந்திருக்கிறார் ஸ்ரீமான் அ. சே. சுந்தரராஜன் அவர்கள். அழகிய செஞ்சொல்லால் கம்பராமாயணக் கதை முழுவதையும் இந்நூலிற் காணலாம். கம்பர் கவிதைக் கோவை மூன்று பாகங்களாக வெளிவந்துள்ளது. முதற் பாகத்தில் 507 கம்பக் கவிமணிகளுடன் ஆரணிய காண்டம் முடிகின்றது; ஏனைய இரண்டு பகுதிகளில் 727 கம்பச் செய்யுட்களைக் கொண்டு யுத்தகாண்டம் முடிய விமர்சிக்கிறார் ஆசிரியர். செய்யுட்களுக்குத் தெளிவான விளக்கம் உண்டு. செய்யுட்கள் சரியான பாடச் சிறப்புடன் அமைந்துள்ளன. கம்பக் கவிதைகளின் ஒள்ளிய மணிகளை அவற்றுட் காணலாம். இந்நூலைத் தொகுத்த புலவர் இலக்கிய உலகிற்கு நல்ல சேவை செய்திருக்கிறார். இந்த அரிய நூலை எல்லாரும் போற்றிப் பயிலவேண்டும்.

கலையுள மட்டும் செஞ்சொற் கவியுள மட்டும் வெள்ளி
மலையுள மட்டும் எங்கள் வள்ளுவர் உள்ள மட்டும்
நலைசிறந் தோங்குங் கம்பன் தமிழ்சிறந் தோங்கித் தெய்வ
நிலைதரும் இன்பம் போல நிலவுக உலக மெல்லாம்.

—சுத்தானந்த பாரதி.

# நன்றியுரை.

---

இம்பர் நாட்டிற் செல்வமெல்லாம்
எய்தி அரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா
ஓங்கு நீழ லிருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத்
திறல்சேர் இராமன் திருக்கதையிற்
கம்ப நாடன் கவிதையிற்போல்
கற்றோர்க்கு இதயங் களியாதே.

இராமாவதார காவியத்திலிருந்து மாணவர் விரும்பிப் படித்து இன்புறத் தக்க சில பல பகுதிகளைத் தெரிவு செய்து ஒரு நூலாக வெளியிடவேண்டும் என்ற ஆர்வம் 1942-ஆம் ஆண்டளவிலேயே எழுந்தது. எனினும் 1949-ஆம் ஆண்டின் முடிவிலேயே செய்யுட்பகுதிகள் தொகுக்கப்பட்டு, குறிப்புரை முதலியனவும் ஒருவாறு எழுதி நிறைவேறின. 1950-ஆம் ஆண்டில் முதல் மூன்று காண்டங்களினின்று திரட்டிய செய்யுட் பகுதிகளைக் கொண்ட முதலாம் பாகம் வெளிவந்தது. கிட்கிந்தா-சுந்தர காண்டச் செய்யுட் பகுதிகளைக் கொண்ட இரண்டாம் பாகமும், யுத்தகாண்டச் செய்யுட் பகுதிகளைக் கொண்ட மூன்றும் பாகமும் 1952-ஆம் ஆண்டில் வெளிவந்தன. முதலாம் பாகத்தின் இரண்டாம் பதிப்பு இப்பொழுது வெளிவருகின்றது.

தெரிவு செய்யப்பட்ட செய்யுட் பகுதிகளுள் பெரும்பாலன மேல்வகுப்பு மாணவர்களுக்குப் படித்துக் காட்டப்பட்ட பின்னரே இந்நூலுள் இடம் பெற்றன. சில பகுதிகளின் ஆரம்பக் குறிப்புகள் அவ்வப் பகுதிகள் ஏற்ற வகுப்புகளுக்குப் படிப்பிக்கப் பட்ட பின்னர் திருத்தி எழுதப்பட்டன. ஒரு சில முக்கியமான செய்யுட்களின் பொருளும் இரண்டொரு வகுப்புகளில் கற்பித்துப் பார்த்து, அதன்பின்னரே செப்பஞ்செய்து எழுதப்பட்டன. ஆரம்பவுரை, குறிப்புரை முதலியனவெல்லாம் மாணவர்பால் இயல்பாயமைந்த சிந்தனைத் திறனும் உய்த்துணர்வும் சிதையாவாறு இன்றியமையாத அளவில் சுருக்கமாக எழுதப் பட்டுள்ளன.

இந்நூலின் கையெழுத்துப் பிரதி முழுவதையும் பார்வையிட்டு, அவ்வப் போது வேண்டுந் திருத்தங்கள் கூறி, ஐயங்களையெல்லாந் தீர்த்து, எல்லா வழியிலும் இம் முயற்சிக்கு ஊக்கமளித்து, இந்நூலுக்கு அரிய முன்னுரை

# நன்றியுரை.

---

இம்பர் நாட்டிற் செல்வமெல்லாம்
எய்தி அரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா
ஓங்கு நீழ லிருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத்
திறல்சேர் இராமன் திருக்கதையிற்
கம்ப நாடன் கவிதையிற்போல்
கற்றோர்க்கு இதயங் களியாதே.

இராமாவதார காவியத்திலிருந்து மாணவர் விரும்பிப் படித்து இன்புறத் தக்க சில பல பகுதிகளைத் தெரிவு செய்து ஒரு நூலாக வெளியிடவேண்டும் என்ற ஆர்வம் 1942-ஆம் ஆண்டளவிலேயே எழுந்தது. எனினும் 1949-ஆம் ஆண்டின் முடிவிலேயே செய்யுட்பகுதிகள் தொகுக்கப்பட்டு, குறிப்புரை முதலியனவும் ஒருவாறு எழுதி நிறைவேறின. 1950-ஆம் ஆண்டில் முதல் மூன்று காண்டங்களினின்று திரட்டிய செய்யுட் பகுதிகளைக் கொண்ட முதலாம் பாகம் வெளிவந்தது. கிட்கிந்தா-சுந்தர காண்டச் செய்யுட் பகுதிகளைக் கொண்ட இரண்டாம் பாகமும், யுத்தகாண்டச் செய்யுட் பகுதிகளைக் கொண்ட மூன்றும் பாகமும் 1952-ஆம் ஆண்டில் வெளிவந்தன. முதலாம் பாகத்தின் இரண்டாம் பதிப்பு இப்பொழுது வெளிவருகின்றது.

தெரிவு செய்யப்பட்ட செய்யுட் பகுதிகளுள் பெரும்பாலன மேல்வகுப்பு மாணவர்களுக்குப் படித்துக் காட்டப்பட்ட பின்னரே இந்நூலுள் இடம் பெற்றன. சில பகுதிகளின் ஆரம்பக் குறிப்புகள் அவ்வப் பகுதிகள் ஏற்ற வகுப்புகளுக்குப் படிப்பிக்கப் பட்ட பின்னர் திருத்தி எழுதப்பட்டன. ஒரு சில முக்கியமான செய்யுட்களின் பொருளும் இரண்டொரு வகுப்புகளில் கற்பித்துப் பார்த்து, அதன்பின்னரே செப்பஞ்செய்து எழுதப்பட்டன. ஆரம்பவுரை, குறிப்புரை முதலியனவெல்லாம் மாணவர்பால் இயல்பாயமைந்த சிந்தனைத் திறனும் உய்த்துணர்வும் சிதையாவாறு இன்றியமையாத அளவில் சுருக்கமாக எழுதப் பட்டுள்ளன.

இந்நூலின் கையெழுத்துப் பிரதி முழுவதையும் பார்வையிட்டு, அவ்வப் போது வேண்டுந் திருத்தங்கள் கூறி, ஐயங்களையெல்லாந் தீர்த்து, எல்லா வழியிலும் இம் முயற்சிக்கு ஊக்கமளித்து, இந்நூலுக்கு அரிய முன்னுரை

யையும் பெருந்தகைமையோடு எழுதியளித்த தபால், தகவல் மந்திரி, கனம். சு. நடேச பிள்ளை, B. A., B. L., F. R. E. S., அவர்களுக்கு யான் பல்லாற்றானும் கடப்பாடுடையேன். அப்பேரறிஞர் செய்துள்ள உதவிகளுக்கெல்லாம் எனது ஆழ்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

செய்யுட்பகுதிகளையெல்லாம் ஒருவாறு தொகுத்து, குறிப்புரை முதலியவற்றை எழுத ஆரம்பித்த காலத்திலேயே, எனது நண்பர் திரு. வி. செல்வநாயகம், M. A., அவர்கள் கையெழுத்துப் பிரதியைப் படித்துப் பார்த்து, குறிப்புரை முதலியன அமையவேண்டிய பண்புகளைப் பற்றிச் சில அரிய ஆலோசனைகள் கூறினார்கள். அருங்கலைச் செல்வராகிய அவர் கூறிய கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டே ஆரம்பவுரை, குறிப்புரை முதலியவற்றை எழுதலானேன். மேலும் இந்நூலையிட்டு அன்னார் செய்துள்ள உதவிகள் மிகப்பெரியன. அவற்றிற்கெல்லாம் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

கையெழுத்துப் பிரதியை முழுவதும் கேட்டு ஆராய்ந்து இந்நூல் அச்சாகி வெளிவருவதற்கான உதவிகளை ஒல்லும் வகை பேரன்புடன் புரிந்த பிரமஸ்ரீ பி. ஸ்ரீனிவாஸய்யர் அவர்களுக்கு எனது மனப்பூர்வமான நன்றியை வணக்கத்துடன் சமர்ப்பிக்கின்றேன்.

இந்நூலிற்கு அரும்பெறற் பேருக, ஆசியுரை வழங்கிய கவியோகி, ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்களுக்கு எனது பெரிய நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இந்நூலிற்குப் பேரன்புடன் பாராட்டுரைகள் வரைந்து அனுப்பிய அன்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலின் மூன்று பாகங்களையும் அழகுற அச்சிட்டுதவிய சாரதா விலாஸ அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

இராமநாதன் கல்லூரி,<br>
சுன்னுகம், 26—1—1953.

பதிப்பாசிரியன்.

# கம்பர் கவிதைக் கோவை

## அபிப்பிராயங்கள்.

சுதேசமித்திரன்:—

### முதலாம் பாகம்.

பதிப்பாசிரியர் தாம் அகப்பை அகப்பையாக அள்ளிச் சுவைத்த இராமாயணப் பகுதிகளைத் தமிழன்பர்களுக்குத் தெரிந்தெடுத்துக் கொடுக்கின்றார். முன்னோர் செய்த பல உரை நயங்களின் உணர்ச்சியாலும் தம் உள்ளத்தில் கவிநய ஈடுபாட்டால் எழுந்த புத்துணர்ச்சியாலும் வந்தது இப்புத்தகம்......

பதிப்பாசிரியர் இந்த நூலை 32 பகுதிகளாக்கி ஒவ்வொன்றிற்கும் அணிந்துள்ள முன்னுரை கம்பனுக்குப் பாராட்டுதலாகவும், இந்நூலுக்கே பாராட்டற்குரிய சிறப்பியல்பாகவும் அமைந்துள்ளது. நிகழ்ச்சிகளை நேரில் காண்பது போல் காட்சிப் படுத்துவதும், மனித இயல்புக்கு ஏற்றவாறு அமைந்து இன்பம் பயப்பதும், புறத்து நிகழ் காட்சிகளைச் சிந்தனை உணர்ச்சியில் தோய்ந்து அளிக்கும் சொல்லாற்றலும் கம்பன் காவியத்தில் விளங்குவதை இவர் ஆங்காங்குக் குறிப்பிடுகின்றார். 'நவீன அகநூற் கொள்கைக்கு எல்லா வகையாலும் இயைந்த வண்ணம்' சூர்ப்பநகையைக் கம்பன் படைத்திருப்பதை ஆசிரியர் விவரித்துக் கூறுவது மகிழத்தக்கது. மிதிலைக் காட்சிப் படலத்திறுதியில் வரும் சூரியோதய வர்ணனை இராமாயணக் கதை முழுவதையும் குறிப்பால் உணர்த்துவது என்று இவர் ஒரு தனிப் பகுதியாக விளக்கினது வியக்கத்தக்கதாயுள்ளது.......

### இரண்டாம் மூன்றும் பாகங்கள்.

ஸ்ரீ சுந்தரராஜன் பதிப்பித்திருக்கும் கம்பர் கவிதைக்கோவை முதல் பாகத்தின் சிறப்பினைச் சென்ற ஆண்டு மித்திரனில் வெளியிட்டுள்ளோம். இப்பொழுது வந்திருக்கும் பகுதிகள் கம்பராமாயணக் கதையைப் பூர்த்தி செய்கின்றன. கவிச்சக்ரவர்த்தியின் பாடல்களில் பத்தில் ஒன்று விதம்தான் இந்தக் கோவையில் அடங்கின எனினும் ஒவ்வொரு பாடலும் பதின்மடங்கு பொலியும் வண்ணம் பதிப்பாசிரியர் உரைவிளக்கம் இயற்றியுள்ளார்.

பதிப்பாசிரியர் தெரிந்தெடுத்திருக்கும் பாடங்களிலேயே கதைத் தொடர்ச்சியை விளங்கச் செய்திருக்கின்றார். இரண்டாம் பாகத்தில் கிட்கிந்தா காண்டம் ஏழு அத்தியாயங்களாகவும், சுந்தரகாண்டம் பன்னிரண்டு அத்தியாயங்களாகவும், மூன்றும் பாகமான யுத்தகாண்டத்தில் இருபத்துநான்கு அத்தியாயங்களாகவும் கதை சொல்லுவதைப் போலவே முன்னுரையும், பாட்டுக்களும், குறிப்புரையும் வந்துள்ளன. இராமன் சுக்ரீவனுடன் நட்புக் கொள்வது முதலாக இராவணன் வதைக்குப்பின் இராம பட்டாபிஷேகம்

வரையிலுள்ள முக்கியமான நிகழ்ச்சிகள் எல்லாம் இந்தக் கோவையில் உள்ளன. காசில் கொற்றத்து இராமன் கதை இது என்பதால் இராமனைப் பற்றிய புகழுரைகள் வரும் பாடல்களையும் தேர்ந்தெடுத்திருக்கின்றார். காவிய பாத்திரங்களின் குண சித்திரங்களை விளங்கச் செய்யும் பாடல்களையும் தந்திருக்கின்றார். இவையன்றி இயற்கை வர்ணனைப் பாடல்களையும், பொருளுக்கேற்ற சொல்லோசைதரும் பாடல்களையும், கவிதை லட்சணம் சொல்லும் பாகங்களையும் இதில் சேர்த்திருக்கிறார். கம்பன் கவிதைத் திறன் முழுதும் விளங்கும் பாடல்களை இவர் திரட்டியுள்ளார் எனினும் மிகையன்றாம்.

இவ்விதம் கலைப் பண்புடனும், விமர்சன நோக்குடனும் பதிப்பாசிரியர் தெரிந்தெடுத்திருக்கும் பாடல்களைப் பாராட்டி எழுதியிருக்கும் உரை நயம் தான் நம் மனதைக் கவர்கின்றது. சொல்லும் பொருளுக்கேற்ற ஓசை நயமும், பாத்திரங்களின் குணத்திற்கேற்ற உரை நயமும் கம்பராமாயணத்தில் எங்கெங்கும் காணலாகும் என்பதை இவர் பல உதாரணங்களுடன் எடுத்துச் சொல்லுகின்றார். பாடல்களின் பொருளை விளக்குவதில் இவர் கொண்டுள்ள முறை சால இனிதாயுள்ளது. தொகை, வகை, விரி என்னும் இலக்ஷணங்கள் இங்குச் செறிந்துள்ளன. அனுமன் விசுவரூபம் எடுத்தது போலவே, கம்பன் கவிதையின் பொருளும் சிறிது சிறிதாக, படிப்படியாக மேலோங்கியும் சொல்லுக்குச் சொல்லும், பாடலுக்குப் பாடலும் உணர்வு மிகுவதால் உச்ச நிலையை அடைகின்றது. சீதையின் துக்கம், விபீஷணன் புலம்பல் என்னும் பகுதிகளை உதாரணமாக இவர் காட்டியுள்ளார். பொருள்களைக் காட்சிப் படுத்துவதிலும், கம்பன் இந்த முறையைத் தழுவியிருப்பதும் உய்த்துணரற் பாலது எனப் பதிப்பாசிரிய பாராட்டுகின்றார். சேய்மையிலிருந்து அண்மையில் வருபவர் தோற்றம் பெரிதாகி வளர்ந்து வருவது அப்பொழுது காண்பவர் மனத்தில் எழும் எண்ண அலைகளுடன் கம்பன் பாட்டில் படம் எடுக்கப்பட்டு உள்ளது. அனுமனும் விபிஷணனும் முதன்முதலாக இராமனைக் காணும் வர்ணனைகளில் இந்த அழகு பொலிவதைப் பதிப்பாசிரியர் தெளிவு படுத்து கின்றார். உணர்ச்சி ஊற்றினையும், சிந்தனைப் போக்கினையும் இவர் அவதானிப் பது மெச்சத்தகுந்தது. இஃதன்றி, மறைந்தும், குறிப்பாகவும் உள்ள பொருளை இவர் விளங்கச் செய்வதை மாருதி இராமனிடம் சீதை இலங்கையில் இருந்த தோற்றத்தைச் சொல்லும் பாடல்களில் கண்டு மகிழ்கின்றோம். சொல்லாமலே உணரும் பெருமை மாருதிக்கும் அவன் அண்ணலார் இராம னுக்கும்தான் உண்டு என்பதையும் இவர் எடுத்துக் காட்டுகின்றார். இந்தக் கோவையைப் படிக்கும்போது இத்தனைச் சுவையுடன் பாடின கம்பனைப் புகழ்வதா, அன்றி இச்சுவையினை யூட்டும் திரு. சுந்தரராஜனைப் புகழ்வதா எனத் திகைக்கின்றோம்! கம்பரின் புகழ் குன்றின் மேலிட்ட விளக்கா யிருக்கின்றது. அந்த விளக்கு என்றும் அவியாதபடி, கைவிளக்கேற்றி, கம்பர் கவிதைக்கோவையைத் தந்த இவரையே நாம் போற்றுவோம். ஒவ்வொரு வரும் இந்த விளக்கத்தைக் கைக்கொண்டு கம்பன் உள்ளத்தைக் கண்டு மகிழ்ந்திருப்போம்.

ஞானசம்பந்தம்:—

கல்வியிற் பெரிய கம்பரின் கவிதா ரஸத்தைச் சுவைத்துப் பருகிய ஆசிரியர், கல்லூரி மாணவர்களையும் சுவைக்கச் செய்யவேண்டியே இந்நூலைத் தந்துள்ளார் என்று நூலுக்கு முன்னுரை எழுதிய திரு. சு. நடேச பிள்ளை (B. A. B. L. F. R. E. S.) அவர்கள் குறித்துள்ளார். ஒவ்வொரு படலத்திலும் ஆசிரியர் தாம் பொறுக்கிக்கொண்ட பாடல்கட்கு ஏற்பத் தனித்தனி தலைப்புகள் தந்துள்ளார். அடுத்து அப்பாடல்களிற் கூறப்படுகின்ற பிண்டப் பொருளை எளிய இனிய தமிழ் நடையில் எழுதியுள்ளார். இக்குறிப்பு பாடலின் ரஸத்தை அனுபவிக்கத் தூண்டுகிறது. பிறகு பாடல்கள் மாணவர்கள் படித்தற்கேற்ற முறையில் வேண்டிய அளவு இலக்கணத்திற்கும் இசைக்கும் மாறுபடாத வகையில் பிரித்துப் போடப்பட்டுள்ளது. அரும்பதக் குறிப்பில் அநேக விஷயங்கள் தரப்பட்டுள்ளன. சிற்சில இடங்களில் நயப் பொருளும் உவமை விளக்கமும் குறிக்கப்பட்டுள்ளன. இக்குறிப்புப் பகுதி மிக முக்கியமான பகுதியாயிருந்து படிப்போருக்கு ஊக்கமளிக்கிறது. இவ்வாறு எல்லா வகையிலும் சிறந்து விளங்கும் 'இக் கோவை நூல் மக்கள் பாராட்டுக்குரியதாயிருக்கின்றது. தமிழ் படித்த மக்கள் ஒவ்வொருவர் கையிலும் இந்நூல் இருக்கவேண்டியது மிகமிக அவசியம். பொதுவாகச் சொன்னால் கம்பரது அமுதக் கடலைக் கடைந்து எடுக்கப்பெற்ற அமுதம் இது என்னலாம்.

தினகரன்:—

கம்பராமாயணம் முழுவதையும் படித்து இன்புறுதற்கேற்ற நேரமும், சந்தர்ப்பமும் இக்காலத்து மாணவர்களுக்குக் கிடைப்பதரிது. எனவே பாடசாலை மாணவர்களும் கம்பர் கவிரசம் பருக விழைவோரும் ஆர்வத்துடன் படித்து இன்புறத்தக்க முக்கிய பகுதிகளைத் தெரிவு செய்து ஒரு கோவை நூலாகத் திரு. சுந்தரராஜன் வெளியிட்டமை ஒரு சிறந்த தமிழ்ப் பணியாகும்.

தெரிந்தெடுத்த செய்யுட்கள், அத்தியாவசியமான அரும்பத விளக்கங்கள், கதைத் தொடர்பை விளக்கச் செய்யுட் பகுதி ஒவ்வொன்றின் முன்னர் எழுதப்பட்ட ஆரம்பக் குறிப்புகள், கவிநயங்கள் என்னும் இவற்றை ஒரே நூலில் அமைத்துக் காட்டிய சிறப்பு திரு. சுந்தரராஜன் அவர்களுக்கே உரியதாகும். இவருடைய நன்முயற்சியைப் பாராட்டுகின்றோம். திரு. சுந்தரராஜன் கம்பராமாயணத்தைப் பன்முறைத் துருவித் துருவி யாராய்ந்து இன்பந் துய்த்தவர் என்பதற்கு இக் கோவை நூலே சான்றுபகர்கின்றது. இவர் செய்யுளை நுகரும் நுட்பத் திறனும், ஆராய்ச்சி வன்மையும் இக் கோவையில் நன்கு புலனாகின்றன. மாணவர்கட்குப் பொதுவாக ஏற்படும் இன்னல்களைக் களையும் வகையில் அரும்பதவுரை எழுதியிருப்பதை நோக்குமிடத்து மாணவர்கட்குப் பாடஞ் சொல்லுதலில் இவ்வறிஞர்க்கு நீண்டகால அனுபவம் உண்டென்பது வெள்ளிடைமலை. திரு. சுந்தரராஜன் எழுதிய நய நுட்பங்களைக்

கருத்தூன்றிக் கற்கும் மாணவர்கள் ஏனைய காவியங்களைக் கற்குமிடத்துக் குறிச்சி புக்க மான்போல் இடர்ப்படாது தாமாகவே நயங்காணும் ஆற்றலைப் பெறுவர் என்பதற்கையமில்லை.

இக் கோவை சிறப்பாக உயர்தரக் கல்லூரி மாணவர்களுக்கும் பொதுவாகக் கம்பன் கவிச்சுவை நுகரவிரும்பும் தமிழர்களுக்கும் பெரிதும் பயன்படும். உயர்தரப் பரீட்சைகளுக்குப் பாட புத்தகமாக வைத்தற்கேற்றது. பல சிறப்புக்களும் ஒருங்கமையப்பெற்ற இக் கோவையை வெளியிட்ட ஆசிரியர் அவர்களுக்குத் தமிழ் மக்கள் போதிய ஆதரவு அளிப்பார்களாக. சிறந்த பொருள் பொதிந்த இந் நூலினை அழகுற அச்சிட்டுதவிய கும்பகோணம் சாரதாவிலாச அச்சகத்தாரும் பாராட்டுக்குரியவராகின்றனர்

செந்தமிழ்:—

## முதலாம் பாகம்.

புலத்துறை முற்றிய சான்றோருள் கம்பர் முன் எண்ணத்தக்கவர். அவர் இயற்றிய இராமாவதாரமோ இலக்கியநயமனைத்தும் ஒருங்கமைந்த பாரகாவியமாகும். அஃது இயற்றமிழ் நூலாக மட்டும் இல்லை. தன்கட்பயின்ற பல்வேறு வகையான சந்தவிருத்தங்களால் இசைத்தமிழ் நூலாகவும், கதாபாத்திரங்களின் உரையாடலால் நாடகத் தமிழ் நூலாகவும் விளங்குகிறது. அன்றியும் நாடு, நகர், அரசு, அமைச்சு, போர், ஒழுக்கம், உலகநடை, உயர்ந்தோரியல், மாதர், ஆடவர் தருமம் முதலியவற்றைப் பேசுமாற்றால் இலக்கண நூலுமாகும். இதன் கவிச்சுவையில் ஈடுபடாத தமிழ் மக்கள் இல்லை. கன்னற் கட்டியுள் ஒவ்வொரு துண்டும் ஒத்த சுவையுடையவாயினும் அவற்றைச் சுவைப்போருடைய உடற் கூறும் நாவியல்பும் முதலியவற்றால் அவற்றுள் சுவை வேறுபாடு காணப்படல் போல், இந்நூலுள் எல்லாப் பாடல்களும் ஒரு நிகரான சுவையுடையவாயினும், அவற்றைப் பயில்வாரும் ஆராய்வாருமாகிய மக்களின் உள்ளம், அறிவு முதயவற்றுக்கேற்ப அவற்றுள் சுவை வேறுபாடு காணப்படுவதும் இயல்பு. அச்சுவையுணர்வுடையோர் இராமாவதார நூலுள் தாந்தாம் மிக்க சுவையுடையனவாகக் கண்ட கவிகளைத் தொகுத்து விளக்கவுரைகளுடன் அச்சிட்டு வெளியிடுவாராயினர். இம்முறை தழுவியவற்றுள் நம் செந்தமிழில் வெளிவந்து முற்றிய கம்பராமாயண இன்கவித் திரட்டும் இக் கம்பர் கவிதைக் கோவையும் சிறந்தனவாகும்.

இக் கவிதைக் கோவையின் முதற் பாகத்தைக் கம்பர் இயற்றிய இராமாவதார நூலுள் பால—அயோத்தியா—ஆரணிய—காண்டங்களில் ஆசிரியர் சுந்தரராஜன் அவர்கள் தாம் இனியவாகக் கண்ட கவிகளைப் பல தலைப்பின் கீழ்ப் பல பாடங்களாகத் தொகுத்து, அவற்றை மாணவர்கள் எளிதிற் படித்துச் சுவையுணர்ச்சியால் மகிழும் வண்ணம் ஒவ்வொரு பாடத்துக்கும் முன்னுரையும் ஒவ்வொரு பாடலுக்கும் குறிப்புரையும் வரைந்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

கம்பர் கவிப்பகுதிகளையிடைமடுத்தெழுதப்பட்ட முன்னுரையுள் பால காண்டப் பாடங்களுக்குரியவை தனிச்சிறப்புடையன.....இது மாணுக்கருக்கும் பிறருக்கும் பெரிதும் பயன் விளைக்குமென்பதில் ஐயமில்லை. இதனைத் தொகுத்து உரைகளுடன் அச்சிட்டு வெளியிட்ட ஆசிரியர் பாராட்டற்குரியர். அவர் இரண்டாம் பாகத்தையும் சீரிய முறையில் வெளியிடற்கு இறைவன் அருள் புரிக. இக் கோவை தமிழ் மக்களால் பெரிதும் ஆதரிக்கப்படும் என்று நம்புகிறோம்.

## இரண்டாம் மூன்ரும் பாகங்கள்.

இராமாவதாரகாவியம், இலக்கண இலக்கியச் சொற்பொருள் வளம் நிரம்பிய ஓர் இன்பக் கடல். அதன் சுவைநுகர்ச்சி எல்லோர்க்கும் எளிதிற் கைகூடுவதன்று. அதனுல், தமிழ்க்கல்வி வளர்ச்சியடைந்துவரும் இக்காலத்தி லும் கூட, அதனை அணுகமாட்டாமல் அகலநிற்பார் அநேகர் உளர். அவர் களிற் பெரும்பாலோரும் அவ்வின்பத்தைச் சிறிதளவாவது நுகர்தல் நன்று என்பது ஒரு சிறந்த நோக்கமாகும். இந் நோக்கத்துடன் இக் கோவையின் ஆசிரியர் இயன்றவளவும் முயன்றிருக்கின்ருர்.

எல்லாம் இன்பமயமான பாடல்களில் சிலவற்றைத் தேர்ந்தெடுக்கும் சிரமத்தோடு, அவற்றைப் பிழையறப் பரிசோதித்து அழகுற அச்சிட்டு' தக்கோர் நன்மதிப்பும் பெறுமாறு பலரிடைப் பரவச்செய்தல் எவ்வளவு அரியகாரிய மென்பது, அவ்வகையில் வருந்தியுழைத்தவர்களே அறியவல்ல வர்கள். இம் முயற்சியில் இவ்ஆசிரியரவர்கள் நற்பேறு படைத்தவர் என்றே சொல்லலாம்.

இக் கோவையின் முதற்பாகம் முன்னர் வெளிவந்தபோது, அறிஞர் களின் பாராட்டு மிகவும் ஆக்கம் அளித்தது. அதனுல் இப்பொழுது இரண்டு மூன்றும் பாகங்கள் வெளிவந்துள்ளன. இரண்டாம்பாகம் இருநூறுபாடல் களும், மூன்ரும்பாகம் நானூறுபாடல்களும் கொண்டு விளங்குகின்றன. இவற்றிலும் முன்போலவே ஆரம்பக்குறிப்புகளும் அருஞ்சொல் விளக்கங் களும் அழகாக எழுதப்பட்டு விளங்குகின்றன. மாணவர்களேயன்றி ஏனைத் தமிழ்மக்களும் இதற்குப் பேரளவான ஆதரவளிக்க வேண்டும்.

ஈழகேசரி:—

தமிழ்மக்கள் சிரமேலேந்திக் களிகூர வேண்டியன கம்பன் கவிகள். பல நூற்ருண்டுகளுக்கொருகால் உலகிடைத் தோற்றமளிக்கும் உத்தம கவிகள் வரிசையைச் சேர்ந்த அதி உத்தம கவி கம்பன். அவனருளிய இராமா யணத்தைப் படிக்கவேண்டியது தமிழ்மக்கள் கடன் ..............................

.........பாரிய காப்பியமாகிய இராமாயணத்தை அதன் சுவை குன்றாது மிக அவசியமான பாடல்களை மாத்திரம் தொடர்ந்து கற்றல் மூலமாகக் காவியரசனைக்கு வழி செய்யும் பெருந் தமிழ்த் திருத்தொண்டில் ஈடுபட்டிருப்பவர்களில் ஒருவர் சுன்னாகம் இராமநாதன் கல்லூரி ஆசிரியர் அ. சே. சுந்தரராஜன் பி. ஏ. அவர்கள்.

இக்கால நிலைக்கேற்ப இளைஞர்கள் சுருங்கிய நேரத்தில் விரிந்த காவியத்தின் பெரும்பயனை எய்தச் செய்வது அவர் அச்சிட்டுள்ள கம்பர் கவிதைக் கோவை. பாலின் முழுச்சாரம் வெண்ணெயில் அடங்கிக் கிடப்பதுபோலக் கம்பர் கவிதைப் பரப்பைத் தன்னுளடக்கித் தருவது இந்த நூல். பரந்த கம்பராமாயணம் ஆறு காண்டங்களைச் சுருங்கிய மூன்று சிறு நூல் வடிவில் தந்திருக்கிறார் சுந்தரராஜன். படலங்களைக்கூடச் சுருக்கிச் சுவை நிறை கம்பன் பாடல்களைத் திரட்டி ஏற்ற தலையங்கங்கள் கொடுத்துப் பொருத்தம் மிக்க முறையில் அவ்வவற்றிற்குத் தோற்றுவாயும் அமைக்கிறார் இந்த ஆசிரியர். தலையங்கங்களுக் கேற்பக் கதைத் தொடர்பினை மனதைக் கவரக்கூடிய வகையிற் கம்பன் சொற்றொடர்களால் தரும் சுந்தரராஜன் நமது சிந்தனையைச் சுடர்விடச் செய்யும் உத்திகளையும் கையாளுகிறார். வெறுங் கதைத் தொடர்பினைக் காட்டாது கதையோடு விமர்சனமுறையையுங் கலந்து கலந்து சுவைக்கச் செய்து பாடல்களுக்கு நம்மை வழிப்படுத்துகின்றார். கம்பர் கவிதைக் கோவை இரண்டாம் பாகத்தில் முப்பத்தாறும் பக்கங்களில் இதனை நாம் கண்டனுபவிக்கலாம்............

ஒரு பொருளை வெவ்வேறிடங்களிற் சந்தர்ப்பத்திற்கும் கதைப் போக்கிற்கும் ஏற்ற வகையில் முக்கியமான சாரங்குலையாது பல்வேறு நயங்களுந் தோன்றுமாறு விகற்பித்துக் கூறும் கம்பன் கவித்திறனை இவ்வாசிரியர் இரண்டாம்பாகம் 61, 62ஆம், பக்கங்களிற் குறிப்பாகக் காட்டும் போது இந் நூலாசிரியர் திறனையும் நாம் கண்டின்புறுகிறோம்.

பாடங்களில் வரும் கடும்பதங்களுக்கு மாத்திரம் ஆசிரியர் உரைதருமளவில் நின்று விடாது நயத்தற் பகுதிகளையும் சுருக்கமாகக் காட்டி வாசிப்போரின் சிந்தனையையும் இவ் வாசிரியர் தொழிற்படச் செய்வதற்கு உதாரணமாக இந் நூலில் யுத்தகாண்டப்பகுதியின் 24ஆம் பாடலின் குறிப்புரை விளங்குகின்றது. தாமே முழுவதாக வியாக்கியானஞ் செய்து கேட்போரை முழு மரப்பாவைகளாக்காது நயக்கும் வழியை மாத்திரம் காட்டி, நயக்கும் தொழிலில் நம்மையே ஈடுபடச் செய்வது அவர்தம் ஆசிரியத்திறனுக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றது. "கோவியல் தருமம் உங்கள் குலத்துதித் தோர்கட் கெல்லாம்...............திகைத்தனை போலும் செய்கை" (பக்கம்-42.) என்ற பாடலின் உரைக் குறிப்பு ஆழ்ந்த சிந்தனையின் பயனாயமைகின்றது.

நல்ல நேரத்தில் நல்ல முறையிலே தொண்டு செய்யும் இவ்வாசிரியருக்கு நம்மவர் செய்யக்கூடிய உதவி கம்பர் கவிதைக் கோவையை நாம் வாங்கிப் படிப்பதோடமையாது கலாசாலைகளிலும் நூல் நிலையங்களிலும் இதற்கு மதிப்பான இடங்கொடுக்கச் செய்தலிலும் தங்கியுள்ளது. ஆழ்வார் பாடல்களின் அருமையில் மனம் பறிகொடுத்த இவ்வாசிரியரது நூல் கம்பன் கவிகளில் நம் நாட்டினளுர் மனம் பறிகொடுக்கத் தூண்டுவதாகுக.

இலங்கை வித்தியா போதினி:—

இதனை ஆக்கிய திரு. சுந்தரராஜன் மேல் வகுப்பு மாணவர்களுக்குப் பல்லாண்டுகளாகத் தமிழ் கற்பித்து வருகிறுராதலின் மாணவர்களின் மனவியல்பை நன்கறிந்து அவர்களின் உளத்தை இழுத்து இன்புறுத்தத் தக்க செய்யுள்களையே தெரிந்தெடுத்துக் கோவைப் படுத்தியுளர். கதைப்போக்கும் இடையிடு படாதிருக்கவேண்டுமெனுங் கருத்தினுல் ஒவ்வொரு செய்யுட் பகுதியின் தொடக்கத்திலும் சிறந்த குறிப்புரைகளைத் தந்துளர். பாட்டுகளுக்கு அவர் எழுதிய குறிப்புரை அவற்றைப் படிப்பிப்பவர்களுக்கு மிகுந்த உதவியாயிருக்கும்.

............

பொதுவாகக் கம்பர் கவி அமுதத்தைப் பருக விரும்புவோருக்கும் சிறப்பாக மேல் வகுப்பு மாணவர்களுக்கும் இந்நூல் பயன்படக் கூடியது.

இந்து சாதனம்:—

இது கல்லூரி மாணவர்க்குப் பெரிதும் பயன்படக்கூடிய முறையில் எழுதப்பெற்றுள்ளது; இதனைப் பயிலுவோர் காலகதியில் கம்பராமாயணத்தைப் படிக்க ஆர்வங்கொள்வரெனலாம்.........

வீரகேசரி:—

மகாகவி கம்பன் படிக்கப் படிக்கத் திகட்டாத தெள்ளமுதத் தமிழிலே கருத்தாழமும், ஓசை நயமும், கற்பனையின் எழிலும், நாடகச் சுவையும், குண ஓவியச் சிறப்பும் விளங்க இராமாயணத்தைப் பெருங்காப்பியமாக இயற்றினர். .........'திகட்டாத தெள்ளமுது' 'கவி அமுதம்' என்றெல்லாம் அறிஞர்களால் புகழப்பட்டு வரும் கம்பராமாயணக் கவிதைகளின் கோவையே இந்நூல்...... ஒவ்வொரு காண்டத்திற்குரிய குறிப்புரைகளையும், அரும் பதவுரைகளையும் ஆசிரியர் நன்கு எடுத்து எழுதியுள்ளார். கம்ப ராமாயணத்தை முழுவதும் படிக்க அவகாசமில்லாதவர்களுக்கு இக்கவிதைக் கோவை பெரிதும் உதவும்.

ஆனந்த விகடன் :—

காலத்தை வென்ற பெரு நூல்களைப் பொது மக்கள் இலகுவில் பெற்று எளிதில் புரிந்துகொள்ளுமாறு செய்யப்படும் முயற்சிகளெல்லாம் ஆதரிக்கத் தக்கன. இத்தகைய ஒருவகை முயற்சியின் பயனாக வெளிவந்திருக்கின்ற...... 'கம்பர் கவிதைக் கோவை'யில் சிறந்த செய்யுட் பகுதிகள் என்று பதிப்பாசிரியர் கருதியவை கதைப் போக்குக்கு இசைந்தவாறு கோக்கப் பெற்றுள்ளன குறிப்புரையும் உண்டு......

தினமணிக் கதிர் :—

கம்பராமாயணத்திலிருந்து மாணவர்கள்மட்டுமல்லாமல் ஏனையோரும் விரும்பிப் படிக்கும்படியாக அந்தந்தப் பகுதிகளிலிருந்து சிறந்த செய்யுள்களை எடுத்து அவைகளுக்குச் சுருக்கிய முறையில் பதவுரையும் இந்தப் புத்தகங்களில் அளிக்கப்பட்டிருகிறது.

கல்கி :—

## முதலாம் பாகம்.

எத்தனையோ பாக்கியங்களைப் பெறலாம். ஆனால் கம்பன் கவியமுதை அனுபவிக்கும் பாக்கியம் பெறவில்லை என்றால் அத்தனை பாக்கியங்களையும் பெற்றுத்தான் என்ன பயன்?

இப்படி ஏங்குபவர்களுக்கு இப்போது நல்ல காலம் பிறந்திருக்கின்றது, கம்பன் கவிதைகள் பல பதிப்புக்களாக வெளிவருகின்றன. சுன்னாகம். ராமநாதன் கல்லூரி ஆசிரியர் அ. சே. சுந்தரராஜன், பி. ஏ. கம்பராமாயணத்தில் முதல் மூன்று காண்டங்களிலுள்ள அருமையான கவிகளைத் திரட்டித் தக்க குறிப்புரையுடன் வெளியிட்டிருக்கிறார்கள்.

## (இரண்டாம் மூன்றும் பாகங்கள்.)

கம்பர் கவியில் ஈடுபடாதவரே இல்லை என்று கூறலாம். தமிழர்களுக்குக் கம்பராமாயணம் ஒரு கவியமுதம். அந்தக் கவியமுதை அள்ளி அள்ளிச் சுவைத்த யாழ்ப்பாணம் ஆசிரியர் திரு. அ. சே. சுந்தரராஜன் அவர்கள், அனைவருக்கும் அவ்வமுதைப் புகட்ட எண்ணி இந்த நூலைப் பதிப்பித்திருக்கிறார். கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம் முதலியவற்றிலுள்ள கவிதைகளில் சிலவற்றைத் திரட்டி, கதைப் போக்குடன் குறிப்புரையும் சேர்த்து வெளியிட்டிருக்கிறார்; கம்பரின் கவிதைச் செஞ்சொற்களை ஆங்காங்கு உரைநடையில் கையாண்டு சுவையுறச் செய்திருக்கிறார்.

# கம்பர் கவிதைக் கோவை

## அபிப்பிராயங்கள்.

**The Hindu:—**

Part I.

The book under review contains 500 verses selected from the first three Kandams of Kambaramayanam with a foreward from the pen of principal S. Natesa Pillai of Parameshwara College, Jaffna. It is intended to serve as a text-book in educational institutions. The selection clearly shows that Mr. Sundararajan is a *RASIKA* who dives deep into the different emotional instincts of human beings, who observes Nature in her varied aspects and who has a fair sense of proportion. He gives a brief summary, critical and appreciative, of the contents of each section before the verses are introduced to the reader. Almost every verse has a short note under it, which explains difficult expressions, notes the figures of speech and sometimes gives grammatical notes.

Parts II & III.

In the past there have been several attempts at introducing the great masterpiece of Kamban by selections in entirety or in parts. The late Sri. V. P. Subramanya Mudaliar's Kambaramayana Inkavi Tirattu may be cited as an example. The present attempt by Sri. A. S. Sundararajan is valuable in more ways than one as it incorporates the latest readings of the text as revealed by recent publications of the great work and has followed a rational way of splitting the chapters under suitable heads and selecting only the salient and most appealing stanzas from the original. The two parts under review, which comprise the last three Kandams of the Ramayana, have only 727 stanzas selected from a total of 6,745 stanzas. New chapter headings and sub-headings are given and the words in the stanzas are so split as to be understood even by ordinary readers. Short and helpful introductions preface each chapter and intelligent notes are written to stanzas. Kamban's art and his great mastery of vocabulary come for discussion and elucidation in several places, thus making the edition highly interesting and useful.

## The Indian Express:—

### Parts II & III.

V. P. Subramanya Mudaliar and P. C. Acharya have been the pioneers in interpreting Kamban to the Tamilian public. The editions under review are improvements on them in that they have eschewed verbose descriptions and needless digressions. The previous volume was noticed by me in the columns of this popular daily and it must be said that in the preceding one as well as the present ones, the anthologist has shown considerable discretion in the choice of stanzas. The succinct summary he gives of events in the Kavya enables the reader to keep in view the trend of the narrative while the choice selection helps him to realise the mighty genius of Kamban, his consummate knowledge of men and things, his unique power of description and his unrivalled portrayal of nature both human and outside Meanings of difficult words have been given wherever necessary just below the stanzas and the interpretation in many places is very good and really worthy of the learned author. The comparisons he draws between the poet's description of the cities of Ayodhya and Lanka and similar ones are sure to arrest the attention of the reader and goad him on to study the epic with an intelligent appreciation. Similarity of description and identity thoughts and emotions in the course of the narrative have been skilfully pointed out and the author's vast reading has enabled him to quote illustrative lines from various standard works in Tamil which considerably enhance the value of the work Hard sandhis or combinations of words have been split up without marring the metrical beauty and sound of the stanzas and grammatical notes have been added wherever necessary.

These volumes are sure to attract the attention of the young Tamil scholar. The author must be congratulated not only for his discriminatory selection but also for the lively interpretations he has given for many divine stanzas in that immortal epic for all time.

**The Ceylon Teacher:—**

...... Part I.

Without an acquaintance with Kamban, no scholar in Tamil can be said to have appreciated the essence of Tamil poetic genius.

......It is indeed a great service to present selections of the very best from this unique work. It may serve to stimulate a desire to drink deeper from the poetic spring.

In this 'Kambar Kavithaik Kovai' succeeds.

......

This edition which is excellantly annotated will serve as a useful introduction to Tamil scholarship.

Parts II & III.

The author has made the selections from the teacher and the class room points of view. The short and crisp introductory notes at the beginning of each section form an indispensable adjunct in retaining the sequence and the continuity of narrtion.................

The rhapsody with which he extols the great qualities of the hero of the poem, the beautiful contrasts he makes when drawing character sketches and irresistable quotations from the Alwars in expatiating a certain context in the text—all these bear testimony to the author's deep study of Kambar along with the works of the Vaishnavite Alwars.

**A. M. K. Cumaraswamy, Esq., B. Sc., Registrar, University of Ceylon:—**

The selection has been well done and in such wise as to eliminate needless disgressions and irrelevancies and afford beginners the chance of true enjoyment of a first rate Epic Poem....... ..... .. .. ..... ... .. .................... ......
A particularly happy feature is the style of the annotation adopted. Only the difficult words and phrases are explained and these are handled concisely and clearly.

**பேராசிரியர் ஸ்ரீ அ. சீநிவாசராகவன் அவர்கள்:—**

கம்பருடைய விசாலமான காவியம் முழுவதையும் பயில இயலாதவர்க்குத் தங்கள் 'கவிதைக் கோவை' சிறந்த முறையில் உதவும் என்பது என் கருத்து. பாடல்களுக்குத் தந்துள்ள உரைக் குறிப்பும் ஆங்காங்கே கதைத் தொடர்ச்சியைக் காட்டி, பாட்டின் நயங்களை உணர்த்தும் விமர்சனக் குறிப்பும் நன்ருக அமைந்திருக்கின்றன. நல்ல முயற்சி. பாராட்டுகிறேன்.

மகாமகோபாத்தியாய பண்டிதராஜ ஸ்ரீ K. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், சென்னை ராஜ்ய வடமொழி ஆஸ்தான கவி அவர்கள்:—

தாங்கள்............அன்பு மிகுதியால் எனக்கு அனுப்பிய 'கம்பர் கவிதைக் கோவை' என்ற அரும்பெரும் நூல் கிடைக்கப்பெற்று மிகக் களிப்பெய்தினேன்.........நூலை அங்குமிங்கும் புரட்டிப் பார்த்தேன். மாணவர்களுக்கு மட்டுமல்ல, என் போன்றவர்களுக்கும் பெரிதும் பயன்படும் எனத் தெளிந்தேன்.

புலவர்மணி ஸ்ரீ க. சு. நவநீதகிருஷ்ணபாரதியார் அவர்கள்:—

'......தமிழ் மொழியில் சில காவியங்களே உள்ளன. அவற்றுள் இராமாயனம் மிக்க சிறப்புடையது; வான்போற் பரந்தது; பசிபிக் சமுத்திரம் போல் ஆழமானது; திருப்பாற்கடல்போல் அமுதமுடையது; அதனால் அது யாவராலும் கடையப்படவேண்டியதுமாகும். சான்றோர்கள் பலர் அதனைக் கடைந்திருக்கிறார்கள். அவர்களுள் முதலில் வைத்தெண்ணப்படவேண்டியவர் அ. சே. சுந்தரராஜன் B. A. அவர்கள்.

.........பரப்பில் குறைந்த கருத்தில் நிறைந்த இராமாயணந்தான் இந்தக் 'கம்பர் கவிதைக் கோவை'.

இந்நூலில் இராமாயணப் படலங்களின் உயிர்போற் சிறந்த—தெரிவு செய்யப்பட்ட பாடல்களும், அவற்றின் குறிப்புரைகளும், ஒவ்வொரு பாடத் தொடக்கத்திலும் ஆரம்பக் குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. இவ்வாரம்பக் குறிப்புக்கள் யாவற்றையும் சேர்த்து ஒரு அருமந்த நூலாகவும் ஆக்கிக் கொள்ளலாம். ........................................ இந்த நூல் மாணவர்கள் சிந்தனையைத் தூண்டிவிடுகிற ஒரு சிந்தனைத் தூண்டுகோலாகும் அதனால் அது நன்கு வரவேற்கப்படவேண்டியதொன்றாகும்.

பேராசிரியர் ராவ்சாகிப் ஸ்ரீமத் மு. ராகவையங்கார் அவர்கள்:—

தங்கள் கோவை நூலை ஆங்காங்கே நான் பார்த்துவந்தபோது பாடல்கள் தேர்ந்தெடுத்துள்ள முறையும் உரைக் குறிப்புக்களும் நன்கமைந்திருத்தல் கண்டு மகிழ்ந்தேன். கம்பராமாயணத்தின் ஸாரத்தையும் பாடல் நயங்களையும் தெரிந்துகொள்ள விரும்புவோர்க்குத் தங்கள் தொகுப்பும் உரையும் பெரிதும் பயன்படக்கூடியன என்பதில் ஐயமில்லை.

கவிமணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்:—

கம்பராமாயணம் உலக மகா காவியங்களுள் ஒன்று.........கம்பராமாயணத்தை எல்லோருக்கும் பயன்படச் செய்யும் வழி சுவை குன்றாமல் அதைச் சுருக்கிக் கொடுப்பதேயாகும்..........

திரு. சுந்தரராஜன் அவர்களின் கம்பர் கவிதைக் கோவை என்ற நூலை நான் ஆவலோடு படித்துப் பார்த்தேன். இன்கவித் தொடைகள், தெள்ளிய உரைவிளக்கம் இவை நன்றாக அமைந்திருக்கின்றன. சீர்கள் பதங்களைப் பிரித்துப் பதிப்பித்திருப்பது நல்ல முறையாகும். ஆசிரியருடைய கல்வி மாட்சி அவர் காட்டும் பொருளாழத்தால் விளக்கமாகின்றது. இது ஓர் நல்ல முயற்சி; சிறந்த தொண்டுங்கூட.

ஸ்ரீமத் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் அவர்கள்:—

திருவாளர் அ. சே. சுந்தரராஜன் பி. ஏ. என்பவர் சுன்னுகம் இராமநாதன் கல்லூரியிலும், பரமேசுவரக் கல்லூரியிலும் பல்லாண்டுகளாகத் தமிழாசிரியராய்த் தமிழ்த் தொண்டு பூண்டு மாணவர்களைத் தமிழ்ச் சுவையைத் துய்க்கச் செய்துவருபவர். மாணவர்களே யன்றித் தம்மைப்போலவே தமிழ் மக்களும் அம்மொழியைச் சுவைக்க வேணுமென்ற கருத்தினுல் அன்னுர் கற்றோரிதயத்தைக் களிப்புறச் செய்யும் கம்பர் கவிதைகளில் அருஞ் செய்யுட்களைத் தேர்ந்தெடுத்து, கம்பர் கவிதைக் கோவை என்று பெயர் சூட்டி, அவற்றின் பொருளையும் நுண்மையுற விளக்கி வெளியிடும் பணியை மேற்கொண்டுள்ளார்.

...............

இவ் வெளியிடு சிறிது தமிழுணர்ந்தோரையும் ஆசிரியருதவியின்றியே கற்க வழிகாட்டிக் கம்பர் கவிகளில் அவர்களைத் திளைக்கச் செய்யத் தூண்டுகோலாக இருக்குமென்று கருதுகிறேன்.

பிரமஸ்ரீ:—பி. ஸ்ரீநிவாஸய்யர் அவர்கள்:—

கல்வியிற் பெரிய கம்பர் எம்மனோர்க்குக் கேடில் விழுச் செல்வமாக ஆக்கி அளித்துள்ளது இராமாவதாரம் எனப் பெயர் பெற்ற பெருங்காப்பியம். இக் காப்பியக் கடலுள் தம் அறிவுப்புணை துணையாக நீந்தி, இன்பந் துய்ப்பது எல்லோர்க்கும் இயல்வதொன்றன்று.

என் ஆருயிர் நண்பர் திரு. அ. சே. சுந்தரராஜய்யங்கார், B. A., அவர்கள் மெய்வருத்தம் பாராது, பசி நோக்காது, கண் துஞ்சாது, செவ்வியருமையும் பாராது, அவமதிப்புங் கொள்ளாது இராமாவதாரத்துள் கருத்தூன்றிக் கற்றுணர்ந்து, அதனுள் தாம் கண்டின்புற்ற பொருள்களைப் பல பாடங்களாக வகுத்து, ஒவ்வொரு பாடத் தொடக்கத்திலும் அழகிய முன்னுரையையும் அதனைத் தொடர்ந்து பாசுரங்களையும் அப் பாசுரங்களிலே அமைந்துள்ள அரும்பதம், தொடர் முதலியவற்றின் பொருள்களையும் தம் கல்வித் திறன் தோன்ற எழுதி, கம்பர் கவிதைக் கோவை எனப் பெயர் தந்து வெளியிட்டுள்ளார்கள்.

இக் கோவை நூல் சிறப்பாகக் கல்லூரிகளிலும் உயர்தர பாடசாலைகளிலும் பயிலும் மாணவர்களுக்கும், பொதுவாகத் தமிழ்ச் சுவை நுகரும் ஆர்வமுடையவர்களுக்கும், உறுதுணையாய் உதவும் பண்பாடுடையது.

தமிழன்பர்கள் இந் நன்முயற்சியைப் பாராட்டி, ஆசிரியருக்குத் தக்க முறையிலே உதவிபுரிவார்களாக.

பேராசிரியர் ஸ்ரீ எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள், B.A., B.L.,:—

கம்பனின் மகா காவியத்தை முழுவதும் கற்றுணர்வது எளிய காரியமன்று. பலதிறப்பட்ட துணை நூல்களும் அவசியம் என்று கருதுகிறேன். சுருக்கங்களும் பிற திரட்டு நூல்களும் கம்பனது கவித்வ நயத்தை உணர்வதற்குப் பெரிதும் பயன் படுவனவாம்.

காலஞ்சென்ற வ. வே. சு. ஐயர் அவர்கள் பால காண்டத்திற்கு ஒரு சுருக்கம் இயற்றினர். பின்னர், பி. ஸ்ரீ முதலான பலரும் பல காண்டங்களுக்குச் சுருக்கம் இயற்றி அளித்திருக்கிறுர்கள். கம்பராமாயண இன் கவித் திரட்டு நூலும் இங்கே கூறத்தக்கதுவே. தங்கள் நூலும் மேற்குறித்தன போன்று பயன்பட வல்லதேயாகும்.

கம்பர் கவிதைக் கோவையில் முதல் மூன்று காண்டங்களின் சுருக்கமும், செய்யுளின் நயம் தோன்ற எழுதிய உரைக்குறிப்பும், கதையழகினைக் காட்டும் சரிதக் குறிப்பும் காணப்படுகின்றன. தங்களுடைய கம்ப ராமாயணப் பயிற்சியும் ஆராய்ச்சி வன்மையும் இக்கோவையில் நன்கு புலனாகின்றன.

*வித்துவ சிரோமணி, ஸ்ரீ சி. கணேசையர் அவர்கள் :—*

பெருங்காப்பிய இலக்கணமமைந்த நூல்களுள், கம்பரியற்றிய இராமாவதாரம், கற்றோர்க்குச் சுவை பயந்து அவரிதயத்தைக் களிப்பித்து நிற்றலின் மிக மேலானதாகும். கற்றோர்க்கன்றிக் கற்போர்க்கும் அது சுவை பயந்து, அவர்களை மீள மீளத் தன்னைக் கற்று இன்புறுமாறு, ஊக்கப்படுத்துவதுமாகும். அத்தகைய நூலின் பொருளை எவர்க்கும் எளிதல் அறிதல் கூடாது. ஆகலின் அதன் பொருளை ஆசிரியரின் உதவியின்றி அறிந்துகொள்ள வேண்டுமாயின், ஆசிரியரும், வித்துவானுமாகிய ஸ்ரீமாந் சுந்தரராஜ ஐயங்கார் தொகுத்தியற்றிய கம்பர் கவிதைக் கோவையைப் படித்தல் வேண்டும். படித்தால், கம்பர் கவிதையின் பொருளையும், சுவையையும் நன்கு அறிந்துகொள்ளலாம் என்பதை யான் திடமாகச் சொல்லி வற்புறுத்துகிறேன்.

ஐயங்காரவர்கள் கம்பர் கவிதையுள் மிகச் சுவை பயப்பனவற்றையே தெரிந்தெடுத்துத் தொகுத்து அவற்றின் சுவை நயங்களை அறிந்துகொள்ளத் தக்கவிதமாக உரைக் குறிப்புத் தந்து மூன்று பாகமாக அக்கோவையை வெளியிட்டிருக்கிறார்கள். அச்செயல் மிகவும் பாராட்டப்படத்தக்கது. அக்கோவை உயர்தர மாணவர்கள் கம்பர் கவிதையைச் சுவைத்தற்கு ஒரு வழிகாட்டியாகும் என்பதிற் சந்தேகமேயில்லை. அக் கவிதைக்கோவை தன்னைக் கோத்தியற்றிய ஐயங்காரவர்களின் நுண் மதியையும் அவர்கள் கம்பர் கவிதைக்கண் எத்துணைத்தூரஞ் சுவைத்துத் சென்றிருக்கின்றார்கள் என்பதையும் அவர்கள் பல நூற் பயிற்சியையும் நன்கு காட்டுவதாகும். அவர்களுக்கு இறைவன் திருவருள் செய்வானாக.

*பண்டிதமணி. திரு. சி. கணபதிப்பிள்ளை அவர்கள் :—*

ஆசிரியர் திரு. சுந்தரராஜன், B. A, ஆழ்வார்களின் அருளிப்பாடுகளில் ஆழ்ந்தவர்கள்; கம்பரில் திளைத்தவர்கள்; கம்பராமாயண மகா சமுத்திரத்தில் ரஸஞ்சொட்டுகின்ற—ஆயிரத்துக்குச் சிறிது அதிகமான பாடல்களைத் தேடிச் சுவைத்து, ஒரு நல்ல ரஸகலசத்தை இலக்கிய ரஸிகர்களுக்கு வழங்கியிருக்கின்றார்கள். அன்றி, இனிய கதைத் தொடர்புகள், அரும்பத விளக்கங்கள், நய நுட்பங்கள் என்னும் இவைகளை வேண்டுமிடந்தோறும் சுருங்கச்சொல்லல் என்ற அழகில் அமைத்து நுகர்வோனுக்கும் கவிதைக்கும் இடையிலே அநாவசியகமாகத் தம்மை வளர்த்திக்கொள்ளாமல் தமது பழுத்த நீண்டகால ஆசிரிய அநுபவத்தையும் புலஞ் செய்திருக்கிறார்கள். கால விரயத்துக்குப் பெரிதும் அஞ்சுகின்ற இந்தக் காலத்திலே உயர்தர மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் கம்பரை மிக எளிதில் தரிசனம் செய்வதற்கு வாய்ப்பான ஒரு கைக்கண்ணாடி இது.

பண்டிதமணி ஸ்ரீ ஏ. பெரியதம்பிப்பிள்ளை அவர்கள்:—

கம்பராமாயணம் என்னும் தமிழ்ப்பெருங் காப்பியமானது பல்வகைச் சுவையும் நன்கு கனிந்ததோர் நூலாமென்பது யாவருமறிந்ததே. கற்பனை நயமும், மக்கள் வாழ்க்கையும், தெய்வப்பண்பும் ஒருங்கேயமைந்து விளங்கும் இக்காவியம் பெரியதோர் அமிர்த சாகரம் போன்று பரந்து கிடத்தலின், இக்காலத்து ஆரம்ப ஆசிரியர் பலரும், உயர்தரத் தமிழ் மாணவர் பலரும் அதன் விரிவுகொண்டு, முற்ற முடியப் பயிலுதலை யஞ்சி யகலும் நிலையி லுள்ளனர். இதனுல் "நவில்தொறும் நூல்நயம் போலும்" என்னுந் தொடருக்கு இலக்கியமாக அமைந்துள்ள கம்பராமாயணப் பயனை அனுப விக்கும் பேற்றினை இவர்கள் இழந்துபோதலை, உணர்ச்சிக் கண்கொண்டு நோக்கும் தமிழறிஞர் எவரும் இவர்பொருட்டு இரங்குவதன்றி இவர் தம்மை இராமாயணப் பயிற்சியிற் புகுத்தும் வழிகளைக் காண்டற்கும் முயல்வர். தமிழுள்ளம் படைத்த தமிழறிஞர்க்கு இதுவே அழகாவது.

ஆசிரியர் சுந்தரராஜன் அவர்கள் "கம்பர் கவிதைக் கோவை" என்னும் பெயருடன் தொகுத்தமைத்து வெளியிட்டுள்ள நூல்தொகுதிகள் மூன்றும் இத்தகைய அனுதாப முயற்சியின் பரிணமரூபமாகத் தோன்றியவையே யாகும். இவ்வெளியிடுகளின் மூலமாக ஆசிரியர், இராமாயண சரிதத்தைச் சுருங்கிய கால அளவையிற் சுவையும் உணர்ச்சியும் பிறக்கக் கற்றற்கு நல்ல தோர் சந்தர்ப்பத்தை அளித்துள்ளார். இக்கோவை நூலில் இன்சுவைக் கவிகளையே தொகுத்து உதவுதல் வேண்டுமென்பது ஆசிரியர் கருத்தன்று; கதைத்தொடர்ச்சியும் இடையறவு படாதவகையில் தமது கோவைநூல் அமைதல் வேண்டுமென்பது அவர்தம் உள்ளக்கிடக்கையாகும். செய்யுட் கோவையின் ஒவ்வொரு தொடையின் முகப்பிலும் அவ்வத் தொடையின் கதை நிகழ்ச்சியையும், வருணனைப் போக்கையும், செய்யுள் நோக்கையும் ஆசிரியர் நல்ல உரை நடையில் வகுத்துத் தந்திருக்கிறுர். செய்யுள்களுக்கு அவசியம் வேண்டிய விளக்கங்களையும் அடிக் குறிப்புகளாக அமைத்துள்ளார்.

ஆசிரியரது இராமாயணப் பயிற்சியின் தெளிவும், அவர்தாம் மாணவர் மீது கொண்டுள்ள இரக்கமும், மேல்நாட்டு முறையையும் தழுவிப் பாடம் வகுக்கும் ஒழுங்கும் ஒருங்கே அமைந்துள்ள "கம்பர் கவிதைக் கோவை" என்னும் இந்நூல் தொகுதிகள் மூன்றும், ஆரம்ப ஆசிரியர்க்கும் உயர்தரத் தமிழ் மாணவர்க்கும் இனிது பயன்படுமென்பதும் இராமாயணப் பயிற்சி பரம்புதற்கு வழிசெய்யும் என்பதும் எமது அபிப்பிராயம்.

ஸ்ரீமத் பண்டித வ. சு. இராஜ ஐயனுர் அவர்கள் :—

பத்தாம் நூற்றுண்டுக்குப் பின் தமிழ் மொழியில் வந்த செய்யுள் நூல் களில் கம்ப ராமாயணத்துக்கு ஒத்ததும் மிக்கதும் தமிழ்நாட்டில் இல்லை. தமிழிலே உள்ள எல்லாத் தொடர் நிலைச் செய்யுள் நூல்களுள்ளும் 'கம்ப ராமாயணம்' தலையாயது. நீண்ட நாட்களாய்க் கம்பராமாயணத்துக்கு ஒரு

சிறந்த உரை எழுதப்படாமையால் அந்நூலின் விழுப்பம் அறியாத சில புலவர்கள் சங்க நூல்களுக்குக் கம்பராமாயணம் ஒப்பாகாது எனக்கருதி வந்தார்கள். கம்பராமாயணத்தை ஊன்றிப்படித்து, அதனை ஆராய்ந்து பார்த்தால், தொல்காப்பியம் முதலான எல்லாச் சங்க நூல்களின் அமைதியும் அதன் கண் பொதிந்து கிடப்பதனை, நன்கு அறிந்துகொள்ளலாம். கம்பர் என்னும் புலவர் சங்க நூல்களிற் பெரிதும் பயிற்சி பெற்றிருந்தனர் என்பதற்குக் கம்ப ராமாயணம் ஓர் உரை கல்லாய்த் திகழ்கின்றது.

கம்பராமாயணத்தைத் தொகுத்துப் பலர் பல தொகுதிகள் வெளியிட்டார்கள். இவ்வெளியீடுகளில் வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார் அவர்கள் எழுதின 'கம்பராமாயண சாரம்' என்பது ஒன்று; சுன்னாகம் சுந்தரராஜ ஐயங்கார் அவர்கள் தொகுத்த 'கம்பர் கவிதைக்கோவை' என்பது மற்றொன்று. கம்பர் கவிதைக் கோவை என்னும் நூல் ஈழ நாட்டுப் பள்ளிகளில் உயர்தரக் கல்வியயிலும் தமிழ் மாணவர்க்குப் பெரிதும் வாய்ப்பாக இப்போது வெளி வந்துள்ளது. செய்யுட்களைச் சீர் சீராகப் பிரித்து, அவற்றில் வரும் அருஞ்சொற்களுக்குச் சிறந்த உரை எழுதியிருப்பது இந்நூலாசிரியர் பள்ளிக்கூடத்தில் உயர்தர மாணவர்க்குப் பாடஞ் சொல்லுதலில் நிரம்பவும் பழக்கமுள்ளவர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். ஆங்கிலச் செய்யுள் நூல்களுக்கு, மேலை நாட்டுப் புலவர்கள் உரையெழுதும் ஒரு சிறந்த முறை, உரைக் குறிப்பில் தழுவப்பட்டிருப்பதனைக் கண்டு யான் இத்தொகுப்பு நூலைப் பாராட்டுகின்றேன்.

செல்வி. நல்லம்மா சுப்பிரமணியம்
அவர்கள், (B. Sc. Hons.,) M. A.,:—

மாணவர்கள் விரும்பும் முறையில் கம்பர் செய்யுட்களைக் கோவையாகப் பதிப்பிக்க விழைந்த காரியத்தில் நீங்கள் வெற்றிபெற்றுவிட்டீர்கள். குறிப்புக்கள் எழுதப்பட்ட முறை மாணவர்களின் இயல்புக்கு மிகமிகப் பொருத்தமானது......நயங்களைச் செய்யுளிலிருந்து தாமே கண்டறிந்து அனுபவிக்கும் இன்பத்தை மாணவர்களுக்குப் பலவழிகளில் இம்முறை அளிக்கின்றது:........ மாணவர்களின் மனதைக் கவரக்கூடிய சுவையுள்ள பகுதிகளை எடுத்துக் காட்டுவதனால், அவர்கள் செய்யுளைக் குன்றாத ஆர்வத்துடன் படிக்கவேண்டிய நிலைமை ஏற்படுகின்றது. அன்றியும் இவை மாணவர்களுக்கு வேண்டிய அளவில் மாத்திரம் உதவியளிக்கின்றன. இத்தகைய ஒரு முறைபற்றி எழுதப்பட்ட குறிப்புரை தமிழ் இலக்கியம் கற்பதற்கு ஒரு புதிய முறையைக் காட்டுகின்றது. இலக்கியங்களை நயப்பதற்கு மாணவர்களிடம் இயல்பாயமைந்துள்ள சக்தியை வளர்ப்பதோடு எந்த இலக்கிய நூலையும் அனுபவிக்க வேண்டிய முறையையுங் காட்டுகின்றது.

---

# பாயிரம்.

## கடவுள் வணக்கம்.

1 உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே. 1

## அவையடக்கம்.

2 ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ. 2

3 நொய்தின் நொய்யசொல் நூற்கலுற் றேன்எனை
வைத வைவின் மராமரம் ஏழ்துளை
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே. 3

---

1. தாம்—வேறுதுணையின்றித் தாமே மூவராய்நின்று செய்தலாற் பன்மையாற் கூறினர். உளவாக்கல்—படைத்தல். விளையாட்டு—சிரமமின்றி எளிதிற் செய்யுங் காரியம். படைத்தல் முதலிய மூன்றும் எஞ்ஞான்றும் ஒழிவின்றி நடைபெற்ற வண்ணம் நிகழ்தலால் 'நீங்கலா விளையாட்டு' எனப் பட்டது. அம்மூன்றும் ஒரு முறை நிகழ்ந்தபடி மீண்டும் நிகழாமல் புதிது புதிதாய்ப் பல திறப்பட்ட வேறுபாடுகளுடன் காணப்படுதலின் 'அலகிலா விளையாட்டு' எனப்பட்டது. அலகிலா—அளவில்லாத. விளையாட்டுடையார் எவர் அவர் தலைவர்; பரம்பொருள். அப்படிப்பட்டவரையன்றி வேறு புகலிட மில்லை; ஆதலால் அவரே நமக்கு அடைக்கலம்.

2. பூசை—பூனை. நக்குபு—நக்கும் பொருட்டு. காசு—குற்றம். மற்று, அரோ—அசை நிலைகள்.

3. நொய்தின் நொய்ய சொல்—மிக வலிமை குறைந்த சொல்; கருதிய பொருளைப் புலப்படுத்தும் ஆற்றலில்லாத சொல். நூற்கலுற்றேன்—நூல் செய்யலுற்றேன். எனை—இது என்ன பேதைமை! வைதவைவின்......எய்திய மாக்கதை—1. சாபமொழியைப்போல அம்பெய்த இராமபிரானுக்கு நிகழ்ந்த கதை. 2. வான்மீகி முனிவர் வேடனை வைத வசவினின்றும் தோன்றிய கதை. சொல்—கவி. தேயம்—தமிழ் நாடு.

ஓரம்பினால் ஏழு மராமரங்களைத் துளைத்த இராமபிரான் கதையை ஒரு சொல்லிலே பல பொருளும் தானே வந்து அமரும் சொல் வன்மையைத் தவ வலிமையினாற் பெற்ற வான்மீகி முனிவர் கூறுவது பொருத்தமேயன்றிப் புல்லிய சொல்வன்மையுடைய நான் கூறுவது எவ்வளவு அறிவீனம்!

4 வையம் என்னை இகழவும் மாசெனக்கு
எய்த வும்மிது இயம்புவது யாதெனின்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே. 4

5 துறைய டுத்த விருத்தத் தொகைக்கவிக்கு
உறைய டுத்த செவிகளுக்கு ஓதில்யாழ்
நறைய டுத்த அசுணநன் மாச்செவி
பறைய டுத்தது போலுமென் பாவரோ. 5

6 முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ. 6

7 அறையும் ஆடரங் கும்மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடில் தச்சரும் காய்வரோ
இறையும் ஞானமி லாதவென் புன்கவி
முறையின் நூலுணர்ந் தாரு முனிவரோ. 7

---

4. வையம்—அறிஞர்கள். மாசு—குற்றம். இகழ்தலுக்கும் மாசு எய்தலுக்கும் காரணம் முன் கவியிற் சுட்டப்பட்டது. யாது—எதன் பொருட்டு. தெரிக்க—தெரிவிக்க; தானாக வெளிப்பட்டுத்தோன்ற. புலமைமிக்கவர் உயர்த்திக் கூறுகின்ற, பரம் பொருளை நேரே கண்டனுபவித்த சான்றோர் அருளிச்செய்த சீரிய கவிகளின் பெருமை வெளிப்படும் பொருட்டு.

5. துறை—1. சந்த பேதம். 2. அகப்பொருள் புறப்பொருள்களில் அமைந்த பொருட்கூறுகள். உறை அடுத்த செவிகளுக்கு—உறைவிடமாகிய செவிகளுக்கு. யாழ் நறை—யாழின் இசையாகிய தேன். அசுணமா யாழ் முதலிய இசைக்கு மகிழ்ந்து பறையொலி கேட்டு வருந்தும்; அது போல என் புன்கவியின் ஓசை பெரியோர் அருளிச் செயலாகிய ஒலிமிக்க பாடல் கேட்டு உள்ளந்தடித்தவர்க்கு ஆற்றவொண்ணாத் துன்பந்தரும்.

6. துறை—பொருட்கூறுகள். முறைபோகிய—முறையே பயிற்சி மிக்க. பன்னப் பெறுபவோ—ஆராயத் தக்கனவோ, அல்ல.

7. ஆடரங்கு—நாடக சாலை. மடம்—அறியாமை. தறை—தரை. தச்சர்—சிற்பிகள். காய்வரோ—கோபிப்பரோ? கோபியார். ஞானம்—நூலறிவு. புன்கவி—பொருள் தெளிவில்லாத கவி.

8 தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னாருரை யின்படி நான்தமிழ்ப்
பாவி னாலி துணர்த்திய பண்பரோ. 8

9 நடையி னின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநி கழ்ந்தவி ராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயின் தந்ததே. 9

## வேறு
## நூற்பயன்.

10 நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வோர்க்கே. 10

---

8. தேவ பாடை—வட மொழி. மூவர்—வான்மீகி, வசிட்டர், போதாயனர். முந்திய நாவினர்—முதன்மையான வாக்கு வல்லமை படைத்தவர்; வான்மீகி முனிவர். (பால: 10.)

9. நடை—ஒழுக்கம். நாயகன் தோற்றம்—திருமாலின் அவதாரங்கள். மனிதனாக உலக நடையில் நின்று ஒழுகியவழி தனது தெய்வ நிலையும் விளங்கும்படி மேம்பட்ட அவதாரங்களுள். தொடை—தொடுத்தலின் அழகு. அது நிரம்பிய கதை—பொருளின் கூறுகளெல்லாம் ஒருப்பாடு எய்தும்படி இசைவித்துத் தொடுத்த பண்பு சிறந்த கதை. தோம் அறு கதை—கேட்போரது மனமாசு தீர்க்கும் கதை. மாக்கதை—இயல்பாகவே பெருமை வாய்ந்த கதை. ஊர் வயின்—ஊரின் கண்ணே. தந்தது—செய்யப்பட்டது.

10. நாடிய பொருள்—விரும்பிய பொருள். அவை கல்வி, செல்வம். ஞானமும் புகழும்—கல்வியினால் ஞானமும் செல்வத்தினாற் புகழும். 'இம்மையிலுண்டான ஞானத்தினாலே மறுமையிலே மோட்சமடையும் வழியைக் காட்டும்'. வேரி அம் கமலை—வாசனை பொருந்திய அழகிய தாமரையில் இருப்பவள்; இலக்குமி தேவி. அவள் நோக்குதற்குக் காரணம் தேவமாதர் அடிமைத்தளையை நீக்கும் பொருட்டுச் சிறையிருந்த தன்னை இராமபிரான் அரக்கர்தம் வருக்கம் ஆசறக் களைந்து, சிறை மீட்ட வரலாற்றை ஓதுவதால் வந்த மகிழ்ச்சி. அவள் நோக்கம்படப் பொருள் முதல் வீடு பேறு ஈறாக உள்ள எல்லாம் எய்தும். யாருக்கு எனின்! இராமபிரான் தோள் வலி கூறுவோர்க்கு. தலையை அறுக்க அறுக்க மேலும் மேலும் கிளர்ந்து வந்த பெரிய அரக்கர் சேனையெல்லாங் கொன்று ஆசறுத்ததுபோல, வீடு பேற்றிற்கிடையூறாக உள்ள இரு வல்வினைகளையும் மறுவலிடாதபடி போக்கும்.

# 1. பால காண்டம்.

## 1. சரயு நதி.

---

ஆரம்பக் குறிப்பு:—

இப்பகுதி கோசல நாட்டை வளம்படுத்திய சரயு நதியைப் பற்றிக் கூறும். பிரமதேவன் மனசினாலே நிருமித்த பொய்கை மானச மடு எனப்படும். அம்மடுவினின்றும் தோன்றி வருத லால் இப்பெயர்பெற்றது. சரயு என்பதன் பொருள் பொய் கையினின்றும் ஓடி வருவது என்பது.

இமய மலையிலுள்ள மானச மடுவினின்றும் பெருகிய இந்நதி ஆரம்பத்தில் வணிக மாக்கள், வானர் வெள்ளம், கட் குடியர் முதலியோரைப் போலச் சென்று கோசல நாட்டெல் லையில் புக்கதும் நல்லொழுக்கின்படி பூண்டு தாய்மைப் பண்பு மிக்கு, 'பொறி வரி அரவினொடும் புனிதன்' போலவும், 'செல் லாறு கதியிற் செல்லும் வினை' போலவும், 'பல் பெருஞ் சமயம் சொல்லும் பொருள்' போலவும் சென்று, எங்கும் பரந்து அந் நாட்டை வளம் படுத்திற்று. கல்லிடைப் பிறந்து போந்து கட லிடைக் கலந்த நீத்தத்தின் வரலாறு கூறு முகத்தால் கோசல நாட்டின் நெறியின் புறஞ்செலாமை முதலிய நன்னலப் பண்பு களை உய்த்துணர வைக்கின்றார் ஆசிரியர்.

[தெரிவு செய்யப்பட்ட பகுதிகள் —
ஆற்றுப்படலம்: 4, 5, 7, 9, 10, 12, 15, 17, 19.]

1 புள்ளி மால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி உள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே. 1

---

1. புள்ளி மால் வரை—இமயமலை. புள்ளி—நன் மதிப்பு. வீழ்—விழுது கள்; கோல். அம்மலை பொன் மயமாயிருத்தலால் ஆகாயம் வெள்ளி விழுது களை இறக்கியது போன்று தாரைகளைச் சொரிந்தன. உள்ளி—ஈதலால் வரும் புகழை நினைந்து; நிலையற்ற செல்வத்தைத் தக்கோர்க்கு அளித்தலே கடன் என்பதை நினைந்து.

2 மான நந்தல னாகி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழென
ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே. 2

3 மணியும் பொன்னும் மயில்தழைப் பீலியும்
அணியும் ஆனைவெண் கோடும் அகிலுந்தன்
இணையில் ஆரமும் இன்னகொண் டேகலான்
வணிக மாக்களை ஒத்ததவ் வாரியே. 3

4 மலையெ டுத்தும ரங்கள் பறித்துமாடு
இலைமு தற்பொருள் யாவையும் ஏந்தலான்
அலைக டற்றலை அன்றணை வேண்டிய
நிலையு டைக்கவி நீத்தமந் நீத்தமே. 4

5 ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்து
ஊக்க மேமிகுந் துள்தெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலில் தீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே. 5

---

2. மானம்—பெருமை. நந்தலனாகி—கெடாதவனாகி. 'மான நேர்ந்து அறம் நோக்கி' என்ற 'பாடத்திற்கு பெருந்தன்மையைப் பொருந்தி அற நெறியை ஆராய்ந்து' என்று பொருள் கொள்க. வேந்தன்—தயரதன்; கதா பாத்திரங்களோடு தொடர்புடைய உவமை. ஞானம் உன்னிய—ஞான வழியையே நாடுகின்ற. தழைத்தது—பரந்தது; பெருகிற்று. (நாலடியார்; 38.)

3. மயில் தழைப்பீலி—மயிலினது இறகுகளாகிய கலாபம். அணியும்—அழகு செய்யும். ஆரம்—சந்தனம்.

4. மாடு—பக்கத்திலேயுள்ள. இலை முதற் பொருள்—இலை முதலாகிய பொருள். அலை கடல் தலை—அலைக்கின்ற கடலில் கண்ணே. அணை வேண்டிய—அணைகட்ட விரும்பிய. கவி நீத்தம்—வானர வெள்ளம். இக்கதையில் வரும் நிகழ்ச்சிபற்றிய உவமை.

5. வெள்ளம் கட்குடியரை ஒத்தது என்று கூறுகின்றது. சிலேடையுவமை. ஈக்கள் வண்டொடு மொய்த்தல் இரண்டுக்கும் பொது. வரம்பு இகந்து—எல்லை கடந்து. உள் தெளிவின்றி—1. தண்ணீர் கலங்கி: 2. அறிவு குழம்பி. தேக் கெறிந்து-1. தேக்க மரங்களைச் சாய்த்துத் தள்ளி: 2. ஏப்பம் விட்டு. வாக்கு தேன்—வார்க்கின்ற கள்.

6 இரவி நன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு என்பது தாய்முலை யன்னதிவ்
உரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம். 6

### வேறு

7 செறிநறுந் தயிரும் பாலும் வெண்ணெயுஞ் சேந்த நெய்யும்
உறியொடு வாரி யுண்டு குருந்தொடு மருதம் உந்தி
மறிவிழி ஆயர் மாதர் வனைதுகில் வாரும் நீரால்
பொறிவரி அரவி னாடும் புனிதனும் போன்ற தன்றே. 7

8 முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்தல் தன்னைப் பொருவரு மருத மாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லாம் இடைதடு மாறு நீரால்
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே. 8

9 கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைகளாலும் இயம்பரும் பொருளி தென்னத்

---

6. பரவு—புகழ்தற்குரிய. புரவு என்றும் பாடம்: அதற்குக் காத்தல் என்று பொருள் கொள்க. ஒழுக்கின்படி—ஒழுக்கத்தின் தன்மை. வேந்தரது நன்மையையும் உலகைப் பாதுகாக்குந் தன்மையையும் பூண்டது. அதாவது கோசல நாட்டின் வளம் பெருக்கி மக்களது உயிரையும், தூய நெறியின் புறஞ்செலா ஒழுக்க நலனையும் ஓம்பிற்று. சரயு—மானச வாவியிலிருந்து வருவதால் அப்பெயர் பெற்றது. உரவு நீர்—பரந்த நீரையுடைய கடல்.

7. செறி தயிர்—கட்டித் தயிர். சேந்த—சிவந்த. உந்தி—தள்ளி. மறி விழி—மான்போன்ற விழி. வனைதுகில்—வனைந்த துகில். புனிதன்—கண்ணன்.

8. புல்லிய நெய்தல்—அற்பமான பலனைத்தரும் நெய்தல். பொருவரும்—நிகரில்லாத. இடை—இடம். தடுமாறல்—ஒன்று இருக்கவேண்டிய இடத்தில் மற்றொன்று இருத்தல். ஒரு கதியிற் பிறந்த உயிர்கள் மற்றொரு கதியிற் பிறக்குமாறு செய்யும் இருவினைபோல ஒரு நிலத்துப் பொருளை மற்றொரு நிலத்துப் பொருளாக்கிற்று.

9. முதலாம் அடி இப்பகுதியிற் கூறிய பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது. கல்—இமயமலை. நீத்தம்—வெள்ளம். தொல்லையில்—ஆதியில். ஒன்றே யாகி—மலை முதல் கடல் வரையில் ஒரே நீராகி. துறை தொறும்—

தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பிரிந்த
சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த
தன்றே. 9

இடங்கள் தோறும். பிரிந்த—பல நீர் நிலைகளாகப் பிரிந்த. சூழ்ச்சி—சூழ்ச்சியினால்: சூழ்ச்சியாவது உபாயம்; மதகு, அணை முதலியன ஆக்கியமைத்த உபாயம் சூழ்ச்சி எனப்பட்டது. நீத்தம்...இயம்பரும் பொருளென்னும்படி ஒன்றேயாகிப் பிரிந்து பல உருவங்கொண்டு...எங்கும் பரந்தது: எது போல எனின்:— பல் பெருஞ் சமயம் சொல்லும் பொருள் போல். இதுதான் அது என்று கூறுதற் கரியதாய்ப் பரந்தது. பொருளும் என்பதில் உம்மை இசை நிறை. அன்று, ஏ—அசைகள்.

## 2. கோசல நாடு.

கோசல மென்னுங் கோதிலா நாட்டின் செல்வ வளம், மக்களின் குண நலம், கல்வி மேம்பாடு—முதலிய தனிச்சிறப்பியல்புகள் இங்கே கூறப்படும். எல்லா வகையாலும் சீருஞ் சிறப்புமுற்ற நன்னாட்டிற்குரிய உத்தம இலக்கணங்கள் பொருந்திய நாடாகவே கம்பர் இந்நாட்டை வருணிக்கின்றார். தம் சிந்தனை வெளியிற் கண்ட நல்லுலகமே ஆசிரியர் கூறும் கோசல நாடு. ஆசிரியர் வாழ்ந்துவந்த தமிழ்நாடே தூய்மையுற்று இக் கற்பனை உலகமாக உருக்கொண்டதாதலால் அக்காலத்துத் தமிழ் கூறும் நல்லுலகின் உயர் பண்பாடும் குறிக்கோளும் இதன் வாயிலாக உய்த்துணரற்பாலன. மேலும் அவர் கூறியுள்ள சிற்சில பண்புகள் வருங்கால உலகிற்கும் வழிகாட்டியாகும்.

[தெ. ப:— நாட்டுப்படலம்:- 1, 3, 4, 9, 26, 35, 36, 38, 39, 47, 48, 53, 59, 61.]

10 வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி என்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை அன்பெனும் நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்றா னென்னயான் மொழிய
லுற்றேன். 1

10. வாங்கரும்—வாங்குதற்கு அரிய; ஒரு அடியை எடுத்துவிட்டு வேறொன்றைப் புகுத்தமுடியாத. பாதம்—அடிகள்; நான்கு அடிகளாலாகிய சுலோகம் முதன் முதலில் வான்மீகி முனிவரால் செய்யப்பட்டது; இவர் ஆதி கவி. தீம் கவி-இனிய கவி. நறவம் மாந்தி-தேனைப் பருகி. மூங்கையான்--ஊமன்.

11 ஆறுபா யரவம் மள்ளர் ஆலைபா யமலை ஆலைச்
சாறுபா யோதை வேலைச் சங்குவாய் பொங்கும் ஓசை
ஏறுபாய் தமரம் நீரில் எருமைபாய் துழனி இன்ன
மாறுமா றாகித் தம்மின் மயங்குமா மருத வேலி. 2

12 தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ. 3

13 ஆலைவாய்க் கரும்பின் தேனும் அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் தேனும் தொடையிழி இறாலின் தேனும்
மாலைவாய் உகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப நுங்கி மீனெலாங் களிக்கு மாதோ. 4

வேறு

14 முட்டில் அட்டின் முழங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கமு கோங்கு படப்பைபோய்
நட்ட செந்நெலின் நாறு வளர்க்குமே. 5

---

11. அரவம், அமலை, ஓதை, ஓசை, தமரம், துழனி—ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள். பொருட் பின்வருநிலை. மள்ளர்—உழவர். வேலை—நீர்க்கரை. மருதநிலத்தெல்லையில் இந்த ஓசைகளெல்லாம் ஒன்றோடொன்று மாறுபட்டுக் கலந்து நிற்கும்.

12. தண்டலை—சோலையின்கண். கொண்டல்கள் முழவின் ஏங்க—மேகங்கள் மத்தளங்கள் போல் ஒலிக்க. தெண் திரை எழினி காட்ட—அலைகள் சித்திரம் வரைந்த திரைச்சீலைகளின் தன்மையைக் காட்ட. மகர யாழ்—ஒருவகை யாழ்; இங்கு யாழிசை.

13. கரும்பின்தேன்—கருப்பஞ்சாறு. அரிதலை—அரிந்த தலைகளையுடைய. இறால்—தேனடை, தொடை இழி இறாலின் தேனும்—ஒழுங்காக இழிகின்ற இறாலில் தேனும்: அதாவது கொம்புத்தேன். வரம்பு இகந்து ஓடி—அளவில்லாமல் குளம் முதலியவற்றையெல்லாம் அழித்துச் சென்று. நுங்கி—விழுங்கி. அந்நாட்டு இன்ப வளங்களெல்லாம் தாழ்ந்த படியிலுள்ள வேற்றிடங்களில் வாழ்வாரும் பெறக்கூடியனவாயின என்பது குறிப்பு.

14. முட்டு இல் அட்டில்—விருந்தளிப்பதற்கு எப்பொழுதும் குறைவில்லாத மடைப்பள்ளியில். பட்டம்—நீர் ஓடை; வழி. படப்பை—தோட்டக்கூறு. (பெருந்தொகை; 1131.)

15 சேம்பு காலிறச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன
காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே. 6

16 பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே. 7

17 கலஞ்சு ரக்கும் நிதியம் கணக்கிலா
நிலஞ்சு ரக்கும் நிறைவளம் நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ்சு ரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம். 8

18 கூற்ற மில்லையோர் குற்றமி லாமையால்
சீற்ற மில்லைநஞ் சிந்தையின் செம்மையால்
ஆற்றல் நல்லற மல்லதில் லாமையால்
ஏற்ற மல்லது இழிதகவு இல்லையே. 9

---

15. சேம்பு கால் இற—சேம்பினது அடி அற்றுப்போகும்படி. குளத் தூம்பு—குளத்தினுடைய மதகு. கால—கக்க. வளை—சங்கு. காம்பு கால் பொர—மூங்கில்களைக் காற்று அலைக்க. பாம்பு நான்றென—பாம்பு தொங்குவது போன்ற தோற்றத்துடன். 'பாம்பு நான்றெனப் பாய் பசுந் தேறலால் செங்கழுநீர்க்குளம் பெருகி மடைவழி ஓடின தேனைச் சங்கினம்' உண்பன. அந் நாட்டில் மிகத் தாழ்ந்த படியினருக்கும் மிக மேலான இன்பங்கள் எளிதிற் கைவந்தன என்பது குறிப்பு.

16. பெருந்தடங்கண் பிறை நுதலார்—இயற்கை யழகின் நிறைவு கூறப்பட்டது. பூத்தலால்—அது போலவே கல்வி முதலியவற்றின் அமைதியும் நிரம்பியமை உணர்த்தப்பட்டது. வருந்தி வந்தவர்—வேற்று நாடுகளிலிருந்து வழி நடந்து வந்தவர். விருந்து—விருந்தோம்பல். விளைவன—கல்வி முதலியன பூத்து, அறிவு முதிர்ந்து, அதன் பயனும் விளைவன.

17. கலம்—மரக்கலம். பிலம்—சுரங்கம்.

18. கூற்றம்—யம பயம். சிந்தையின் செம்மை—இயல்பாயமைந்த மன நலம்; அன்றி நடுவு நிலைமை. ஏற்றம்—மேன் மேலுயர்வு. இழிதகவு—எளிமை.

19 வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால். 10

20 நென்மலை யல்லன நிறமுறு தரளம்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம். 11

21 பந்தினை இளையவர் பயிலிட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம். 12

22 பொற்பின் நின்றன பொலிவு பொய்யிலா
நிற்பின் நின்றன நீதி மாதரார்

---

19. வெண்மை—அறியாமை. 'வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை—யுடையம் யாம் என்னும் செருக்கு' (திருக்குறள் : 844.)

20. தரளம்—முத்து. கடலமிர்தம்—உப்பு. நதி தரு நிதியம்—நதிகளாற் கொணர்ந்து குவிக்கப்பட்ட பொன் முதலிய செல்வம். மணிபடு புளினம்—இரத்தினங்கள் பொருந்திய மணற் குன்றுகள். 'அல்லன' எல்லாம் எழுவாய்கள். இச் செய்யுளின் பொருள் இரண்டுவிதமாக விரிக்கப்படுகின்றது. 1. நென்மலை யல்லன முத்து மலை; அவை அல்லாதன மணிபடு புளினம். 2. இப்படித் தொடர்பு செய்யாது ஒவ்வொரு அடியையும் தனித்தனியே வைத்தும் பொருள் கொள்ளலாம். இங்ஙனங் கொள்ளுமிடத்து இரண்டாம் அடிக்கு 'யாவரும் தேவாமிர்தம் போன்று வசனிப்பர்' என்று பொருள் கொள்க. சொன்மலை—சொற்களின் தொகுதி. பொன்மலை—மேருமலை (பால : 35.) புளினம்—மணற்குன்று.

21. இளையவர்—மகளிர். கலை—வித்தை முதலியன. கழகம்—கல்லூரி. பந்தாடுமிடம் சந்தனவனம்; எனினும் அம்மகளிர் உடல் சண்பகப்பூ மணமுடைமையின் சண்பக வனமாகக் காணப்பட்டது. கலை தெரி கழகம் நந்தன வனம்; ஆயினும் அவ்வாடவர் மேனி முல்லை மலரின் மணமுடைமையால் முல்லை நிலம்போற் காணப்பட்டது. நறை விரி புறவம்—முல்லை மணம் வீசுகின்ற முல்லை நிலம்.

22. பொற்பின் நின்றன பொலிவு—நற்குண நற் செயல்களை அடிப்படையாகக் கொண்டு நின்றன அழகுகள்: குணத்தினழகே அழகாக மதிக்கப்

அற்பின் நின்றன அறங்கள் அன்னவர்
கற்பின் நின்றன கால மாரியே. 13

23 வீடு சேரநீர் வேலை கான்மடுத்து
ஊடு பேரினும் உலைவி லாநலங்
கூடு கோசலம் என்னும் கோதிலா
நாடு கூறினும் நகரங் கூறுவாம். 14

---

பட்டது. நிற்பு—நடை, ஒழுக்கம். அற்பு—அன்பு. காலத்திற் பெய்யும் மழை.

23. இதுவரையிற் கூறிய கோசல நாட்டின் பலதிறப்பட்ட சிறப்புக்களை ஒரு நெறிப்படுத்தித் தொகுத்துக் கூறுகின்றது இச்செய்யுள்; மேல்வரும் பொருளையும் தோற்றுவாய் செய்கின்றது. வீடு சேர—உலகம் அழிதலை யடைய. கால் மடுத்து—காற்றினால் மோதப்பட்டு. ஊடு—நாட்டினிடையே. நலம்—குண நலங்கள்; சிந்தையின் செம்மை, நல்லறம், உண்மை, பொற்பு, அன்பு, கற்பு முதலிய நலங்கள். கூடு—விலகாமற் பொருந்தி நின்ற. வேலை கரையிழந்து பொங்கிவரும் பேராபத்து நேர்ந்த பொழுதும் சீலம் ஒழியாத நன்மக்களையுடைய நாடு. அம்மக்கள் ஒரு பொழுதும் வரம்பிகந்த செயல்களைச் செய்யார்.

---

## 3. அயோத்திமாநகரம்.

உலகத்தை விழுங்கும் பெருவெள்ளம் உள்ளிட்ட காலத்தும் சீலங்குன்றாத கோசல நாட்டின் சிறப்பு முந்திய பாடத்திற் கூறப்பட்டது. இதில் அத்தகைய நாட்டின் தலைநகராகிய வானுலகத்தவரும் இழிவதற்கு அருத்திபுரிகின்ற அயோத்தியின் மேம்பாடு கூறப்படும். எல்லாப் படியாலும் அளகாபுரியினும் அமராபுரியினும் தலைசிறந்த இந்நகரில் கல்வி, செல்வம் முதலிய வற்றான் விளையும் ஏற்றத் தாழ்ச்சியின்றி மக்கள் வாழ்ந்து வந்தனர்; தற்கால உலகின் கண்ணே மாந்தர் விழையும் ஒருவித சமத்துவம் ஆண்டு நிலவிற்று. யாவரும் கல்வி கேள்விகளில் மேம்பட்டு அன்பையும் அருளையும் அடிப்படையாகக் கொண்ட அறநெறிபற்றி ஒழுகலால் உளதாய இன்பக் கனியைத் துய்த்தனர். இவை போன்ற சிறப்புக்களை யுள்ளிட்ட அதன் தனிப் பண்புகளை ஆசிரியர் இங்கே கூறுகின்றார்.

[தே. ப:— 1, 4, 5, 7, 8, 12, 13, 15, 18, 27, 34, 39, 40, 59, 61, 62, 73, 74, 75.]

24 செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய, கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுல கத்தோ ரியாவருந் தவஞ்செய்து
ஏறுவான் ஆதரிக் கின்ற
அவ்வுல கத்தோர் இழிவதற்கு அருத்தி
புரிகின்றது அயோத்திமா நகரம். 1

25 அயின்முகக் குலிசத்து அமரர்கோன் நகரும்
அளகையும் என்றிவை அயனர்
பயினுற வுற்ற படிபெரும் பாலும்
இப்பெருந் திருநகர் படைப்பான்
மயன்முதல் தெய்வத் தச்சரும் தத்தம்
மனத்தொழில் நாணினர் மறந்தார்
புயல்தொடு குடுமி நெடுநிலை மாடத்து
அந்நகர் புகலுமா றெவனே. 2

26 புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்
என்னுமீது அருமறைப் பொருளே
மண்ணிடை யாவர் இராகவ னன்றி
மாதவம் அறத்தொடும் வளர்த்தார்

---

24. செவ்விய பொருள். மதுரஞ் சேர்ந்த பொருள். செவ்விய—சிறப்பு வாய்ந்த. இத்தகைய பொருளைப் புலப்படுத்த எழுந்த சொல் சீரிய, கூரிய, தீஞ்சொல். வவ்விய—பொருளைப்பற்றிப் பிடித்த. இத்தகைய சொல்வன்மை வாய்ந்த கவிஞரும் வட நூன் முனிவரும் புகழ்ந்தது அந்நகரம். ஏறுவான்—ஏறும் பொருட்டு. ஆதரம்—விருப்பம். அருத்தி புரிகின்றது—ஆசையைத் தோற்றுவிக்கின்றது. சுவர்க்கத்தினும் மேலான போகங்களையுடையது இந் நகரம்.

25. அயில் முகக் குலிசம்—கூர்மையான முகத்தையுடைய வச்சிராயுதம். பயினுற வுற்றபடி—பயிற்சி செய்து கொண்டதற்கேற்றபடி. அயனர் இப் பெருந்திரு நகர் படைப்பான் பயினுற வுற்றபடி பெரும்பாலும் (ஆகும்) என்று இயைக்க. மனத்தொழில்—மனத்தினல் நினைத்து அப்படியே படைக்குந் தொழில். நாணிர்—நாணினராகி. புயல் தொடு குடுமி—மேகங்களைத் தொடுவது போன்று காட்டும் சிகரங்கள். எவனே—எவ்வாறோ!

26. வளர்த்தார்—நிலைநாட்டினர். பெரிய தவத்தை அறநெறி பிழையாமல் அநுட்டித்துக் காட்டியவர். எண்ணருங் குணத்தினவன். (அயோத்தி:

என்னாருங் குணத்தின் அவனினி திருந்திவ்
ஏழுல காள்விட மென்றால்
ஒன்னுமோ அதனின் வேறொரு போக
முறைவிடம் உண்டென உரைத்தல். 3

27 அரசெலா மவண அணியெலா மவண
அரும்பெறன் மணியெலா மவண
புரசைமால் களிறும் புரவியுந் தேரும்
பூதலத்து யாவையு மவண
விரசுவார் முனிவர் விண்ணவர் இயக்கர்
விஞ்சையர் முதலினே ரெவரும்
உரைசெய்வேன் யானே யானபோ ததனுக்
குவமைதான் அரிதரோ உளதோ. 4

## மதில்

28 நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனிதவ உயர்ந்தன பனிதோய்
மால்வரைக் குலத்தின் யாவையு மில்லை
ஆதலால் உவமைமற் றில்லை

---

42, 156.) இனிதிருந்து ஆளிடம். என்றால்—ஆனால் என்பது போல விசேடத்தை யுணர்த்துவதோர் இடைச்சொல். போகங்களுக்கு இருப்பிடமாகிய உலகம். உரைத்தல் ஒண்ணுமோ?

27. அவண—அவ்விடத்திலுள்ளன; குறிப்பு வினைமுற்று. புரசை—கழுத்திடு கயிறு. விரசுவார்—மனங்கலந்து வசிப்பவர். விஞ்சையர்—வித்தியாதரர். உவமை தான் அரிதரோ உளதோ—அரிதின் முயன்றும் ஓர் உவமை காண முடியுமோ! இருந்தால்தானே அது கைகூடும்.

28. விதி முறை—சிற்ப நூல் விதிப்படி. நனி, தவ—ஒரு பொருட் பன்மொழி. வரைக்குலத்தில் நாட்டப்பெற்று உயர்ந்தன இல்லை; ஆதலால் மலைகளை உவமையாகக் கூறுதல் பொருத்த மின்று. நூல் வரைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி: அறிவுக்கும் மதிலுக்கும் சிலேடை. நூல் வரை—1. நூலின் வரம்பு: 2. பிடித்த நூலின் எல்லை. பயம்:—1. நாற் பொருட் பயன்: 2. அகழிநீர். உணர்வே போல் வகைத்து—அறிவைப் போன்ற தன்மைத்து. உயர்வினோடு உயர்ந்தது—உயரமுள்ள பொருள் எவ்வளவு உயர்

179

நால்வகைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி
நுணங்கிய் நுவலரும் உணர்வே
போல்வகைத் தல்லால் உயர்வினோடு உயர்ந்த
தென்னலாம் பொன்மதில் நிலையே. 5

29 சினத்தயில் கொலைவாள் சக்கரந் தண்டு
சிலைமழுத் தோமரம் உலக்கை
கனத்திடை உருமின் வெருவருங் கவண்கல்
என்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையும் உவணத் திறையையும் இயங்குங்
காலையும் இதமல நினைவார்
மனத்தையும் எறியும் பொறியுள என்றால்
மற்றினி உணர்த்துவ தெவனோ. 6

30 பூணினும் புகழே அமையுமென் றினைய
பொற்பின்நின்று உயிர்நனி புரக்கும்
யாணரெண் திசைக்கும் இருளற இமைக்கும்
இரவிதன் குலமுதல் நிருபர்

---

தது அந்த அளவிற்குத் தானும் உயர்ந்து காணப்படுவது: 'செலக் காண்கிற்பார் காணுமளவும்' மேலே செல்வது. (திருவாய் மொழி: 5:8:4.) அறிவு எப்படி எல்லையின்றி மேற்செல்லக் கூடுமோ அதுபோல இம்மதிலும்.

29. அயில்—வேல். 'உடையவன் பண்பு உடையதன் மேல் ஏற்றப்பட்டது.' தண்டு—கதாயுதம். கனத்திடை உருமின் கவண்கல்—மேகத்திலே தோன்றும் இடியைப் போன்று அச்சந்தரும் கவண்கல். கொதுகு—கொசுகு. உவணத்திறை—கருடன். இயங்கும் கால்—சஞ்சரிக்கின்ற காற்று. இதமல நினைவார்—தீங்கு நினைப்பவர். மற்று—அசை.

30. அமையும்—சிறந்தது: தகுதியாகும். பொற்பு—சீரிய ஒழுக்கம். (பால: 22.) யாணர் எண் திசைக்கும் இருளற இமைக்கும் இரவி—அழகிய எட்டுத்திசையிலுமுள்ள இருள் அற்றுப் போகும்படி ஒளி வீசுகின்ற சூரியன்; இங்ஙனமே வெங்கதிரோன் குல நிருபரும் புதிய வருவாயை யுடைய (யாணர்) எண்திசையிலுமுள்ள பகைவரை வலி கெடுத்து ஓட்டி இருந்த இடத்திலிருந்தபடி விளக்கினர் என்பது குறிப்பு. சேண்—தேவருலகம். திகிரி—ஆஞ்ஞா சக்கரம். ஆணை—கட்டளை. கதிரவன் நின்ற நிலையில் இருந்தபடியே அவனது ஒளி ஆகாயம், திசை யெல்லாஞ் சென்று உலகம் முழுவதும் நடைபெறச்

சேனையுங் கடந்து திசையையுங் கடந்து
திகிரியுஞ் செந்நனிக் கோலும்
ஆணையுங் காக்கு மாயினும் நகருக்கு
அணியென இயற்றிய தன்றே. 7

## வேறு

## அகழி

31 ஏகு கின்ற தன்க ணங்க ளோடு மெல்லை காண்கிலா
நாக மொன்ற கன்கி டங்கை நாம வேலை யாமென
மேக மொண்டு கொண்டெ ழுந்து விண்தொ டர்ந்து
குன்றமென்று
ஆகம் நொந்து நின்று தாரை அம்ம திற்கண் விசுமே. 8

32 ஈரும் வாளின் வால்வி ரித்தெயிற்றி எம்பி றைக்குலம்
பேர மின்னி வாய்வி ரித்தெ திர்ந்த கட்பி றங்குதீ
சோர ஒன்றை யொன்று முன்தொ டர்ந்து சீறி டங்கர்மா
போரில் வந்து சீறு கின்ற பேர ரக்கர் போலுமே. 9

## வேறு

## மாளிகை

33 திங்களுங் கரிதென வெண்மை திற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை

---

செய்வது போன்று, இவ்வரசர் நின்ற நிலையிலேயே இவர் திகிரியும் செங்கோலும் ஆணையும் வானுலகம், எட்டுத்திசை முதலியவற்றைக் கடந்து பூவுலகினைப் பாதுகாக்கும். (அயோத்தி: 94. பெருமாள் திருமொழி: 10:.1.)

31. தன் கணங்கள்—மேகக்கூட்டங்கள். எல்லை காண்கிலாக் கிடங்கு. கிடங்கு—அகழி. நாகம் ஒன்று அகல் கிடங்கு—பாதாள உலகம் வரையில் ஆழ்ந்துள்ள விசாலமான கிடங்கு. நாம வேலை—அச்சந்தருங் கடல். குன்றம் என்று—மதிலை மலை என்று உட்கொண்டு. ஆகம் நொந்து—உடம்பு வருந்தி. நின்று--படிந்து நின்று. அகழியின் நீர்ப்பரப்பும் மதிலின் உயரமும் கூறப் பட்டன.

32. ஈர்தல்—அறுத்தல். விரித்து—அசைத்து. வாள்போன்ற வால். பேர—ஒளி விளங்க. கண் பிறங்கு தீ. இடங்கர்மா—முதலை. முதலைக்கு அரக்கர் உவமானம்.

33. சங்க வெண் சுதை—சங்கு சுட்ட சுண்ணும்புச் சாந்து. தவளம்—வெண்ணிறம். வெண் சுதைக்குத் திங்கள் உவமானம். வெம் கடும் கால்

வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடல் தரங்கம் போலுமே. 10

34 வானுற நிமிர்ந்தன வரம்பில் செல்வத்த
தானுயர் புகழெனத் தயங்கு சோதிய
ஊனமில் அறநெறி யுற்ற எண்ணிலாக்
கோனிகர் குடிகள்தம் கொள்ளை சான்றன. 11

## கட்டிடம் முதலியன

35 பொன்றொடர் மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிமம்
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே. 12

## நகரின் ஒளி

36 மின்னென விளக்கென வெயிற் பிழம்பெனத்
துன்னிய தமனியத் தொழில்த ழைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லாலரோ
பொன்னுல காயதப் புலவர் வானமே. 13

---

பொர—அச்சந்தரும் பெருங்காற்று வீசுதலால். மேக்கு நோக்கிய—மேல் நோக்கி எழும்பும். தரங்கம்—அலை.

34. தானுயர் புகழென—தானே நிமிரும் புகழைப்போல. புகழ் வெள்ளை நிறம் எனப்படும். ஊனம்—குற்றம். அறநெறி உற்ற—அறத்தின் வழியே செல்லலுற்ற. கோன்—அரசன். அரசனை ஒத்த குடிகள். நிமிர்ந்தனவும் செல்வத்தனவும் சோதியனவுமாகிய மாளிகைகள் செங்கோல் அரசனைப் போன்று அறத்தின்வழி ஒழுகும் குடிகள் நிரம்பியிருந்தன.

35. பூத்தொடர் மன்றுகள் — மலர்த்தொகுதியாற் சமைக்கப்பட்ட மண்டபங்கள். குட்டிமம்—கற்கள் படுத்துச்செய்தமேடை. முன்றில்கள்—விட்டு முற்றங்கள்.

மண்டபம் பூத்தொடர் போன்றும், மன்றுகள் மாளிகை போன்றும் குட்டிமம் செய்குன்றுகள் போன்றும் இருந்தன; முன்றில்கள் முத்தின் பந்தரை யுடையன என்று பொருள் கொள்க.

இன்றேல் 'மண்டப மல்லாதன பூத் தொடர் மன்றுகள்; அவையல்லாதன மணிகொள் குட்டிம முன்றில்கள்; அவையல்லாதன முத்தின் பந்தர்' என்று கொள்ளலுமாம். (பால: 20.)

36. வெயிற்பிழம்பு—சூரிய கிரணத்தின் தொகுதி. துன்னிய தமனியம்—மிகவும் மாற்றுயர்ந்த பொன். கன்னி—அழிவின்மை. கதுவல்—மிகுதியாகப் படுதல். புலவர்—தேவர்.

## கடைவீதி.

37 கோவையின் இதனொடெண் குறிக்கி லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் விளங்கிடத் திகலி இந்நகர்
ஆவணங் கண்டபின் அளகை தோற்றதே. 14

## பலவகை ஒலிகள்.

38 வளையொலி வயிரொலி மகர வீணையின்
கிளையொலி முழவொலி கின்ன ரத்தொலி
துளையொலி பல்லியந் துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலிய விம்முமே. 15

## பலவகை மண்டபங்கள்.

39 மன்னவர் தருந்திறை அளக்கு மண்டபம்
அன்னமென் னடையவர் ஆடு மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்
உன்னரும் அருமறை ஓது மண்டபம். 16

---

37. அயோத்தியின் வரிசையிலே வைத்து எண்ணப்படாத அமராபுரி. இகலி—பகைத்து. ஆவணம்—கடைவிதி. அமராபுரியைப்பற்றிப் பேசவே வேண்டாம்: அளகாபுரியே எல்லாவற்றுலும் விளங்குகின்ற தன்மையில் தானும் ஒப்பாகக்கூடும் என்று போட்டியிட்டுக் கடைவிதியைக் கண்டபின் தன் தோல்வியை ஒப்புக்கொண்டது. கோவை—அயோத்தி, மதுரை, மாயை, கச்சி, காசி, அவந்தி, துவாரகை என்று முத்திதரும் நகரம் ஏழு எனப்படும் வரிசை.

38. வளை—சங்கு. வயிர்—ஊது கொம்பு. கிளை யொலி—இனங்களின் ஓசை. கின்னரம்—வீணையின் இனமானதொரு வாச்சியம். துளை—துளைக் கருவி. பல் இயம்—பல வகை வாத்தியம். சும்மையின் விளை ஒலி—ஆரவாரத்தினுல் உண்டான ஓசை. மெலிய — கீழ்ப்படும்படி. விம்மும்—மேற்பட்டு ஒலிக்கும்.

39. பட்டி மண்டபம்—வித்தியாமண்டபம். இவை அந்நகரில் எங்கும் உள்ளன.

## வேறு

### நகர மாந்தர்.

40 தெள்வார் மழையுந் திரையாழியும் உட்க நாளும்
வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்காவலு மில்லை யாரும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களும் இல்லை
மாதோ. 17

41 கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை அவைவல்லா ரல்லாரு மில்லை
எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லாலே
இல்லாரு மில்லை உடையார்களும் இல்லை மாதோ. 18

42 எகம் முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம் முதல்திண் பணைபோக்கி அருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித் தருமம் மலர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே. 19

---

40. தெள் வார் மழை—தெளிவான நீரைச் சொரிகின்ற மேகங்கள். திரை ஆழி—அலையையுடைய கடல். உட்க—அஞ்ச. வள்வு ஆர் முரசம்—பெரிய தோற் கயிற்றுற் கட்டிய முரசம். முரசு அதிர்கின்ற பெரிய நகரம். மாக்கள்—நீட்டல் விகாரம் 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்' என்பதை நோக்குக. (புற நானூறு: 9.)

41. கல்வியிலும் செல்வத்திலும் அந்நகர மாந்தர்க்கிடையே ஏற்றத் தாழ்ச்சி இல்லை.

42. ஏகம் முதல்—ஒரு முதல்; அதாவது விதை. எண்ணில் கேள்வி ஆகு அ முதல் திண் பணை—கணக்கில்லாத நூற் கேள்வியாகிய அழகிய முதன்மையான பெரிய கிளைகளை. போக்கி—மேலோங்க விட்டு. தவத்தின் சாகம்—தவமாகிய இலைகள். அரும்பி—தோன்றி. போகம் கனி—இன்பமாகிய கனி; கல்வி கேள்விகளினுல் அன்பு முதலிய பண்புகளும் ஒழுக்கமும் நிரம்பி இம்மையிலேயே அனுபவிக்கும் அழிவில் இன்பம். போலும்—அசை. இத்தகைய பேரின்பத்திற்கு ஒப்பான ஆனந்தத்தை அந்நகர மாந்தர் இம்மையிலேயே பெற்று அனுபவித்தனர்.

## 4. தயரதனும் விசுவாமித்திர முனிவனும்.

இப்பாடத்தில் விசுவாமித்திர முனிவனிடம் தயரதன் இராமலக்குமணரை அடைக்கலமாக ஒப்புவித்த வரலாறு கூறப் படுகின்றது.

இராமாயணக் கதை நிகழ்ச்சியின் முதல் வித்துப் போன்ற இந் நிகழ்ச்சியை ஆசிரியர் சீரியதொரு முறையில் நாடகச் சுவைபடக் காட்சிப் படுத்துகின்றார். முனிவன் சற்று முன்னே வரக்கண்ட தயரதனுக்கு அவனுடைய பூர்வ வரலாறு நினைவி லெழ நான்முகனுக்கு ஒப்பான அம் முனிவன் அணுகுதலும் கடிது எழுந்து அடி பணிந்து பற்பல முகமன் கூறி உபசரித் தான். அவனும் பொங்கிய உவகையனாய் எதிர் முகமன் கூறும் வாயிலாக அரசனைப் பலவாறு புகழ்ந்து, தான் அவனுதவி கருதிவந்தமையைக் குறிப்பாக உணர்த்தினான். முனிவன் புகழுரை கேட்ட அரசனுடைய உள்ளத்தில் ஒருவாராலும் கரை செய்ய அரியதொரு பேருவகைக் கடல் பெருகிற்று; அந்நிலை யில் கை கூப்பி நின்று, "இனி யான் செய்வது இன்னதென்று பணித்தருள்க" என்று கேட்டான். முனிவன் முன்பு பேசியது போன்ற ஈரமளைந்த இன் சொற்களை விட்டு, கேட்ட மாத்திரத் தில் உயிரைப் பிளப்பது போன்ற கொடுஞ்சொற்களைப் பேச லுற்று, "யான் இயற்றும் வேள்வியை நிருதர் இடை புகுந்து விலக்கா வண்ணம், 'செருமுகத்துக் காத்தி' எனக் கட்டளை யிட்டு, நின் புதல்வர் நால்வருள்ளும் கரிய செம்மல் இராமனை உடன் அனுப்புதி" என்றான். இம் மொழி அரசன் உள்ளத்தில் எழுந்த உவகைக் கடலைத் துயர்க்கடலாக மாற்றியது. போகா உயிரோடு நின்றிட்ட அரசன் ஒருவாறு தேறி, முனிவனைப் பார்த்து, "சிறியன் இவன். பெரியோய்! வேள்வியை யானே காப்பென்; எழுக" என்றான். என்றலும் முனிவோ டெழுந் தனன். முனிவு எடுத்த சீற்றமாய் முதிரலாயிற்று. அவனது உள்ளக் கருத்தை யுணர்ந்த வசிட்டன் அவனைப் பொறுக்குமாறு வேண்டி, அரசனுக்கு நிலைமையை விளக்கினான். அரசனும் இராமலக்குமணரை வரவழைத்து, "தந்தையும் தனித்தாயும் நீயே; இவர்க்கு இயைந்த செய்க" என்று கையடைப்படுத்தான்; முனிவனும் எடுத்த சீற்றம் விட்டு இனிது வாழ்த்திப் பின்பு மைந்தருடன் அவ்விடம் விட்டு நீங்கினான்.

இப்பகுதியில் ஆராய்தற்குரிய மற்றொரு பொருள் சார்ச்சி மூலம் கோசிக முனிவன் வரலாறு, குணம் முதலிய வற்றைச் சில அடைமொழிகளால் உய்த்துணர வைத்தமையாகும். இப் பாடத்தின் முதலாம் செய்யுளிலேயே அவன் வரலாறும் குணமும் சுருக்கமாகக் கூறப்பட்டன. பின்பு 'எண்ணிலா அருந்தவத்தோன்' என்றும், 'மண்படைத்த முனி' என்றும், 'கறுத்த மாமுனி' என்றும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒரோவோர் பொருட்பயன்கருதி அவ்வரலாறு சுட்டப்பட்டது. இங்ஙனம் ஈண்டுத் தொகுத்துக் கூறப்பட்ட பொருளெல்லாம் இந்நூலில் வேறு இடங்களில் சற்று விரித்துக் கூறப்படுகின்றன. (வேள்விப்படலம்: 12, 13, மிதிலைக் காட்சிப் படலம்: 91—137.) இம்மாண் கதைக்கோர் இறையாய இராமபிரானை தாடகையைத் தொலைத்த கைவண்ணமும் அகலிகைக் களித்த தாள் வண்ணமும் விரைக்கருங் குழலிக்காக வில்லிற நிமிர்ந்து வீங்கும் தோள்வண்ணமும் வெளிப்படுதற்கு அடியெடுத்துக் கொடுத்தது மல்லாமல், பின்பு அரக்கர் நீறுபட்டழிதற்கு வேண்டுங் கடவுள் வெம்படைகளையும் உவந்தளித்த இம் முனிவன் வரலாறு இக் காவியத்தில் ஏற்றமொரு பெற்றி தொடுக்கப்பட்டமையின் பொருத்தம் அறிஞர் ஆராய்தற் குரியது.

[தெ. ப:—கையடைப் படலம்: 3—18.]

43 மடங்கல்போன் மொய்ம்பினன் முன்னர் மன்னுயிர்
அடங்கலும் உலகும்வே றமைத்துத் தேவரோடு
இடங்கொள்நான் முகனையும் படைப்பன் ஈண்டெனத்
தொடங்கிய துனியுறு முனிவன் தோன்றினன். 1

---

43. மடங்கல்—ஆண் சிங்கம்; மொய்ம்பு—வலிமை; மொய்ம்பினன்—தயரதன். அவன் முன்னர் விசுவாமித்திர முனிவன் தோன்றினன். 'மன்னுயிர்.........தொடங்கிய துனியுறு' முதலிய அடைமொழிகள் முனிவன் வரக் கண்ட அரசன் மனத்தில் இயல்பாய் எழுந்த சிந்தனையை ஒட்டி வந்தன. மேலும் அம்முனிவன் சீற்றங் கொண்டதைக் கூறும் சந்தர்ப்பத்தில், இப் பகுதி முழுவதையும், 'மண் படைத்த முனி' என்னும் தொடரால் ஞாபகப் படுத்தி ஏற்ற பெற்றி பயன் படுத்திக் கொள்வர். ஈண்டு—இப்பொழுது. துனி—பெருங் கோபம்.

## வேறு

44 வந்துமுனி எய்துதலும் மார்பினணி யாரம்
அந்தர தலத்திரவி அஞ்சவொளி விஞ்சக்
கந்தமல ரிற்கடவுள் தன்வரவு காணும்
இந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந்தான். 2

45 பணிந்துமணி செற்றுபு குயிற்றி யவிர்பைம்பொன்
அணிந்ததவி சிட்டதில் அருத்தியொ டிருத்தி
இணைந்தகம லச்சரண் அருச்சனைசெய் தின்றே
துணிந்ததென் வினைத்தொடர் பெனத்தொழுது
சொன்னான். 3

46 நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்து வணங்கஎளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவம் என்றினிது கூறமுனி கூறும். 4

## வேறு

47 என்னனைய முனிவரரும் இமையவரும்
இடையூறொன் றுடைய ரானால்
பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதுமை பீடத்

---

44. எய்துதலும்: உம்—உடனிகழ்ச்சி. அந்தர தலம்—ஆகாயம். அஞ்ச—தோற்ப. கந்த மலர்—தாமரை மலர். அம்மலரிலுள்ள கடவுள் பிரமன்.

45. செற்றுபு குயிற்றி—நெருங்கப் பதித்து. அணிந்த—அழகு செய்யப்பட்ட. தவிசு—ஆசனம். அருத்தி—ஆசை. இணைந்த—ஒன்றை யொன்று ஒத்த. துணிந்தது—துண்டிக்கப்பட்டது.

46. நெடியோய்—உலகை யெல்லாம் படைக்கத்தொடங்கிய, பிரமனை ஒத்த சிறந்த பெரியோன் என்பது போன்று அவனைப் பற்றிக் கொண்ட முடிபு பற்றி இங்ஙனம் விளித்தனன். நகர் வந்த இது; நீ (யாக) வந்த இது; யான் வலஞ் செய்து வணங்க எளிவந்த இது; இது— இப் பெறும் பேறு: பேற்றின் காரணம்........அன்று;........அன்று; அது குலஞ் செய் தவம்.

47. முனிவரர்-தவச்சிரேட்டர்; வரம்—சிரேட்டம். பல் நகம்—பல மலைகள். பனிவரை—கைலாய மலை. பதும பீடத்து அந்நகர்—பிரமனது பதுமா

தந்நகரும் கற்பகநாட் டணிநகரும்
மணிமாட அயோத்தி என்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ
இகல்கடந்த புலவு வேலோய். 5

48 இன்தளிர்க்கற் பகநறுந்தேன் இடைதுளிக்கும்
நிழலிருக்கை இழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடையின் நிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடுந் தொலைத்து நீகொண்டு
அன்றளித்த அரசன்றோ புரந்தரனின்று
ஆள்கின்றது அரச என்றான். 6

49 உரைசெய்யு மளவிலவன் முகநோக்கி
உள்ளத்தின் ஒருவ ராலும்
கரைசெய்ய வரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி
அரைசெய்தி யிருந்தபய னெய்தினன்மற்
றினிச்செய்வ தருளு கென்று
முரைசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியும் முனிவ னுங்கே. 7

---

சனத்தையுடைய அந்த நகரம். அணி—அழகிய. புகல்—புகலிடம்; பற்றுக்கோடு. இகல் கடந்த—பகைவராகிய கடலைக் கடந்த. புலவு—மாமிசம்.

48. இன் தளிர். இடை—இடையிடையே. நின் தளிக்கும் குடை—உனது செழித்த குடை; நின்று அளிக்கும் குடை—நிலைநின்று உயிர்களைக் காக்கும் குடை. புரந்தரன்—இந்திரன். குன்று அளிக்கும்—மலையை ஒத்த. குலம்—மேலான. முந்திய செய்யுளில் படர்க்கையில் குறிப்பாகப் புகழ்ந்தவன் இதில் நேரே வெளிப்படையாகப் புகழ்கின்றான்.

49. உள்ளத்தின்...கடல்—முனிவன் புகழுரையின் விளைவு; அவன் முகம் நோக்கிய அளவில் மேலும் பெருகலுற்றது; கரை செய்ய வரியதாயிற்று. மற்று—வினைமாற்று. அருளுக என்று—தொகுத்தல் விகாரம். தலைக்கடை என்பது—கடைத்தலை என்றாயிற்று. இலக்கணப் போலி. முரசெய்து—முரசங்கள் முழங்குகின்ற.

50 தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்
கிடையூறுத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென
நிருதரிடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர்
நால்வரினுங் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதியென உயிரிரக்குங்
கொடுங்கூற்றின் உளையச் சொன்னான். 8

51 எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையில் கனல்நுழைந்தா
லெனச்செவியிற் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
ஆருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான்
கடுந்துயரம் கால வேலான். 9

52 தொடையூற்றின் தேன்துளிக்கும் நறுந்தாரான்
ஒருவண்ணந் துயர நீங்கிப்
படையூற்ற மிலன்சிறிய னிவன்பெரியோய்
பணியிதுவேல் பனிநீர்க் கங்கை

---

50. தரு—மரங்கள். வெருவர—அஞ்சும்படி. என—போல. கூற்றின்—யமனைப் போல; இன்றேல் சொல்லினுல், அதாவது கேட்ட மாத்திரத்தில் உயிரை ஈர்வது போன்ற சொல்லினுல்: கூறிய பொருளே யன்றிச் சொல்லுந் தன்மையும் உயிரைப் பிளப்பது போன்றிருக்கும்: அச் சொற்களாவன: 'நிருதரிடை......தந்திடுதி' என்பன. 'உயிரிரக்கும் கொடுங் கூற்றின்' என்ற பாடத்திற்கு 'உயிரைத் தரும்படி இரந்து கேட்கும் இரக்கமற்ற யமனைப் போல' என்று பொருள் கொள்க.

51. எண் இலா அருந்தவத்தோன்—கணக்கில்லாத செய்தற்கரிய தவஞ் செய்து சாபானுக்கிரக வல்லமை பெற்ற முனிவன்: தயரதன் மனத்தில் அப் பொழுது எழுந்த சிந்தனை பற்றிய அடைமொழி. இயம்பிய சொல்—நிறைமொழி யாதலால் சொன்னபடி நடைபெறுதல் தவிர்க்க ஒண்ணுது; ஆதலால் உயிர்போன்ற இராமனைப் பிரிவதும் நிச்சயம்: எனவே கடுந்துயர முழந்தான். புழை—துவாரம். உள் நிலாவிய—மனத்திலுண்டான. உந்த—வெளியே தள்ள. ஆருயிர் நின்று ஊசலாட—உயிர் போகவும் மாட்டாது தரித்திருக்கவும் இயலாது போவது வருவதாகி வருந்த. கண்ணிலான்—பிறவிக் குருடன். உவமைகளின் பொருத்தத்தை ஆராய்ந்தறிக.

52. தொடை ஊற்று—இடையருது ஒழுகும் ஊற்று. படை ஊற்றம்—படைப் பயிற்சி; போர்க்கள அனுபவம். பெரியோய்—இவனுக்கு இரங்கி

புடையூற்றுஞ் சடையானும் புரந்தரனும்
நான்முகனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக் கிடையூறு யான்காப்பென்
பெருவேள்விக் கெழுக என்றான். 10

53 என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
படைத்தமுனி இறுதிக் காலம்
அன்றெனவா மெனஇமையோர் அயிர்த்தனர்மேல்
வெயில்கரந்தது அங்கு மிங்கும்
நின்றனவுந் திரிந்தமீ நிவந்தகொழுங்
கடைப்புருவம் நெற்றி முற்றச்
சென்றனவுந் ததுநகையும் சிவந்தனகண்
இருண்டனபோய்த் திசைக ளெல்லாம். 11

வேறு

54 கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி என்றவற் புகன்று நின்மகற்கு
உறுத்த லாகலா உறுதி எய்துநாள்
மறுத்தி யோவென வசிட்டன் கூறினான். 12

---

யருள்க என்னும் குறிப்பிற்று. பணி—செய்ய நின்ற கருமம். இது—வேள்வி காத்தல். புடை—பக்கம். இடையூற்றுக்கு—இடையூற்றுக்கும்.

53. என்றனன்: என்றலும் முனிவோடு எழுந்தனன்—'பெருவேள்விக்கு எழுக' என்று கூறியதும், முனிவனும் அரசன் மீது கோபத்தோடு எழுந்தனன். மண்படைத்த முனி—மன்னுயிரடங்கலும், உலகு, தேவர், நான்முகன் உள்படப் படைப்பேன் என்று தொடங்கிய துனியுறு முனிவன். இச்சொற்றொடர் இமையோர் சிந்தனைக்குக் கோடி காட்டும் நிலையில் அமைந்தது. இறுதிக் காலம் அன்று என ஆம் என இமையோர் அயிர்த்தனர்—யுகாந்த கால எல்லை வருடக் கணக்கு முடியாமையின் இன்னும் வரவில்லை. உலகைப் படைத்தவன் இப்பொழுது அழிப்பானோ? அதனால் அழியுங் காலம் வந்துற்றது போலும் என்று தேவர்கள் பலவாறு ஐயுற்றனர். வெயில் கரந்தது—சூரியன் மறைந்தது. திரிந்த—கோள் முதலியனவும் நிலை மாறின. மீநிவந்த—மேலே எழுந்த. இறுதிக் காலம் வந்துற்றதோ என்று அஞ்சுதற் குரிய அறிகுறிகளுந் தோன்றின. முனிவு எடுத்த சீற்றமாக வளர்ந்தது.

54. கறுத்த—கோபித்த; மாமுனி—(ஆனால்) பெருமை வாய்ந்த தவ முனிவன்: வசிட்ட முனிவன் ஆராய்ச்சியை ஒட்டிய அடைமொழி. கோப முடையவனாயினும் அருளும் நிறைந்தவன்; வந்த கருத்தும் நன்று; ஆதலால் பொறுத்தி என்றான். கருத்து—இராமனுக்கு உறுதிபல செய்யும் கருத்து. உறுத்த லாகலா-பிறரால் அடைவிக்க முடியாத. உறுதி-மந்திரமும், தெய்வப் படை பெறுதலும், சீதையை மணத்தலும். நாள்—நாளில். மறுத்தியோ—அவ்வுறுதிகளை அடையாமல் நீ தடுக்கலாமோ?

55 பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்து
எய்து காலமின்று எதிர்ந்த தென்னவே. 13

56 குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக என்றனன் என்ன லோடும்வந்து
அருகு சார்ந்தனன் அறிவின் உம்பரான். 14

57 வந்த நம்பியைத் தம்பி தன்னொடும்
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநல்
தந்தை நீதனித் தாயும்நீ இவர்க்கு
எந்தை தந்தனன் இயைந்த செய்கென்றான். 15

58 கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தைமுந்து
எடுத்த சீற்றம்விட்டு இனிது வாழ்த்திமேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமென
நடத்தன் மேயினான் நவைக்கண் நீங்கினான். 16

---

55. மொய்—கூட்டம்: முந்திய வெள்ளங்களின் சேர்க்கை. முடுகு மாறு போல்—விரைந்து செல்வது போல். விஞ்சை—வித்தை.

56. கொண்டு—உட்கொண்டு. திருவின் கேள்வன்—இராமன்: தந்தை அன்பு மீதூர வைத்த பெயர். அறிவின் உம்பரான்—தந்தைக்குச் செல்வப் பிள்ளையாயினும் யாவர்க்கும் மேம்பட்ட அறிவினையுடையவன்.

57. தம்பி தன்னொடும்—உடனிகழ்ச்சிப் பொருளில் வரும் 'ஒடு' உருபு பண்டைய இலக்கியங்களில் உயர்ந்தோனைக் குறிக்கும் பெயரோடு வரும்; ஈண்டு தாழ்ந்தோனைக் குறிக்கும் சொல்லோடு வந்தது. (அயோத்தி: 147.) முந்தை—அநாதியான. இயைந்த செய்க—இவர் பருவத்திற்கிசைந்த உறுதிகளைச் செய்தருள்க.

58. எடுத்த சீற்றம்—தலையெடுத்த சீற்றம்; முன்பு ஒரு செய்யுளிற் கூறியதைத் தொகுத்துச் சுட்டிற்று. (பால: 53.) நவைக்கண்—உருபுமயக்கம்; குற்றத்திலிருந்து. மற்றொரு இராமனைப் படைக்க முற்படல், அன்றி, தயரதனுக்குச் சாபமிடல், இன்றேல் வந்த கருத்தை விட்டு வெறுப்புடன் திரும்புதல் போன்றன செய்யும் துன்பத்தினின்றும் நீங்கினமையை யிட்டு உவகை வழி வந்த மன ஆறுதலோடு சென்றான் என்பதை யுணர்த்தும் பொருட்டு 'நடத்தன் மேயினான் நவைக்கண் நீங்கினான்' எனப்பட்டது. அடைமொழி முனிவன் சிந்தனை பற்றியது.

## 5. மூவருஞ் சென்ற கடுஞ்சுரம்.

---

கோசிக முனிவனும் குமரர் இருவரும் காமனுச்சிரமத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்ற பாலைவனத்தின் இயல்பை வருணிப்பன இப்பாடத்திலுள்ள கவிகள்.

அவர்கள் சென்ற இப்பாலைவனம் முன்பு மருதநிலமாயிருந்தது. தாடகை என்னும் அரக்கருடன் கொன்றுழல் கூற்றமென்னத் திரிந்து ஆண்டுள்ள மன்னும் பல்லுயிர்களை வாரித் தன் வாய்ப் பெய்து, பாழ்படுத்திக் கடுஞ் சுரமாக அழித்து மாற்றினுள். அப்படிப்பட்ட பாலைவனத்தில் ஆண்டு முழுவதும் வேனிற் பருவமன்றி வேறில்லை; பகலினும் இரவினும் மாறாத வெம்மை. வெயிலுக்கு மறைவு தேடி முடுகியோடும் யானைகளை ஆங்குள்ள பெரும் பாம்புகள் தூக்கி வளைத்துக் கொல்லும். கானல் நீரையன்றி வேறு நீர்ப்பசை மருந்துக்கும் இல்லை.

இங்ஙனம் இக்கொடுஞ் சுரத்தை வருணிக்கும் ஆசிரியர் இதன் நிலை மாற்றத்திற்குக் காரணமான தாடகையை முதலிட்ட அரக்கரின் மாறாக் கோபக் கனலையும், புதிய கூற்றனைய தோற்றத்தையும், செயலையும் உட்கொண்டு, இனிருவம் தாடகை வதத்திற்குப் படிப்பவர் மனத்தைப் பண்படுத்துவது போன்று கூறுகின்றார்.

[தெ. ப:— தாடகை வதைப் படலம்: 5—8, 10—15.]

59 பரிதிவா னவனிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே யன்றிவேறு
இருதுவொன் றின்மையால் எரிசுடர்க் கடவுளும்
கருதின்வேம் உள்ளமும் காணின்வேம் நயனமும். 1

---

59. பரிதி வானவன்—சூரியன். பருகுவான்—பருகும் பொருட்டு. விருது—வெற்றிக் கொடி. இருது—வேனில் முதலிய பருவகாலங்கள். யாவுங் கெடக் கரு வறுத்த தாடகையைப் போலவே சூரியனும் பசையறப் பருகுவான் விருது மேற்கொண்டு உலாவிற்று. எரிசுடர்க்கடவுள்—அக்கினி தேவன். வேம்—வேகும்.

60 படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவேம் இரவின்மூ டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வேம் மழையும்வேம் மின்னினோடு
இடியும்வே மென்னின்வேறு யாவைவே வாதவே. 2

61 விஞ்சுவான் மழையின்மேல் அம்பும்வே லும்படச்
செஞ்சவே செருமுகத்து அமர்செயுந் திறனிலா
வஞ்சர்தீ வினைகளான் மானமா மணியிழந்து
அஞ்சினார் நெஞ்சுபோல் என்றுமா ருநரோ. 3

62 பேய்பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
தாய்பிளந் துக்ககார் அகில்களும் தழையிலா
வேய்பிளந் துக்கவெண் தரளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம் மணியுமே வனமெலாம். 4

63 கண்கிழித் துமிழ்விடக் கனலரா அரசுகால்
விண்கிழித் தொளிருமின் னனையபன் மணிவெயில்
மண்கிழித் திடவெழுஞ் சுடர்கள்மண் மகளுடற்
புண்கிழித் திடவெழுங் குருதியே போலுமே. 5

---

60. படியின் மேல் வெம்மை:— படி—பூமி; அந்தப் பாலை வனத்தின் வெம்மை. முந்திய செய்யுள் நிலப்பரப்பின் மேலே உள்ள வெம்மையைக் கூறிற்று; இச் செய்யுள் அதனைத் தன்னுட் கவர்ந்து கொண்ட நிலத்தின் வெம்மையைக் கூறுகின்றது. நா அடி முதல் நுனி வரையில் வேகும்; ஏனெனில் இரவில் இருளும் வான் முகடும் வேகும்; பகலில் வெயில், மழை, மின்னல், இடி முதலியனவும் வெந்து சாம்பலாகும்; வேகாமல் நிற்பது ஒன்று மில்லை. வான்முகடு--அண்ட முகடு. விடியு மேல்—உதய மானால்.

61. மழையின்—மழையைப் போல. மேல்—(உடலின்)மீது. செம்செவே—மிகவும் செம்மையாக. மானமாகிய மணி. மணி—இரத்தினம். அஞ்சினார்—வஞ்சகச் செயலுக்கு அஞ்சின வீரர்.

62. பேய் அறைந்து பிளந்தெறியப்பட்டது போல. தாய்—அடிமரம். உக்க—வெளிப்பட்ட. கார் அகில்—கரிய நிறமுள்ள அகிற்கட்டை. வேய்—மூங்கில். தரளம்—முத்து. நிறைந்துள்ளன என்று ஒரு சொல் வருவிக்க. அப் பாலைவனத்தில் இம் மூன்றையுமன்றி வேறில்லை.

63. கிழித்து—பிதுக்கி. அரா அரசு—அந்நிலத்திலுள்ள பாம்பரசுகள். காலுதல்—கக்குதல். மண் கிழித்து—மண்ணைப் பிளந்து. பாம்பரசு உமிழ்ந்த மணிகள் வெயிலின் கொடுமையால் செந்நிறத்தோடு பிரகாசித்தன; அச்சுடர்கள் வெயிலால் வெடித்த பூமி தேவியின் புண்களினின்றும் எழும் இரத்தம் போன்றன.

## வேறு

64 புழுங்கிவெம் பசியொடு புரளும் பேரரா
விழுங்கவந் தெதிரெதிர் விரித்த வாயின்வாய்
முழுங்குநின் கரிபுகு முடுகி மீமிசை
வழங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே. 6

65 ஏகவெங் கனலர சிருந்த காட்டினிற்
காகமுங் கரிகளுங் கரிந்து சாம்பின
மாகவெங் கனலெனும் வடவைத் தீச்சுட
மேகமுங் கரிந்திடை வீழ்ந்த போலுமே. 7

66 கானகத் தியங்கிய கழுதின் தேர்க்குலம்
தானகத் தெழுதலால் தலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடின் விசும்பும் வேமெனு
வானவர்க் கிரங்கிநீர் வளைந்த தொத்ததே. 8

67 ஏய்ந்தவக் கனலிடை எழுந்த கானல்தேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்
வேந்தனுக் கரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்தபொற் காலுடைப் பளிக்குப் பீடமே. 9

---

64. புழுங்கி—கொடிய வெயிலின் வெப்பத்தினுலே தவித்து. வெம்பசியினுலே இரைதேடி அது கிடையாமையால் நிலத்திலே புரளும் பெரும் பாம்பு. அந்நிலையில் எதிர் பட்ட ஒரு யானையை விழுங்க வரும்: வந்ததும் யானை ஓடித் தப்ப முயலும்; ஆனுல் பாம்பு அதனை வளைத்துத் துரத்தி அது ஓடுமிடந்தோறும் வாய் அங்காந்தபடி முன்னே முன்னே நிற்கும். வாயைத் தவிர வேறு புகலிடமின்மையின் யானை பிளிறிக் கொண்டு ஓலமிட்டபடி அதனுள்ளே விரைந்துபுகும். முடுகி—விரைந்து. இப்படி யானை புகக் காரணம் மேலே சுடுகின்ற வெயிலுக்கு ஒதுக்கிடந் தேடித் திரிந்தமை. ‘மன்னும் பல்லுயிர் வாரித் தன்வாய்ப் பெய்யும்’ தாடகை முதலிய அரக்கரைப் போலவே அங்குள்ள பாம்புகளும் உயிர்களை வளைத்துக் கொல்லும்.

65. ஏக—தனிமையில். அரசிருந்த — தன்னிச்சைப்படி வீற்றிருந்த. சாம்பின—விழுந்து கிடந்தவை; எழுவாய். மாகம்—ஆகாயம். இடை—இடையிடையே.

66. கழுது—பேய். கழுதின் தேர்—பேய்த் தேர். குலம்—அவற்றின் கூட்டம். தான்—அந்த ஏக வெங்கனல். அகத் தெழுதலால்—நிலத்தினின்றும் எழுதலால். தலைக் கொண்டு—மேலிருந்து விழும் கனலோடு கூடி அதிகப்படுதலாலே. ஓடிப்போய் மேல் நிமிர்ந்து எழுமாயின் வானுலகமும் வெந்துவிடும் என்று இக்கனல் வட்டத்தை நீர் வளைத்துக்கொண்டதைப் போன்றது.

67. கானல் தேர்—கானல் நீர் போலக் காணப்படுவது. காய்ந்த கடுவனமாதலால் கானல் தேரையன்றி வேறு பிடமில்லை. கனல் பொற்காலுக்கும், நீர் பிடத்திற்கும் ஒப்பாம். பாய்ந்த—நீண்ட.

68 தாவரும் இருவினை செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகையரண் கடந்து முத்தியிற்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

---

68. ஒரு நகரை முற்றுகையிட்டுக் கைப்பற்றும் வீரர்போல என்பது குறிப்பு. தா வரும் இருவினை செற்று—துன்பம் வருதற்குக் காரணமான இரு வினைகளையும் ஒழித்து. மூவகைப் பகை—காமம், வெகுளி, மயக்கம். கடந்து—வென்று. புரிபவர்—விரும்புபவர்; அன்றிச் செய்வோர்: அதாவது மெய்ஞ் ஞானிகள். பசை—சிலேடை: ஞானிகளுக்குப் பற்று; பாவையருக்கு அன்பு. பாலைவனம் நீரின் பசையே இல்லாது முழுவதும் வறட்சியாயிருந்தது.

## 6. தாடகை வதம்.

தாடகை என்பவள் இயக்கர் குலத்திலே தோன்றிய சுகேது என்பவன் மகள். அவளைச் சுந்தன் என்னும் இயக்கர் தலைவன் மணந்து, மாரீசன் சுபாகு என்னும் மக்கள் இருவரைப் பெற்றான். இதனாற் களிப்பு மிக்க சுந்தன் அகத்திய முனிவன் ஆச்சிரமஞ் சென்று அவன்மீது மரங்களைப் பறித்தெறிய அம்முனிவன் கோபக்கனலோடு விழிப்ப எரிந்து சாம்பராயினான். கணவன் இறந்தது கண்ட தாடகை கடுங்கோபமுற்றுத் தன் இரு மைந்தருடன் அம்முனிவனை அறைகூவி யழைத்து நெருங்க, அவன் அவர்களை அரக்கராகும்படி சாபமிட்டான். அரக்கராக மாறிய மூவரும் எதிர் செய்யும் வலியிலராய் இராவணன் தாய் வழிப்பாட்டன் சுமாலியை அடைந்து, அவனோடு உறவு பூண்டு வாழ்ந்துவந்தனர். தாடகை இராவணன் ஏவலால் இங்கு வந்து முனிவன் செய்யும் வேள்வியை நலியலாயினள். இந்தத் தாடகை மூவர்க்கும் முன்னே எதிர்ப்பட, முனிவன் விதியை மேற்கொண்டு இராமபிரான் கன்னிப் போரில் அவளைக் கொன்ற வரலாறு இப்பாடத்திற் கூறப்படுகின்றது.

இவ்வரலாற்றை ஒருவர் அயலிலே நின்று கண்டாற்போன்று கண்கூடாம்படி ஒப்பற்ற முறையில் பொருளுக்கேற்ற ஓசை நலம் மிகும்படி ஆசிரியர் கூறுகின்றார். தாடகை

யின் தோற்றம், வருகை, ஆர்ப்பு, பேச்சு, வரவர நிமிர்ந்து செல்லும் கோபம், போர்த்திறம், திண்மை, வீழ்ச்சி முதலியவற்றை அந்தந்தச் சந்தர்ப்பத்துக்கேற்ற தொடைநயத்துடன் சீரியதொரு முறையில் காட்சிப்படுத்துகின்றார். இவற்றுள் சிலவற்றின் வளர்ச்சிப் படிகளைக் காட்டுந் திறம் சிந்தித்துணரற்பாலது. உதாரணமாக, அவளுடைய பற்களின் தோற்றத்தைப் பற்றி நோக்குமிடத்து முதலில் அவள் சாதாரணமான கோபத்தோடு வந்த பொழுது 'எயிறென்னும் பிறைக்கடை பிறக்கிட மடித்த பில வாயளாக'த் தோன்றினள். பின்பு மூவரையுங் கண்டபின் கோபம் விஞ்ச 'மதித்திண் பாகமெனும் முற்றெயிறு அதுக்கி'னாள். ஈற்றில் அளவு கடந்த கோபத்தோடு போர் செய்து மடிந்து கீழே கிடந்தபொழுது 'தடியுடை எயிற்றுப் பேழ்வாயுடன்' காணப்பட்டாள். மற்றொரு உதாரணம் அவளது கோபக்கனல் வெளிப்பட்ட கண்ணின் வருணனை. முதலில் வந்தபொழுது, 'வடவைக் கனல் இரண்டாய் நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்'. பின்பு மூவரையுங் கண்டதும் 'மேக பவை இற்றுக விழித்தாள்'. போர் தொடங்குப்பொழுது, 'தீய வெங்கண் தீயொடு' சூலத்தை வீசிப் புதிய கூற்றைப்போல நின்றாள். இங்ஙனம் அவள் தோற்றம் முதலியவற்றில் ஏற்பட்ட மாற்றங்களை ஒப்பிட்டுத் தொடர்பு செய்து வளர்ச்சியின் படிகளை உய்த்துணர்க.

இப்படலத்தில் இந்நூல் முழுதோடும் இசையுற்ற இராமபிரான் உயர் குணத்தின் ஒரு பண்பும், கன்னிப் போரில் அன்னவன் காட்டிய வீரத் திறலும் செவ்விதிற் காட்டப்படுகின்றன. தாடகை 'உயிர்க்குத் துன்னெனும் வினைத் தொழில் தொடங்கிய' பொழுதும் இராமபிரான் பெண்ணென நினைந்து அவள் மீது வடிக்கணை தொடுக்கிலன். முனிவன் பல காரணங் காட்டி, 'அரக்கியைக் கோறி' என்று ஏவிய பொழுது, 'மெய்ய! நின்னுரை வேதமெனக்கொடு செய்கையன்றோ அறஞ் செய்யுமாறு' என்று கூறினனேயன்றி, அவளைக் கொல்ல முற்பட்டிலன். அரக்கி வீசிய சூலமாகிய காலவெந்தி தன்னை நோக்கி வந்த பின்பே அம்பெய்தான்; எய்த அம்பும் அவள் விட்ட சூலப் படையைத் துண்டிப்பதற்கே விடப்பட்டது. அவள் மேலும் போர்செய்து கன்மாரி பெய்த பின்பே ஒரு சுடுசரந் தாங்கு,

அவளுயிர் கவர்ந்தான். மெய்வீரர்க்குரிய பொறுமையும் நிதானமும் இக் கன்னிப் போரிலேயே வெளிப்பட்டு நின்றன.

இராமபிரானுக்கு இயல்பாக உரிய விரைவும் யாவருங் கண்டு அதிசயிக்கும் கோல விற்றொழிலும் வெளிப்பட்டு நின்றன. தாடகை விட்ட சூலத்தைக் கண்டமாக்கிய அம்பைத் தொடுப்பதையோ, வில்லை வளைப்பதையோ, நாணேற்றியதையோ பக்கத்தில் நின்றவர் கண்டிலர். இவற்றை அவர் காண்பதற்குரிய கால எல்லைக்குள் எல்லாம் முடிந்து சூலம் துண்டங்களாக விழுந்ததையே காண்பாராயினர். எல்லாம் அவ்வளவு விரைவாகச் செய்து முடிக்கப்பட்டன.

[தே. ப:—தாடகை வதைப்படலம்: 47—56; 65—71; 73—77.]

69 கைவரை எனத்தகைய காளையுரை கேளா
ஐவரை அகத்திடை அடைத்தமுனி ஐய
இவ்வரை இருப்பதவள் என்பதனின் முன்னம்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள். 1

70 சிலம்புகள் சிலம்பிடை செறிந்தகழ லோடும்
நிலம்புக மிதித்தனள் நெளிந்தகுழி வேலைச்
சலம்புக அனல்தறுகண் அந்தகனும் அஞ்சிப்
பிலம்புக நிலக்கிரிகள் பின்தொடர வந்தாள். 2

---

69. கைவரை—யானை. காளை—இராமபிரான். அவன் உரை 'எங்குறைவது இத் தொழில் இயற்றுபவள்' என்பது. ஐவர்—ஐம்பொறி. அடைத்த—அடக்கிய. இவ்வரை—சமீபத்தில் உள்ள இந்த மலையே. மைவரை—கரிய மலை. அவள் சரீரத்திற்கு மலையும் செம்மயிருக்கு நெருப்பும் உவமை. ஈற்றடி தாடகையின் தோற்றத்தை ஒரு சொல்லில் தொகுத்துக் கூறிற்று; மேல் வருஞ் செய்யுள்களில் அது விரித்துக் கூறப்படும். உவமானத்திலின்றே உவமேயம் விளங்கி நின்றது.

70. சிலம்புகள்—மலைகள். செறிந்த—கற்களாகப் பதித்த. காலும் சிலம்புகளும் பூமியிலே அழுந்தும்படி மிதித்தாள்; அதனால் பூமி நெளிந்தது; அப்படிக் கால் பதிந்ததனுல் ஆகிய குழிகளில் கடல்நீர் உள்ளிடும்படி வந்தாள். அனல் தறுகண் அந்தகன்—நெருப்புப் போற் கொடிய தன்மையும் அஞ்சாமையும் உடைய யமன். அஞ்சி பிலம் புக—இவளைக் கண்டு பயந்து மலைக்குகையிலே ஒடி ஒளிக்க. நிலக் கிரிகள் பின்தொடர—இவள் வரும் வேகத்தால் பூமியிலே வேரூன்றிய மலைகள் பெயர்ந்து இவளைப் பின்தொடர்வது போன்று பின்னே விரைந்து செல்ல.

71 இறைக்கடை துடித்தபுரு வத்தள்எயி றென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
மறைக்கடை அரக்கிவட வைக்கனல் இரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள். 3

72 கடங்கலுழ் தடங்களிறு கைகொடுகை தெற்று
வடங்கொள நுடங்குமிடை யாள்மறுகி வானோர்
இடங்களும் நெடுந்திசையும் ஏழுலகம் எங்கும்
அடங்கலும் நடுங்கஉரும் அஞ்சநனி ஆர்த்தாள். 4

73 ஆர்த்தவரை நோக்கிநகை செய்தெவரும் அஞ்சக்
கூர்த்தநுதி முத்தலை அயிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு வாய்முழை திறந்தோர்
வார்த்தையுரை செய்தனள் இடிக்குமழை அன்னாள். 5

74 கடக்கரும் வலத்தெனது காவலிதில் யாரும்
கொடக்கரு வறுத்தனென் இனிச்சுவை கிடக்கும்
விடக்கரி தெனக்கருதி யோவிதிகொ டுந்தப்
படக்கரு தியோபகர்மின் வந்தபரி சென்றே. 7

---

71. இறை—சிறிது. எயிறு என்னும் பிறை—பல்லாகிய பிறைச் சந்திரன்: இளம்பிறை போன்ற பல். கடை—கடைவாயிலே. பிறக்கிட—வெளியே விளங்கிக் காட்டும்படி. பிலவாய்—குகை போன்ற வாய். மறைக் கடை அரக்கி—வேத நெறிக்குப் புறம்பான நெறியிலே சென்ற அரக்கி. வடவைக் கனல்—வடவா முகாக்கினி. நிறைக் கடல்—நீர் நிறைந்த கடல். வடவை சிவந்த கண்ணுக்கும் கடல் கரிய முகத்துக்கும் உவமானம்.

72. கடம் கலுழ்—மதநீர் ஒழுகுகின்ற. தடம் களிறு—பெரிய யானைகள். அவற்றைத் துதிக்கையோடு துதிக்கை முடிந்து ஆரமாக அணிந்ததனால் துவளுகின்ற இடையினள். தெற்று—தெற்றி; பின்னி. மறுகி—மனங் கலங்கி (நடுங்க). உரும்—இடி யோசை. நனி—மிகுதியாக.

73. ஆர்த்து அவரை நோக்கி நகை செய்து எவரும் அஞ்ச உரை செய்தாள்; சூலத்தைப் பார்த்து எயிறு தின்று வாய்திறந்து உரை செய்தாள். நுதி—நுனி. அயில்—சூலம். கூர்த்த நுதி என்பதற் கேற்பக் கொடிய கூற்று எனப்பட்டது. எயிறு தின்று—கோபத்தாற் பற்களை நெறு நெறெனக் கடித்து. பகுவாய் முழை திறந்து—(பேரராவைப் போன்று) விரித்த வாயாகிய குகையைத் திறந்து. மேகம் இடிப்பது போன்று உரை செய்தாள் என்பது புலப்பட எழுவாய் ஈற்றில் நின்றது.

74. கடக்க அரும் வலம்—ஒருவராலும் மீற முடியாத வலிமை. காவல் இதில்—காவலுக்கு உட்பட்ட இந்த இடத்தில். கரு அறுத்தனென்-வேரோடு அழித்தேன். விடக்கு—மாமிசம். உந்த—தள்ள. பட—அழிய.

75 மேகமவை இற்றுக விழித்தனள் புழுங்கா
மாகவரை அற்றுக உதைத்தனள் மதித்திண்
பாகமெனும் முற்றெயி றதுக்கிஅயில் பற்று
ஆகமுற உய்த்தெறிவென் என்றெதிர் அழன்றாள். 7

76 அண்ணல்முனி வற்கது கருத்தெனினும் ஆவி
உண்ணென வடிக்கணை தொடுக்கிலன் உயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுள ளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான். 8

## வேறு

77 வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றாளயில்
எறிந்து கொல்வெனென் றேற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்தெலாம்
அறிந்து நான்மறை அந்தணன் கூறுவான். 9

78 தீதென் றுள்ளவை யாவையுஞ் செய்தமைக்
கோதென் றுண்டிலள் இத்தனை யேகுறை
யாதென் றெண்ணுவ திக்கொடி யாளையும்
மாதென் றெண்ணுவ தோமணிப் பூணினாய். 10

---

75. இற்று உக—பொடியாய்ச் சிதறும்படி. புழுங்கா—மனம் வெதும்பி. மாக வரை—ஆகாயம் வரை அளாவிய மலை. முற்றெயிறு—கோரப் பற்கள். திண்பாகம்—வலியகூறு; அதாவது பாதியளவு. நடந்துவந்த பொழுது 'எயிறென்னும் பிறை'யானது கடுங்கோப முற்ற நிலையில் 'மதித்திண் பாகமெனும் முற்றெயி'றாகக் காட்டிற்று. ஆகம் உற—மார்பிலே அழுந்தும்படி. எதிர்—எதிரிலே. அழன்றாள்—கோபித்தாள்.

76. அண்ணல் முனிவன்—பெருமை பொருந்திய முனிவன். அது—அவள்மீது வடிக்கணை தொடுப்பது. வடிக்கணை—கூர்மையான அம்பு. துண்ணெனும்-அச்சந்தரும். பெருந்தகை-இராமன். அவள்மீது இரங்கியமையால் பெருந்தகை என்றார்.

77. வெறிந்த—நெருங்கிய. ஏற்கவும்—போருக்கு எதிர்த்து வரவும். பார்க்கிலா—அதைப் பொருட்படுத்தாத.

78. யாவும்—ஒன்று விடாமல் எல்லாவற்றையும். கோது—சாரமற்ற பொருள். குறை—செய்யாமல் நின்ற குறை. இவளை என்னவென்று எண்ணுவது? பெண்ணென்றா? பேயென்றா? இவளையும் ஒரு பெண்ணென்று எண்ணுவது பொருத்தமாகுமோ?

79 மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையில் தீமையது ஏதைய
பின்னும் நாழ்குழல் பேதைமைப் பெண்ணிவள்
என்னும் தன்மை எளிமையின் பாலதே. 11

80 ஈறில் நல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்
ஆறி நின்றது அறனன்று அரக்கியைக்
கோறி என்றெதிர் அந்தணன் கூறினான். 12

81 ஐயன் அங்கது கேட்டறன் அல்லவும்
எய்தி னலது செய்கவென் றேவினால்
மெய்ய நின்னுரை வேத மெனக்கொடு
செய்கை யன்றோ அறஞ்செயு மாறென்றான். 13

82 கங்கைத் திம்புனல் நாடன் கருத்தையம்
மங்கைத் தீயனை யாளு மனக்கொளாச்
செங்கைச் சூலவெந் தீயினைத் தீயதன்
வெங்கண் தீயொடு மேற்செல வீசினாள். 14

---

79. வாரி—ஒன்றாகத் திரட்டி. புன்மை—கீழ்மை. தீமையது—கொடியது. இவளையும் ஏனையோரைப் போன்ற பெண்பால் என்று கருதிக் கொல்லப் பின்வாங்கும் குணம் அறிவின் பலவீனத்தின் பாற்படுமேயன்றி மன உறுதியின் பகுதியன்று.

80. ஈறு இல்-அழிவில்லாத. இவளைக் கோபித்து நின்று. ஆறி நின்றது அறனன்று—இவள்மீது சீற்ற மின்றி அமைதியாக நீ நின்றமை அறநெறிப் பட்ட செயலன்று; எளிமையின் பாலது. கோறி—கொல்லுதி. எதிர்—முன்னின்று.

81. அறனல்லாத செயல்களும் நேர்ந்தால். மெய்ய—மெய்மையின் வழி நிற்பவனே!

82. மங்கைத் தீ அனையாள்-வடவைத் தீ குதிரைத் தீ; இவள் மங்கைத் தீ: பெண்ணுருவில் வந்த வடவைக் கனல் போன்றவள். சூல வெம் தீயினை—சூலமாகிய கொடிய நெருப்பை. மேற்செல—இராமன் மேலே செல்லும்படி. வீசினாள்—எறிந்தாள். மங்கைத் தீ அனையாள் சூல வெம் தீயினை வெம் கண் தீயொடு வீசினாள்; எல்லாம் தீ மயமாகத் தோன்றிற்று.

83 புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொள் மூவிலைக் காலவெந் தீமுனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வருங் கோளென வந்ததே. 15

84 மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
காலனைப் பறித் தக்கடி யாள்விட்ட
சூல மற்றன துண்டங்கள் கண்டனர். 16

85 அல்லின் மாரி அனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரை யிற்கடல் தூர்ப்பதோர்
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினன். 17

---

83. புதிய கூற்றனையாள்-சூலம் வீசிய பொழுது அவளுடைய தோற்றம்; பழைய யமனைக் கொடுமையில் வென்றவள். புகைந்து—மனம் புகைந்து; கடுங் கோபத்தோடு. கதிர்கொள்—ஒளியைக் கொண்ட: ஏவும் போது புகை கிளம்பிற்று; போகும் போது நெருப்புக் கொழுந்துவிட்டெரிந்தது. கால வெம் தீ—அது மேல் வரும் பொழுது சங்கார காலத்துக் கொடும் நெருப்பைக் கான்றபடி சென்றது. விதி—கட்டளை. உவாமதி—பூர்ண சந்திரன். கோள்—இராகு.

84. மாலும்-இராம பிரானும். இப்பொழுது காட்டிய வில்லின் திறமை யாவரையும் பிரமிக்கச் செய்ததால் 'மால்' என்றார். அக்கணம்—கோளென வந்த அக்கணம். தொட்டதும்—அம்பு தொடுத்ததையும். கோல வில் கால் குனித்ததும்—அழகிய வில்லின் நுனியை வளைத்ததையும் (கண்டிலர்.) வில் வளைத்ததைக் காணப் புக்கவர் பார்வை விழுமுன் வளைத்தல், நாணேற்றல், அம்பு தொடுத்தல், சூலத்தை அறுத்தல் எல்லாம் முடிந்து துண்டமாக இற்ற சூலம் விழுதலையே கண்டனர்: எல்லாம் அவ்வளவு விரைவாக நடைபெற்றன. காலனைப் பறித்து—யமனிடத்திலிருந்து பிடுங்கி. அற்றன வாகிய துண்டங்கள்.

85. இன்—சாரியை. அல்—இருள். இருளையும் மேகத்தையும் ஒத்த நிறத்தவள். சொல்லின் மாத்திரையில்—நிகழ்ச்சியைச் சொல்லுதற்குரிய கால எல்லையில்: மிக விரைவில். (யுத்த: 150.) கல்லின் மாரி—கல் மழை. இரண்டு கைகளாலும் மாறி மாறி இடைவிடாமற் பெய்தாள். வில்லின் மாரி—வில்லி னின்றும் வெளிப்படும் அம்பு மழை.

## வேறு

86 சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னுள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்காது அப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்
றன்றே. 18

87 பொன்னெடுங் குன்ற மன்னான் புகர்முகப் பகழி என்னும்
மன்னெடுங் கால வன்காற் றடித்தலும் இடித்து வானிற்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேகம்
மின்னொடும் அசனி யோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள். 19

88 பொடியுடைக் கான மெங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகள் தோறும்

---

86. சுடுசரம் என்றமையால் சொல் சாப மொழி: அகத்திய முனிவன் சாப மொழி போன்ற சரம். சொல் ஒக்கும் சுடு சரம். எங்ஙனமெனில் கடிய வேகச் சுடு சரம். கடிய சரம்—வயிரமான பொருளையும் ஊடுருவும் அம்பு. வேகச் சரம் – கடினமான பொருளைத் துளைத்தாலும் வேகம் அடங்காத சரம். சுடு சரம்—நெருப்புப் பட்டாற் போற் சுடுகின்ற அம்பு. கரிய செம்மல்—இராம பிரான். அல்—இருள். நிறத்தினள்—தாடகை. அத்தகைய அம்பை இவள்மீது விட்டதும் அது கடிய சரமாதலால் அவளது வயிரக் குன்றக் கல்லை யொத்த நெஞ்சினை ஊடுருவிற்று; வேகச் சரமாதலால் அந் நெஞ்சிலே தங்காமல் அப்புறங் கழன்றோடியது. அப்புறஞ் சென்றமைக்கு உவமானம் கல்லாப் புல்லர்க்குக் கற்ற நல்லோர் சொன்ன பொருள்.

87. புகர்முகப் பகழி—கூர்மையான நுனியையுடைய அம்பு. காலவன் காற்று—ஊழிக்காற்று. கல் நெடு மாரி—நெடிய கல்மாரி, 'பெய்ய' என்றமையால் வீழ்ந்த பொழுதும் எடுத்த கற்களைக் கைவகுத்த நிலையில் விழுந்தாள் என்பது பெறப்பட்டது. அசனி—இடி. ஊழிக்காற்றடித்தல் அம்பு பட்டமைக்கும், கடையுகத் தெழுந்த மேகம் மின்னொடும் அசனியோடும் வீழ்தல் மாரி யனைய நிறத்தவள் பிறை எயிற்றோடும் அலறலோடும் வீழ்ந்தமைக்கும் உவமானம்.

88. பொடி—புழுதி. குருதிநீர் பொங்க—உதிர வெள்ளம் மிகும்படி. தடி—மாமிசம். எயிற்றுப் பேழ்வாய்—பற்களெல்லாம் வெளிப்படத் திறந்த வாய். முன்பு பிறை எயிறு; பொங்கியவழி மதித்தின் பாகமெனும் முற்றெயிறு: வீழ்ந்த நிலையில் இப்பொழுது தடியுடை எயிற்றுப் பேழ்வாயாக முழுவதும் தோன்றிற்று. தலைகள் தோறும் முடியுடை அரக்கன்—இராவ

முடியுடை அரக்கற்கு அந்நாள் முந்தியுற் பாத மாகப்
படியிடை அற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை ஒத்தாள். 20

89 கான்திரிந் தாழி யாகத் தாடகை கடின மார்பத்து
ஊன்றிய பகழி வாயூடு ஒழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக் கான மெல்லாம் ஆயின து அந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானம் தொடக்கற்று வீழ்ந்த
தொத்தே. 21

90 வாசநாண் மலரோன் அன்ன மாமுனி பணிம றாத
காசுலாங் கனகப் பைம்பூண் காகுத்தன் கன்னிப் போரில்
கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி
ஆசையால் உழலும் கூற்றும் சுவைசிறி தறிந்த தன்றே. 22

---

னன். முதல்நாட் போரிலேயே 'சொல்லும் அத்தனை யளவையில் மணிமுடி' துறப்பவனுதலின், அவன் உயிருக்கு மட்டுமன்றி முடிக்கும் வந்த ஆபத்துக்கு உற்பாதம் என்பது காட்ட இவ்வடைமொழி வந்தன. உற்பாதம்—துர்நிமித்தம். படி—பூமி. பதாகை—கொடி.

89. கான்திரிந்து ஆழியாக—மருதவைப்பு காடாகி அக்காடு மறுபடியும் நிலை மாறி ஒரு கடல்போலாகும்படி. கடின மார்பம்—'வயிரக் குன்றம்' போன்ற கடின மார்பு. ஊன்றிய—நன்கு உருவிப் பதிந்த. ஒழுகிய—மலை யருவி போன்று இடையறாது பொங்கி வெளிப்பட்ட. ஆன்ற—விசாலமான. ஆயினது—(வெள்ளம்) பரந்தது.

90. வாச நாள் மலரோன் அன்ன மாமுனி—பிரமதேவனைப் போன்ற முனிவன். மலரோன் வெளியிட்ட வேதம் போன்று இம் முனிவன் விதியும் மேற் கொள்ளற்பாலது என்பது குறிப்பு. இராமபிரான் அங்ஙனம் கருதியமை பற்றிய அடைமொழி. பணி—கட்டளை. காசு-இரத்தினம். கனகப் பைம்பூண்—பசிய பொன்னாற் செய்த ஆபரணம். கன்னிப் போர்—முதற் போர். கூசி—கூச்சங்கொண்டு. குலம்—கூட்டம். உழலும்—சமயம் நோக்கித் திரியும். கூற்றும்—யமனும்.

---

## 7. மிதிலையிற் பிராட்டியைக் கண்டமை.

கன்னிமாடத்திலே தோழியர் நடுவிலே நின்ற சீதா பிராட்டியின் பேரழகை முனிவன் பின்னே சென்ற இராம பிரான் கண்ட நிகழ்ச்சி இப்பகுதியிற் கூறப்படுகின்றது.

இந் நூலில் பிராட்டியைப் பற்றி முதன் முதலாகக் கூறும் சந்தர்ப்பம் மிதிலைக்காட்சிப் படலத்திலேயே எழுகின்றது. அப்படல ஆரம்பத்திலேயே ஆசிரியர் அவள் திருமகளே என்பதை 'மையறு மலரின் நீங்கி ...வந்து செய்யவள் இருந் தாள்' என்று தோற்றுவாய் செய்து, அடுத்தபடி அவள் வரம்பில் பேரழகினள் என்று ஒரு சொல்லால் தொகுத் துணர்த்தி, மறுபடி 'ஆதரித்து அமுதில் கோல் தோய்த்து அவயவம் அமைக்குந் தன்மை யாதெனத் திகைக்குமல்லால் மதனற்கும் எழுதவொண்ணுச்சீதை' என்று ஒருவாறு விளக்கி, இப் பகுதியில் அவ்வரம்பில் பேரழகினைக் கட்டுரைத்துச் செல் கின்றார். மூன்றும் செய்யுளில் சீதாபிராட்டியின் மேனியொளி, அவயவ அமைப்பு, அமுதமொத்த தன்மை இம் மூன்றும் ஒரு சேரப்பெற்றமையினால் விளையும் இன்பம் இவற்றை வகுத் துரைத்து, மேல்வரும் பாடல்களில் அவற்றை விரித்துக் கூறி, ஈற்றில் 'எண்ணரும் நலத்தினள்' என்று நிலை நாட்டுகின்றார்.

இந்த வருணனையை அடிமுதல் முடிவரையில் பலதிறப் பட்ட உவமைகளையிட்டுச் செய்யாமல் முழுவதையும் சமுதாய மாக வைத்துக் கூறுவது குறிப்பிடற்பாலது. சூர்ப்பநகை இராவணனிடம் பிராட்டியின் அழகை விரித்துரைக்கு மிடத்தும் இச்சிரிய முறைபற்றியே கூறுகின்றார். (பாடம்: 30.)

[தெ. ப:— மிதிலைக்காட்சிப் படலம்: 21—27; 29—32; 34—35.]

91 பாகொக் குஞ்சொற் பைங்கிளி யோடும் பலபேசி
மாகத் தும்பர் மங்கையர் நாண மலர்கொய்யும்
தோகைக் கொம்பின் அன்னவர்க் கன்னம் நடைதோற்றுப்
போகக் கண்டே வண்டின மார்க்கும் பொழில் கண்டார். 1

---

91. பாகு—வெல்லப் பாகு. மாகத்து உம்பர் மங்கையர்—பெரிய மேலு லகத்துப் பெண்கள். பேசி, நாண, மலர் கொய்யும் பெண்கள். நாண—பேச் சின் இனிமையைக் கண்டு நாண. தோகை அன்னவர், கொம்பின் அன்னவர். தோகை—மயில். கொம்பு—பூங் கொம்பு. சாயலில் மயிலையும் அழகில் பூங் கொம்பையும் ஒத்தவர். வண்டினம் ஆர்க்கும்—அன்னம் நடை தோற்றமைக் குப் பரிகசிப்பது போன்று ஒரு கூட்டமாக வண்டுகள் ஆரவாரஞ் செய்யும். வழியிலே சென்றவர்களது கவனம் பாகொக்கும் சொல்லினிமையால் இழுக்கப் பட, திரும்பிப் பார்த்தபொழுது அவர்கள் கண்ட காட்சி அவர்கள் மனதிற்பட்ட வரிசையிற் கூறப்பட்டது.

92 உம்பர்க் கேயும் மாளிகை ஒளி நிழல்பாய
இம்பர்த் தோன்றும் நாகநன் னாட்டின் எழில்காட்டிப்
பம்பிப் பொங்கும் கங்கையின் ஆழ்ந்த படைமன்னன்
அம்பொற் கோயிற் பொன்மதில் சுற்றும் அகழ்கண்டார். 2

93 பொன்னின் சோதி போதினின் நாற்றம் பொலிவேபோல்
தென்னுண் தேனின் தீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே கழிபேடோடு
அன்னம் மாடும் முன்றுறை கண்டங் கயல்நின்றார். 3

94 செப்புங் காலை செங்கம லத்தோன் முதல்யாரும்
எப்பெண் பாலுங் கொண்டுவ மிப்போர் உவமிக்கும்

---

92. உம்பர்—தேவர்கள். ஏயும்—தங்குதற்குப் பொருத்தமான சிறப்பினையுடைய. ஒளி — வரிசை. பாய — அகழியிலே நெடுந்தூரம் பரந்து தோன்ற. இதனால் அகழியின் அகலம் உய்த்துணர வைக்கப்பட்டது. அப்படிப் பாய்ந்த ஒளி நிழல் தேவ லோகத்தின் அழகைக் காட்டிற்று. இம்பர்—இவ்வுலகில். நாகநாடு—தேவலோகம். பம்பி—மிகுந்து. கங்கையைப் போல ஆழ்ந்த அகழி; மதிலைச் சூழ்ந்துள்ள அகழி. மன்னன்—சனகன்.

93. போல்—அசை. கவி இன்பம்—சீதா பிராட்டி; கவியின்பமாகிய சீதா பிராட்டிக்கு ஒரு பெயர் போல நின்றது. பொன்னின் சோதி, போதினின் நாற்றம் பொலிவு, தேனின் தீஞ்சுவை இவற்றையுடைய சீதா பிராட்டி. பொன்னின் சோதி—வரம்பில் பேரழகு சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் குறிக்கும். 'உருவ நாறும் வான் சுடர்ச் சோதி வெள்ளம்' (ஆரணிய: 32.) போதின் இன் நாற்றம் பொலிவு—மலரினது நறுமணம், அழகு முதலியவற்றோடு கூடிய தன்மை: உறுப்பு முதலியவற்றின் இசைவுற்ற சேர்க்கையைக் குறிக்கும். தென் உண் தேனின் தீம் சுவை—வண்டுகள் படிந்துண்ணும் சிறந்த தேனினது இனிய சுவை: அவ்வழகு தெவிட்டாத இன்ப வுருவாய் உணர்ச்சியிற் படிதலைக் குறிக்கும். இம்மூன்றையுமுடையவள். இம் மூன்று முடைமையின் சொல் நயம், பொருள் நயம், ஓசை நயம் என்னும் மூன்றையுமுடைய கவியின் உருவமுடையவளாகிய சீதா பிராட்டி. கவி 'உயிருருக்கும் புக்கு உணர்வுருக்கும்'. (சடகோபரந்தாதி: 13.) அது போலவே மேனியொளியும் சாயலும் இன் சொல்லும் கண்ணையும் கருத்தையும் கவரும் இயல்பினள். இத்தகையவளைக் கன்னிமாடத்தின் மேலிடத்துள்ள முற்பக்கத்திலே கண்டு அதற்கு மேலே செல்ல மாட்டாது அவ்விடத்தருகே நின்றார். அன்பிலே மிகுந்த பெண் அன்னங்களோடு ஆண் அன்னங்கள் விளையாடா நின்ற முன்துறை.

94. எப் பெண்பாலும்—எப் பெண்பாலுக்கும். உவமிக்கும் அப்பெண்—இலக்குமி தேவி. தானே ஆயின போது—அத்தாமரையாளே சீதா

அப்பெண் தானே யாயின போதிங் கயல்மற்றோர்
ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடி உரைசெய்கேன். 4

95 உமையா ளொக்கும் மங்கையர் உச்சிக் கரம்வைக்கும்
கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார்
இமையா நாட்டம் பெற்றில மென்றார் இருகண்ணால்
அமையா தென்றார் அந்தர வானத் தவரெல்லாம். 5

96 வென்றம் மானைத் தாரயில் வேலுங் கொலைவாளும்
பின்றம் மானப் பேர்கய லஞ்சப் பிறழ் கண்ணாள்
குன்றம் மாடக் கோவின் அளிக்குங் கடலன்றி
அன்றம் மாடத் தும்ப ரளிக்கும் அமுதன்னாள். 6

97 பெருந்தேன் இன்சொற் பெண்ணிவள் ஒப்பாள் ஒருபெண்ணைத்
தருந்தா னென்றால் நான்முகன் இன்னுந் தரலாமே
அருந்தா அந்தத் தேவர் இரந்தால் அமிழ்தென்னும்
மருந்தே அல்லாது என்னினி நல்கும் மணியாழி. 7

---

பிராட்டியாக அவதரித்தாள். ஒப்பு—உவமிக்கும் பொருள். எந்த இடத்திலே பெற்று எந்த முறையிலே ஆராய்ந்து கூறுவேன். அவளுக்கு அவளையன்றி வேறு உவமை இல்லை.

95. 'பொன்னின் சோதி' என்பதை விரித்துக் கூறுகின்றது. கமை—பொறுமை: 'க்ஷமா' என்னும் வட சொல்லின் திரிபு. மற்றைய குணங்களுக்கும் உபலட்சணம். காட்சிக் கரை—அழகாகிய கடலுக்கு எல்லை. 'எண் பிறங்கு அழகிற்கு எல்லையில்லையாம்': (ஆரணிய:34.) காணார்—காணாராகி. அந்தர வானத்தவர்—இமையா நாட்டம் பெற்றுள்ள தேவகணங்கள். அமையாது—முடியாது.

96. இது முதல் மூன்று செய்யுள் 'போதினின் நாற்றம், பொலிவு' என்பதை ஓராற்றான் விரிக்கும். அம் மானை வென்று. அம்மானை—அழகிய மானை. தார் அயில் வேல்—வெற்றிமாலை சூடிய கூரிய வேல். பின்ற—பின்னிடும்படி. மானம்—பெருமை; உவமிக்கப்படும் சிறப்பு. பேர் கயல்—போர் செய்தற்குக் கிளம்புவது போன்று பெயர்கின்ற கயல்மீன். மானை முழுவதும் வென்று, வேல் வாள்களைப் புறங்கெட ஓட்டி, போட்டியிடவரும் கயல் மீன் இடம் பெயரும்படி பிறழ்கின்ற கடலினும் பெரிய கண்ணாள். (ஆரணிய:117.) குன்றம் ஆட—மந்தர மலை சுழலுதலாலே. கோவின்—'கோ'என்ற அழுகைக் குரல் போன்ற ஆரவாரத்தோடு. மாடம்—கன்னிமாடம். கடலமுதம் கதறக் கதற வருத்திப் பெறப்பட்டது: இவ் வமுதம் கொம்பில் மலரும் பூவைப் போன்று மாடம் தானே கனிந்தளித்தது என வேறு பாடு கூறப்பட்டது.

97. பெருமை பொருந்திய தேன். தரும்—தாரும். தான்—அசை. என்றால்—என்று வேண்டினால். அருந்தா—உண்ணாத; வேறொன்றையும் உண்ணாத. இரத்தினங்களுக்குப் பிறப்பிடமாகிய கடல்.

98 நன்னே ரில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே ஆரமிர் தேயென் றடிபோற்றி
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறை சாரப்
பொன்னே சூழும் பூவி னொதுங்கிப் பொலிகின்றாள். 8

99 பொன்சேர் மென்காற் கிண்கிணி யாரம் புனையாரம்
கொன்சே ரல்குல் மேகலை தாங்கிக் கொடியன்னார்
தன்சேர் கோலத் தின்னெழில் காணச் சதகோடி
மின்சே விக்கும் மின்னர சென்னும் படிநின்றாள். 9

100 கொல்லும் வேலும் கூற்றமு மென்னும் இவையெல்லாம்
வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றிது குன்றுஞ் சுவருந்திண்
கல்லும் புல்லுங் கண்டுரு கப்பெண் கனிநின்றாள். 10

---

98. அன்னே—தாயே. முன்னே முன்னே—நடந்து செல்லுமிடங்களி லெல்லாம் முற்பக்கமாக. மொய்ம்மலர்—நெருக்கமான மலர். முறை சார—முறைமையோடு நிற்க. பொன்—மகரந்தம். பூவினொதுங்கி—பூக்களின் மேல் அடியெடுத்து வைத்து.

99. 'தென்னுண் தேனின் தீஞ்சுவை' என்பதை விரிக்கின்றது. மென் கால் கிண்கிணி—மென்மையான காலில் அணிந்த சதங்கை. ஆரம்—இரத்தின மாலை. புனை ஆரம்—புனைகின்ற பூமாலை. கொன்—பெருமை. மேகலை—இடுப்பில் அணியும் மேகலாபரணம். தாங்கி—வருந்திச் சுமந்து. தன்சேர் கோலத்து இன் எழில் காண—தன்னுடைய பல உறுப்புக்களின் இனிய சமுதாய அழகைக் காண.

100. இதுவும் அடுத்த செய்யுளும் 'செஞ்சொற் கவி யின்பம்' என்பதை ஓராற்றான் விரிப்பன. இவை யெல்லாம்—இவற்றை யெல்லாம். வெல்லும் வெல்லும்—நிச்சயமாக ஒருங்கு வெல்லும். மதர்க்கும் விழி—பெருமிதந் தோன்றும் பார்வையுடைய விழி. சொல்லும் தன்மைத்து அன்று அழகு எழுத ஒண்ணாது; கரைகாண ஒண்ணாது; அது போலவே சொல்லவும் ஒண்ணாது. கடினமான குன்று போன்ற உரம் படைத்த நெஞ்சமும் மெல்லிய வலியில் நெஞ்சமும் செஞ்சொற் கவியின்பத்தில் ஈடுபட்டு உருகி நிற்பது போலவே கல்லும் புல்லும் கண்ட மாத்திரத்தில் உருகும்படி நின்றாள். பார்வை யளவிலேயே மான் வேல் வாள் கயல் முதலியவற்றை வென்றது போலவே கண்டோர் யாவரும் மன உரன் வேற்றுமையின்றி ஒரே மாதிரி உருகும்படி நின்றாள். பெண் கனி—பெண்மை என்னும் மரத்திலே பல்லாயிரம் ஆண்டு களுக்கு ஒரு முறை தோன்றும் அரிய கனி போன்றவள்; பெண்களுக்குரிய சீரிய பண்புகளை யெல்லாம் பத்தும் பத்தாகப் பெற்று அவர்களுக்குத் தலைமை சான்றாள்.

### வேறு

101 வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலான்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கள்நா யகற்கினி யாவ தாங்கொலோ. 11

102 இழைகளுங் குழைகளும் இன்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய வெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனும் அதுவுமோர் அழகு பெற்றதே. 12

103 எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வு மொன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள். 13

---

101. அழகிய பொருளைக் கண்டு களிக்கும் பெருவிருப்பமுள்ள கண். விழவுமாயவர்—இடையறாது கிளர்ச்சியோடு காண்கின்ற அழகு மேம்பட்ட பெண்கள். மருந்து—அமுதம். எங்கள் நாயகன்—இராம பிரான். யாவதாம்—கண்டால் யாதாய் முடியும்; அவன் மனம் என்ன பாடு படும்? (ஆரணிய:34.)

102. இழை—ஆபரணம். குழை—காதணி. இன்ன—இவை போன்ற பிற. மழை பொரு—மழை போன்று குளிர்ந்த. அழகு எனும் அதுவும்—அழகு தருவதென்று கருதப்படும் அவ்வணிகலனும். ஓர் அழகு-முன்பு இல்லாத தனிச் சிறப்பு. இயற்கை யழகின் தனிச் சிறப்பு கூறப்பட்டது.

103. எண்ணரும் நலத்தினாள். இதுவரையிற் சொல்லியவற்றை யெல்லாம் ஒரு சொல்லில் அமைத்துக் கூறுவது: சொல்லுந் தன்மைத் தன்றானாற் போல நினைக்கவும் அரியது. நலம்—அழகு. இனையள்—இத்தகைய தனிச் சிறப்பு வாய்ந்தவள். கவ்வி—பற்றி. உண்ணுதல்—அனுபவித்தல். நிலை பெறாது—தரித்திருக்கலாற்றாது. ஒன்றிட—ஒன்றுபடுவதாலே.

---

## 8. சீதாபிராட்டியை அந்திமாலை முதலிய நலிவுறுத்தமை.

---

இராமபிரானும் சீதா பிராட்டியும் ஒருவரையொருவர் கண்டதும் இருவரும் மாறிப்புக்கு இதயமெய்தினர்; இரண்டு உடற்கு ஒருயிர் போலாயினர். பின்பு இராமபிரான் முனிவனுடன் அவ்விடம் விட்டு நீங்கி மறைந்தனன். மறைந்ததும் சிந்தையும் நிறையும் மெய்ந்நலமும் இழந்த பைந்தொடி ஓவியப்

பாவை போன்றனள்; கண்வழிப் புகுந்த காதல்நோய் பாலுறு பிரை யென உடல் முழுதும் பரந்தது. அங்கிலேயில் மன்மதனும் ஓரம்பு எய்தனன். அனலில் இட்ட கொடிபோல வருந்திய அவளைத் தாதியர் தூக்கிச் சென்று படுக்கையிற் சேர்த்து விசிறி வீசி வெம்மையைத் தணிக்க முயன்றனர்; அதனுல் வெம்மை இன்னும் மிகுந்தது. இங்கிலேயில் தான் கண்ட ஆடவனது தோற்றம், அழகு முதலியன சமுதாயமாகவும் தனித்தனியாகவும் வந்து தோன்றி நலிய அன்னவனைக் குறித்துப் பலவாறு வாய் புலம்ப நின்ருள். இப்படிப் பலவற்றை எண்ணி மனம் உருகும் பொழுது சூரியன் அத்தமித்தான். அதன்பின் வந்த அந்திமாலே, தென்றல், இருள், நிலவு முதலியன ஒன்றன் பின் ஒன்ருக வந்து நலிய அவள் பட்ட ஆற்ருெணுத் துயரத்தைப் பற்றிக் கூறுவன இப் பாடல்கள்.

முன்னமே மன்மதன் நெஞ்சே இலக்காக எய்த அம்பினுலும், கண்முன்னே தோன்றிப் பலவாறு வருத்திய இராமபிரானது அந்தமில் அழகினுலும் நலிவுற்று வெய்பிய சீதாபிராட்டியை மாலைக் காலம், தென்றல், இருள், சந்திரன் முதலியன ஒன்றன்பின் ஒன்ருக வந்து, பின்வந்தது முன் சென்றதைவிட அதிகரித்த வலிமை யோடு சுட, அதனுல் ஆற்ருமை வர வர விஞ்சி, உடல் முழுவதும் வெந்து, தன் மலர்ப்பள்ளி பட்ட பாட்டைத் தானும் பட்டனள் என்று கூறுகின்ருர்.

இங்கே காணப்படும் வருணனைகள் எல்லாம் சீதாபிராட்டியின் மனநிலையோடு தொடர்புற்ற வகையில் அமைந்துள்ளன. அடுத்து வரும் சூரியோதய வருணனை வேறு முறையில் அமைந்துள்ளது.

[தெ. ப:—மிதிலைக் காட்சிப் படலம்: 61—77; 79.]

104 அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ
தன்னையுஞ் சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி ஓடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினுன். 1

---

104. அமைந்த—உடம்பு முழுவதும் பொருந்திய. தரிக்கிலான் என—பொறுக்க மாட்டாதவன் போல. முன்னை—பழைமையான. நடுக்கி—தன்னையும் சுடும் என்ற அச்சத்தாலே நடுங்கும்படி செய்துகொண்டு. மூழ்கினுன்—மறைந்தான்.

105 விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளுங் காட்டலால்
அரியவட்கு அனல்தரும் அந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினான். 2

106 மீதறை பறவையாம் பறையும் கீழ்விளி
ஓதமென் சிலம்பொடும் உதிரச் செக்கரும்
பாதக இருள்செய்கஞ் சுகமும் பற்றலால்
சாதக மென்னவும் தழைத்த மாலையே. 3

## வேறு

107 கயங்க ளென்னுங் கனல்தோய்ந்து
கடிநாண் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல் மன்மதவேள்
எய்திய புண்ணி னிடைநுழைய

---

105. விரி மலர்த் தென்றல்—மலர்ந்த பூக்களிற் படிந்து வருகின்ற தென்றல். வீசு பாசம்—வீசுகின்ற பாசக் கயிறு. எரி நிறச் செக்கர்—தீயின் நிறம் போன்ற செவ்வானமாகிய செம்பட்டை மயிர். இருள்—இருளாகிய கரிய நிறம். காட்டலால்—இவற்றை வெளிப்படக் காட்டலால். அரியவள்—சீதா பிராட்டி. அனல்—காமத்தீ. அந்திமாலையாம் காலன்: கரு நிறச் செம்மயிர்க் காலன். அவள் கண்ணுக்கு அந்திமாலை காலனைப்போன்று தோற்றமளித்தது. தென்றல் பாசக் கயிறாகவும், செக்கர் வானம் செம்மயிராகவும், அந்தி மாலை யமனாகவும் உருவகம்.

106. மீது அறை—மேலே ஆகாயத்திலே ஒலிக்கின்ற. பறை—வாத்தியம். கீழ் விளி ஓதம்—கீழே யுள்ள ஓசையை யுடைய கடல். கடலாகிய காற் சிலம்பு. செவ்வானமாகிய உதிரம். பாதகம்—துன்பம். இருள் செய் கஞ்சுகம்—இருளாற் பெய்யப்பட்டது போன்ற சட்டை:. இருப்புச் சீரா. பற்றலால்—இந்நான்கையும் கொண்டிருத்தலால். சாதகம் என்னவும் தழைத்த—யமன் போன்ற அந்திமாலை வர வரச் சாதகம் என்னும் பூதம் போலவும் வளர்ச்சி யடைந்தது.

107. கயங்கள்—குளங்கள். கனல் தோய்ந்து—உலை நெருப்பிலே உருக்கு முதலிய வற்றைப் போலத் தோய்க்கப்பெற்று. கடி—வாசனை. மலரின் விடம் பூசி—தோய்த்த வேலுக்கு விடம் பூசுவது போன்று மகரந்தம் பூசப் பெற்று. உயங்கும் உணர்வு—ஏற்கனவே குற்றுயிர் போன்று வருந்துகின்ற

உயங்கும் உணர்வும் நன்னலமும்
உருகிச் சோர்வாள் உயிருண்ண
வயங்கு மாலை வான்நோக்கி
இதுவோ கூற்றின் வடிவென்றாள். 4

108 கடலோ மழையோ முழுநீலக்
கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நாண்மலரோ
நீலோற் பலமோ பானலமோ
இடர்சேர் மடவார் உயிருண்பது
யாதோ வென்று தளர்வாள்முன்
மடல்சேர் தாரான் நிறம்போலும்
அந்தி மாலை வந்ததுவே. 5

109 மைவான் நிறத்து மீனெயிற்று
வாடை உயிர்ப்பின் வளர்செக்கர்ப்
பைவாய் அந்திப் படரவே
இன்னா விளைத்துப் பகைத்தியால்
எய்வான் ஒருவன் கையோயான்
உயிரும் ஒன்றே இனியில்லை
உய்வா னுறவிப் பழிபூண
உன்னோ டெனக்குப் பகையுண்டோ. 6

---

அறிவு. நன்னலம்—நிறை, பெண்மை, அழகு முதலிய நலங்கள்: சோர்வாளது உயிரை உண்ணுதலாலே. வயங்கும் மாலை வான்—விளங்குகின்ற மாலைக் காலத்து வான்.

108. காயா நறும் போதோ—வாசனையுள்ள காயாம் பூவோ! குவளை வேறு நீலோற்பலம் வேறு. பானலம்—கரு நெய்தல்: அம்—சாரியை. மடல் சேர் தாரான்—இராமபிரான். கடல் முதலியன இராமபிரானது நிறத்தை ஞாபகப் படுத்தி உயிருண்ணுங்கால். அந்தி மாலையும் வந்தது.

109. அந்தி மாலையைப் பட அரவாக உருவகஞ் செய்து கூறுகின்றாள். இன்னா விளைத்து—துன்பம் விளைத்து. எய்வான் ஒருவன்—மன்மதன். இனி உய்வான் உற இல்லை. நீ பகைத்தி; கை ஓயாமல் எய்வா னொருவன்; இவற்றிற் கிடையில் உயிர் பிழைத்திருக்கும் உபாயம் இல்லை. பழி—பெண் கொலையாகிய பழி.

110 ஆலம் உலகிற் பரந்ததுவோ
ஆழி கிளர்ந்த தோஅவர்தம்
நீல நிறத்தை எல்லாரும்
நினைக்க அதுவாய் நிரம்பியதோ
காலன் நிறத்தை அஞ்சனத்திற்
கலந்து குழைத்துக் காயத்தின்
மேலும் நிலத்தும் மெழுகியதோ
விளைக்கும் இருளாய் விளைந்ததுவே. 7

111 வெளிநின் றவரோ போய்மறைந்தார்
விலக்க ஒருவர் தமைக்காணேன்
எளியள் பெண்ணென் றிரங்காதே
எல்லி யாமத் திருளூடே
ஒளியம் பெய்யும் மன்மதனார்
உனக்கிம் மாயம் உரைத்தாரோ
அளியன் செய்த தீவினையே
அன்றி லாகி வந்தாயோ. 8

112 ஆண்டங் கனையாள் இனையநினைந்
தழுங்கு மெல்வை அகல்வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற்
சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம்
வெய்ய வென்றங் கவைநீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின்
சுடரால் இரவைப் பகல்செய்தார். 9

---

110. ஆலம்—ஆலகால விடம். ஆழி கிளர்ந்ததோ—கடல் பொங்கி எங்கும் பரந்ததோ. அஞ்சனம்—கரு நிறமுள்ள மை. காயம்—ஆகாயம். விளைக்கும் இருள். விளைந்தது—பெருகியது.

111. வெளி நின்றவர்—வெளிப்பட்டு நின்றவர்: உருவெளித் தோற்றத்தை இங்ஙனம் குறிப்பிடுகின்றாள். விலக்க—போதலைத் தடுக்க. எளியள்—உதவி யற்றவள். எல்லி யாமம்—இரவில் இடையாமம். ஒளிந்து நின்று அம்பு எய்யும் மாய வித்தை. அளியன்—இரங்கத் தகும் நிலையினளாகிய யான்.

112. அங்கனை—பெண்: அங்கநா என்பதன் திரிபு; சிறப்பு நோக்கி ஆள் விகுதி வந்தது. அழுங்கும் எல்வை—வருந்தும் பொழுது. அகல் வானம்—பெரிய வானுலகம். நிமிர்ந்த—உயர்ந்த. கோயில்—கன்னிமாடம். சீத மணியின் வேதிகை வாய்—குளிர்ச்சி பொருந்திய சந்திர காந்தக் கல்லாற் செய்த மேடையிலுள்ள. மணிவிளக்கு இரத்தின தீபம்.

113 பெருந்திண் நெடுமால் வரைநிறுவிப்
பிணித்த பாம்பின் மணித்தாம்பின்
விரிந்த திவலை உதிர்ந்தமணி
விசும்பின் மீனின் மேல்விளங்க
வருந்த அமரர் கலக்கியநாள்
அமுதம் நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்ததென
எழுந்தது ஆழி வெண்திங்கள். 10

114 வண்டாய் அயன்நான் மறைபாட
மலர்ந்ததொரு தாமரைப் போது
பண்டால் இலையின் மிசைக்கிடந்து
பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டான் உந்திக் கடல்பூத்தது
ஓதக் கடலுந் தான்வேறோர்
வெண்டா மரையின் மலர்பூத்த
தொத்தது ஆழி வெண்திங்கள். 11

115 புள்ளிக் குறியிட் டனவொண்மீன்
பூத்த வானம் பொலிகங்குல்
நள்ளிற் செறிந்த இருட்பிழம்பை
நக்கி நிமிரும் நிலாக்கற்றை

---

113. வரை—மந்தர மலை. பெரிய திண்ணிய நெடிய மலை. பாம்பு—வாசுகி. மணித் தாம்பு—முறுக்கேறிய கடை கயிறு. தாம்பினால் அமரர் கலக்கிய நாள்: பரவிய அமுதத் திவலைகளும் வெளிப்பட்ட மணிகளும் ஆகாயத்தின் கண்ணே தோன்றும் மீன்களைப் போன்று விளங்கும்படி கலக்கிய நாள். வருந்த—கடல் வருந்தும்படி. கலக்கிய நாள்—கடைந்த காலத்திலே. (கடலின்) அடியிலே இருந்த அமுதம் நிறைந்த பொற்கலசம் அக்கடலினிடத்தே வெளிப்பட்டுத் தோன்றியது என்னும்படி வெண்திங்கள் உதித்தது. பாற்கடலிலே பொற்கலசம் எழுந்தது போல நீலக் கடலில் வெண்திங்கள் எழுந்தது.

114. வண்டு ஆய்—வண்டு போன்று. பாட—பாடும்படி. தாமரைப் போது—தாமரை மலரை. (கடல் பூத்தது.) பிரமன் வண்டு போன்றான் என்றமையால் தாமரையின் பெருமையும் உந்திக் கடலின் பரப்பும் உய்த்துணரற் பாலன. உண்டான்—திருமால். உந்திக் கடல். அயன் நான் மறை பாட மலர்ந்த செந்தாமரைப் போது பூத்தது என்று கூட்டுக. ஓதக் கடல்—அலைகளையுடைய கடல். ஆழியின் கண்ணே தோன்றிய வெண்திங்கள். தாமரையிலுள்ள வண்டு மதியின் கறைக்கு ஒப்பு.

115. புள்ளிகளை அடையாளமாக இட்டாற்போல ஒளி பொருந்திய நட்சத்திரங்கள் மலர்ந்த வானத்திலே விளங்குகின்ற நிலாக் கற்றை. இரவின்

கிள்ளைக் கிளவிக் கென்னாங்கொல்
கீழ்பால் திசையின் மிசைவைத்த
வெள்ளிக் கும்பத் திளங்கமுகின்
பாளை போன்று விரிந்துளதால். 12

116 வண்ண மாலை கைபரப்பி
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ்போல் எங்கும் பரந்துளதால். 13

117 நீத்த மதனின் முளைத்தெழுந்த
நெடுவெண் திங்கள் எனுந்தச்சன்
மீத்தன் கரங்கள் அவைபரப்பி
மிகுவெண் ணிலவாம் வெண்சுதையால்
காத்த கண்ணன் மணியுந்திக்
கமல நாளத் திடைப்பண்டு
பூத்த அண்டம் பழையதென்று
புதுக்கு வானும் போன்றுளதால். 14

118 விரைசெய் கமலப் பெரும்போது
விரும்பிப் புகுந்த திருவினொடும்
குரைசெய் வண்டின் குழாமிரியக்
கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்

---

நடுப்பகுதியிலேயுள்ள திணிந்த இருளை நக்கி மேலே விளங்குகின்ற நிலாக் கற்றை. கிள்ளைக் கிளவி—சீதா பிராட்டி. என் ஆம் கொல்—என்ன துன்பம் செய்யாது?

116. வண்ணம்—நிறம்: ஈண்டு செந்நிறம். மாலை கை—மாலையாகிய கை. உதயத்து—உதிக்கும் பொழுது. நிலாக் கற்றை சடையன் புகழ் போல எங்கும் பரந்துளது. 'விண்ணும்.........விழுங்கிக் கொண்ட'—என்னும் பகுதி இரண்டுக்கும் பொது. விரி நன்னீர்ப்பண்ணை—பரவிய நல்ல நீர்வளம் மிக்க வயல். வெண்ணெய்—திருவெண்ணெய் நல்லூர். கீர்த்தி வெண்ணிறம். (பால: 34.)

117. நீத்தம்—கடல். தச்சன்—சுதை தீற்றுபவன். கமல நாளம்—நாபிக் கமலத்தினது நாளத்தினிடமாக. பூத்த—தோன்றிய.

118. விரை—வாசனை. குரை—ஒலி. இரிய—நீங்க. கூம்பி—இதழ் குவிந்து. சாம்பி—வாடி. உரை செய்திகிரி—எல்லாராலும் உயர்த்திக் கூறப்

உரைசெய் திகிரி தனையுருட்டி
ஒருகோ லோச்சி உலகாண்ட
அரசன் ஒதுங்கத் தலையெடுத்த
குறும்பு போன்றது அரக்காம்பல். 15

119 நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும்
எனக்கும் கொடியை யானாயே
ஓங்கா நின்ற இருளாய்வந்
துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி
னிடையே யெழுந்த வெண்ணெருப்பே. 16

## வேறு

120 கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
மடிவில் இன்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொ டென்னால்எனைச்
சுடுதி யோகடல் தோன்றிய திங்களே. 17

---

பட்ட அஞ்ஞாசக்கரம். உருட்டி—செலுத்தி. ஒதுங்க--மறைய. குறும்பு—குறுநில மன்னன். அரக்கு ஆம்பல்—செவ்வாம்பல்.

119. நீங்காமாயையவர்-மறைந்து போன பின்பும் கண் முன்னே தோன்றுவது போலக் காண்பிக்கும் மாயையிலே வல்லவர்; இராமபிரான். நிறமே...... ஏங்காக் கிடக்கும்:—கடலுக்கும் பிராட்டிக்கும் சிலேடை. நிறமே தோற்று— 1. தன் நிறம் ஒப்பாகாமையினாலே தோல்வியுற்று: 2. மேனியின் நிறத்தை இழந்து. புறமே போய்—1. உலகிற்கு வெளியே சென்று: 2. ஓர் ஒதுக்கிடம் போய். ஏங்காக் கிடக்கும்-1. மெலிந்த கனை குரலுடன் ஏங்கியபடியிருக்கும்: 2. மனம் ஏங்கிப் படுக்கையிலே கிடக்கும். கரு நெருப்பு—இருள்; அதன் கண்ணே எழுந்த வெண்ணெருப்பு சந்திரன்.

120. மடிவு—மரணம். அமுதத்தோடும் பெண்ணோடும் வந்தனை. கடல் கடைந்தபொழுது இலக்குமியுடன் அமுதமும் சந்திரனும் தோன்றின. பெண்ணோடு உடன்பிறந்த நீ என்னை வருத்தலாமோ? கடல் தோன்றிய—இப்பொழுதும் குளிர்ந்த கடலினின்றும் உதித்த.

121 நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள். 18

---

121. நீக்கம்—புகாத இடம். தாக்க—மேலே தாக்குதலால். வெந்து—உடல் முழுதும் வெந்து. சரிந்தனள்—படுக்கையினின்றும் கீழே விழுந்தனள். சேக்கை—பள்ளி. அப்பூக்கள் பட்ட பாட்டை அவளும் அனுபவித்தாள். பூவை—கிளி: சீதா பிராட்டி.

## 9. சூரியோதய வருணனை.

சீதாபிராட்டியும் இராமபிரானும் பிரிவாற்றாமையினால் ஊழி பலவாக நீண்ட ஓரிரவு கழிந்து மறு நாள் விடிந்தது. அந்த நாட் சூரியோதயத்தைப் பல படியாலும் வருணிப்பன இப்பாடல்கள்.

இந்த நூலில் வேறு இடங்களில் வரும் சூரியோதய வருணனைக்கும் இதற்கும் ஒரு பிரதான வேறுபாடு காணப்படுகின்றது. ஏனைய இடங்களில் வருவன சந்தர்ப்பம், முன்பின் கதை நிகழ்ச்சி, பாத்திரங்களின் மனோபாவம் இவற்றோடு தொடர்புற்ற உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் முதலிய அணிகளால் அமைந்துள்ளன. இந்த வருணனை அங்ஙனந் தொடர்புறாது பொதுவாகவும் சற்று விரிவாகவும் காணப்படுவது; மேலும் பலதிறப்பட்ட அணிகள் கலந்து விரவியது. இராமாயணக் கதை முழுவதற்கும் பொதுவாக நிறுவப்பட்ட ஓர் உதயகால வருணனையை ஒப்ப அமைவுற்றது

இக்கதை இராவணவதமாகிய இலக்கு நோக்கி இயங்க ஆரம்பித்த நாள் இந்த நாள். இன்றையதினம் நிகழ்ந்த சம்பவம் இராமபிரான் வில்லிறுத்தமையே. கதைப் பொருளுக்கு ஆதாரமான இந்நிகழ்ச்சி நடைபெற்ற நாள் மூவுலகினுக்கும் விடிவு காலத்தைக் கொணர்ந்த ஒரு நன்னாளாகும். வாசமலர்த தேங்கோதையாளாகிய மிதிலைச் செல்வியின் ஆழ்துயரமும் தொல்லாழித் துயிலாதே துயராழி நெடுங்கடலுள் துயில்கின்ற

சிலை தடக்கைக் கொண்ட கொண்டலின் தனிமையும் தீர்கின்ற நன்னாள். சனகனுள்ளிட்ட மிதிலை மக்களைப் போலவே தேவரும் முனிவரும் அசுர வருக்கமாகிய புதையிருளின் அழுந்திய ஞாலமும் சிதையு மனத் திடருடைய செங்கமல முகமலரக் காணும் நன்னாள். ஆதலால் இத்தகைய நாட் சூரியோதயத்தை ஆசிரியர் ஒரு சில சந்தர்ப்பங்களோடு மட்டும் இசைவியாது கதையின் முழுப்பொருளையும் உட்கொண்டு, ஒரு தனிப்பட்ட அமைப்பெய்துமாறு, தாமே வந்து பின்னி மிடைந்த பல திறப்பட்ட அணிகள் செறிய, தம்முடைய கவிதைப் பண்பாடு விளங்க, விழுமிய ஓசையுடன் நிமிர்ந்து செல்லும் 'செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்வவ்விய' கவிகளாற் புனைந்துரைக்கின்றார்.

இப்பாடல்களில் இடம்பெற்ற தனிச்சிறப்புவாய்ந்த உவமை முதலியவற்றின் பொருத்தமும் சிறிது ஆராயற்பாலது. உதய கிரியில் தோன்றிய சூரியனுக்கு அழித்தற் கடவுளாகிய கற்றைச் சடைமுடி அண்ணலின் திரிபுரமெரித்த நுதல்விழியையும், அவனது விரிந்த கதிர்களுக்கு அக்கடவுள் ஊழியிறுதியின்பின் நடம்புரிநிலையில் விரித்த பொற்சடையையும் உவமையாக இவ் வருணனையின் முதலிலும் முடிவிலும் அமைத்துக் கூறியது அரக்காது பேரழிவைக் கூறும் கதைப் பொருளுக்குப் பெரிதும் இயைந்தது. உதயகிரி சிவந்து நின்றமையை இராவணனால் முன்னம் பங்கமுற்ற எண்திசைக்கரிகளுள் ஒன்றாகிய இந்திரன் திசைக்குரிய யானை அரக்கனழிவால் துயர்நீங்கி அணிபெற விளங்கியமைக்கு அறிகுறியாக அதன் நெற்றியிலிட்ட சிந்தூரத் திலகத்திற்கு ஒப்பிட்டுரைத்ததும் அங்ஙனமே மிகவும் ஏற் புடைத்து. (பாடம் 41: பாட்டு 7.) இனி மூன்றுஞ் செய்யுளில் வருகின்ற உவமை ஒரு தனிச் சிறப்பிற்று. உவமானம் விரிவாகச் சித்திரிக்கப்பட்டு, பலபடிகளில் பண்பினை உயர்த்தி நின்று, அடை சில அடுத்தும் அமைந்துள்ளது; விரிந்து செல்லும் உவமானத்தின் கூறுகள் தனித்தனியே உவமேயத்தோடு நேர் படாது நிற்ப, பொதுப் பண்பு சிலேடையாக அமைந்துள்ளது. இத்தகைய தனியமைப்பு பதினான்காமாண்டின் முடிவில், இராம பிரானை ஆவலோடு எதிர்பார்த்து அவன் வரவு நோக்கி எதிர் சென்ற பரதனது தாமரை முக மலர்ச்சியையும், நகர மாந்தரது

எகோபித்த அகமலர்ச்சியையும் நினைவில் தோற்றுவிக்கின்றது. நான்காம் பாட்டில் அமைந்த பல்லலங்காரப் பண்புகள் இராவணாதியரை யெல்லாம் கொன்று ஏறு சேவகத்தோடு இராமபிரான் போர்க்களத்தே நின்ற நிலையில் அங்குக் குழுமிய வானவராதியோர் அடைந்த ஆனந்தத்தையும் அங்கு நிகழ்ந்த ஆரவாரத்தையும் கண்முன்னே தோற்றுவிப்பன.

[தெ. ப:—மிதிலைக்காட்சிப் படலம்: 150—153.]

122 ததையுமலர்த் தாரண்ணல் இவ்வண்ணம்
மயலுழந்து தளரு மெல்லை
சிதையுமனத் திடருடையச் செங்கமல
முகமலரச் செய்ய வெய்யோன்
புதையிருளின் எழுகின்ற புகர்முகயா
னையினுரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி எனுங்கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயஞ் செய்தான். 1

123 விசையாடற் பசும்புரவிக் குரமிதிப்ப
உதயகிரி விரிந்த தூளி
பசையாக மறையவர்கைந் நறைமலரும்
நிறைபுனலும் பரந்து பாய

---

122. ததையும்—நெருங்கிய: சிதைந்த. அண்ணல்—இராமபிரான். மயலுழந்து—காதல் நோயால் வருந்தி. தளரும் பொழுது வெய்யோன் உதித்தான். சிதையும் மனத்து இடர் உடைய முகம் மலர—முப்புரத் தரக்கரால் துன்புற்று வருந்திய சிட்டரது சிதைவுற்ற மனத்துயரம் நீங்கி முகம் மலர்ந்தது போல பிரிவினால் நைந்தவர் மனத்தின் இடர் முழுவதும் நீங்கி முகம் மலரும்படி. உதயகிரி சிவபெருமானாகவும், இருள் அவர் போர்த்த யானைத் தோலாகவும், சூரியன் அவர் நெற்றிக் கண்ணாகவும் உருவகம். புதை இருளின் யானை—ஆழ்ந்த இருளாகிய யானை: எழுகின்ற புகர் முக யானை—மேலே தோன்றுகின்ற செம் புள்ளிகளையுடைய யானை. திணி இருளின் மேலே எழும் நட்சத்திரங்களைப் போன்று கரிய நிறமுள்ள யானையின் முகத்திலே செம்புள்ளிகள் தோன்றுவன. யானையின் உரிவைப் போர்வை—யானையின் தோலாகிய போர்வை. உதயகிரி எனுங் கடவுள்—சிவபெருமான். நுதல் கிழித்த—நெற்றியைக் கிழித்தெழுந்த; முப்புரங்களின்மீது கோபங்கொண்டு விழித்தாற் போல விழித்த. தாருகா வனத்து முனிவரை வென்று யானைத்தோல் போர்த்த நிலையில் முப்புரங்களை எரிக்க நின்ற சிவபெருமான் நெற்றிக் கண்ணைப் போலச் சூரியன் உதித்தான்.

123. கீழ் வானம் சிவந்தமையைப்பற்றிக் கூறுகின்றது. கீழ்த்திசை யானைக்குச் சிந்தூரத் திலகம் அப்பியது போன்று கீழ்வானம் சிவந்தது. வேகம்

அசையாத நெடுவரையின் முகடுதோறும்
இளங்கதிர்சென் றணைந்து வெய்யோன்
திசையாளும் மதகரியைச் சிந்தூரம்
அப்பியபோற் சிவந்த மாதோ. 2

124 பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையும்
பொருள்வயினும் பிரிந்து போன
வண்டுதொடர் நறுந்தெரியல் உயிரனைய
கொழுநர்வர மணித்தே ரோடுங்
கண்டுமனங் களிசிறப்ப ஒளிசிறந்து
மெலிவகலும் கற்பி னார்போல்
புண்டரிக முகமலர அகமலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை எல்லாம். 3

---

வலிமை இவற்றையுடைய பச்சை நிறமுள்ள குதிரைகள். குரம்—குளம்புகள். மிதிப்ப—மிதித்தலாலே. தூளி—செந்துகள். குதிரைகள் உரமாக மிதித்த லாலே எழுந்த துகள் உதயகிரி எங்கும் பரந்து படிந்தன; அத்தூளி பசை போலாம்படி அந்தணர் விட்ட தேனுள்ள மலரும் அருக்கிய நீரும் பரந்து பாய்ந்தன; அந்தப் பசையை நடுக்கமில்லாத நெடிய குன்றுகள் தோறும் சூரியனது இளங்கதிர்கள் சென்று அணைதலாலே கீழ்த்திசையை ஆளும் மத யானையைச் சிந்தூரம் அப்பியது போன்று கீழ் வானம் சிவந்தது. இராவணனால் மருப்பொடிந்து அவமானப்பட்ட யானைக்கு இந்நாளில் திலக மிட்டு அலங்கரித்தது போன்று கீழ்வானம் சிவந்து விளங்கிற்று.

124. தாமரை முதலியன மலர்ந்து பொய்கைகள் விளங்கின. பண்டு—முற்காலத்திலே. வரும் குறி பகர்ந்து—வருகின்ற காலம் இன்னதென்று குறித்துவிட்டு; முல்லை மலருதல், கார்தொடங்கல் முதலிய அடையாளங்கூறி: குறி—குறிப்பு. பாசறைக் கண்ணும் பொருள் செய்தற் கண்ணும் பிரிந்து சென்ற தலைவர். பாசறை—போர் செய்வோர் தங்குமிடம். வண்டு தொடர் நறுந் தெரியல் உயிரனைய கொழுநர் வர—வெற்றி மாலையோடு திரும்பி வருதலைக் குறிக்கும். மணித்தேரோடும் கண்டு—மணியோசை கேட்டு, அவர் வருகையை ஆரம்பம் முதற்காண வேண்டும் என்னும் ஆர்வத்துடன் வெளியே வந்து அப்படியே கண்டு. மனக்களிப்பு மிகுதலாலே பிரிவினாலும் கவலையினா லும் வந்த உள்ளத்தளர்ச்சியும் உடல்மெலிவும் நீங்குகின்ற கற்புடை மகளிரைப் போல. புண்டரிக முகம் மலர—1. கற்பினரது தாமரை போன்ற முகம் ஒளி யோடு மலர்ச்சியடைய: 2. பொய்கையின் முகமாகிய தாமரை இதழ்விரிந்து மலர. அகம் மலர்ந்து—1. முகம் மலர்ந்தது போலவே நெஞ்சமும் உவகை யால் மலர்ந்து: 2. இடமெங்கும் பூக்கள் மலர்ந்து. பொலிந்தன—அழகுடன் விளங்கின. பதினாலாண்டின் பின் மீண்டு வந்த இராமனைக்கண்ட பரதன் முதலியோரது நிலைமையை நினைப்பூட்டுகின்றது இச்செய்யுளிலமைந்த உவமானம்.

125 எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட உலக மேத்த
விண்ணவரும் முனிவர்களும் வேதியருங்
கரங்குவிப்ப வேலை என்னும்
மன்னுமணி முழவதிர வானரங்கின்
நடம்புரிவாள் இரவி யென்னும்
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரித்தா
லெனவிரிந்த கதிர்க ளெல்லாம். 4

125. சூரியனது கதிர்கள் எங்கும் விரிந்தன. கின்னரர்—இசை பாடுந் தேவர்கள். இசைபாடுதல், ஏத்துதல், கரங்குவித்தல் இரண்டுக்கும் பொது. மன்னும் மணி முழவு—மார்ச்சனைப்பட்ட அழகிய முழவு. அதிர—முழங்க. வான் அரங்கின்—1 ஆகாயமாகிய அரங்கின் கண்ணே: 2. சிற்சபையின் கண்ணே. முழவு அதிர்தல் கடலின் முழக்கத்திற்கும் சிற்சபை வானுக்கும் ஒப்பு. நடம் புரி வாளிரவி—நடஞ் செய்வது போன்று அசைகின்ற கதிர்களை யுடைய சூரியன். நடம்புரி கண்ணுதல் வானவன்—திருநடம்புரியும் சிவ பெருமான். முன்பு 'நுதல் கிழித்த' என்றமைக்கு இயைய ஈண்டு 'கண்ணுதல் வானவன்' என்றார். உலகம் நடைபெறும்படி புரிதல் இருவருக்கும் பொது. கனகச் சடை—பொற் சடை. பொற்சடை விரித்தாற் போலச் செய்ய வெய்யோன் கதிர்கள் விரிந்தன. இராவண வதம் முடிந்து நின்ற நிலையில் தேவர்கள் குழுமிய பொழுதைய ஆரவாரக் களிப்பை நினைவூட்டுகின்றது இச்செய்யுள்.

---

## 10. முனிவன் குமாரர் வரலாறு கூறுதல்.

தான் செய்த வேள்வி முடிந்தபின் முனிவனோடு மருங்கிலே வீற்றிருந்த இராமலக்குமணரைக் கண்ட சனகன் அவர்கள் தோற்றத்தில் ஈடுபட்டு, விசுவாமித்திர முனிவனை அடிவணங்கி, 'இவர்கள் யார்? உரைத்தருள வேண்டும்' என்று கேட்க, அவன் 'விருந்தினர்; நின் வேள்வி காணிய வந்தார்; வில்லுங் காண்பார்; பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வர்' என்று விடையளித்து அவர்களது தகைமை யெல்லாம் பேசலுற்றான். அப்படி அவன் பேசியதின் பிற்பகுதி இங்கே காணப்படும். இப்பகுதி இராம பிரானது ஆரம்ப சரிதையை விசுவாமித்திர முனிவன் கூற்றாகக் கூறுவது. 'வில்லுங் காண்பார்' என்று முதலிற் கூறிய முனிவன் மகட்பேசுவார் போன்று வரலாற்றை அமைத்துக் கூறுகின்றா தலின், மனு முதலாய குல முதல்வர் பெருமையை முற்படக் கூறிப் பின்பு இராமபிரானைப் பற்றிப் பேசலானான்.

இராமபிரானது வீரத்திறமையை மைவண்ணத் தாக்கி போர் வேள்விகாத்த சீர்மை இவற்றினும், அவனுடைய அருளின் திறத்தைக் கல்லுருவாய்க் கிடந்த அகலிகையைப் பெண்ணுருவாக்கிய செயலினும் கண்ணாரக் கண்டவனாதலின் இயல்பாக உள்ள ஆர்வம் அளவு படாத உள்ளக் கிளர்ச்சியோடு சேர்ந்து பொங்கிய உவகையோடு பேசுகின்றான். அப்படிப் பேசுகின்றவனது உள்ளக்கிளர்ச்சி பாட்டியின் ஓசையில் வெளிப் பட்டு நிற்கின்றது. 'கலையாழிக் கதிர்த்திங்கள் உதயத்திற் கலித்தோங்கும் அலையாழி' யைப் போலவே பாட்டில் அமைந்த ஓசையும் வர வரக் கூடிய எழுச்சியுடன் செல்கின்றது.

[தெ. ப:— குலமுறை கிளத்து படலம்: 20—29.]

126 விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறைந்த அறஞ்செய்த அறத்தாலும்
இருங்கடகக் கரதலத்திவ் எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென் பாள்பயந்தாள். 1

127 தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள். 2

128 அருவலிய திறலினராய் அறங்கெடுக்கும் விறலரக்கர்
வெருவருதின் திறலார்கள் வில்லேந்தும் எழிற்செம்பொன்
பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்
இருவரையும் இவ்விருவர்க் கிளையாளும் ஈன்றெடுத்தாள். 3

129 நலையாய பேருணர்விற் கலைமகட்குந் தலைவராய்ச்
சிலையாயுந் தனுவேதந் தெவ்வரைப்போற் பணிசெய்யக்

---

126. விரிந்திடு—பரவிய. கொடுவினை செய்த தீவினை. 'தவஞ் செய்த தவமாந் தையல்' (சுந்தர: 187.) என்பதனோடு ஒப்பிடுக. அரு மறை: கடை இல் மறை—ஈறில்லாத வேதம். கடகக் கரதலம்—கடகத்தை யுடைய கை. எழுதரிய திரு மேனி—'ஓவியத் தெழுத ஒண்ணா உருவம்'. (கிட்கிந்தா: 86.) கருங்கடலை—கரிய கடல் போன்ற நிறமுள்ள இராமனை.

127. நீதித் தனி ஆறு—நீதியாகிய ஒப்பற்ற ஆறுகள். மண்டும்—விரையும்: நிரம்பும். பள்ளம்—கடல். இவ்விருந்த—இங்கேயிருந்த; 'இங்கின்றவள்' (ஆரணிய:131.) என்பது போன்றது. வள்ளலையே அனையானை— 'நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்' (அயோத்தி: 149.)

128. விறல்—வலிமை. வெருவரு—அஞ்சுகின்ற, இலக்குவன் பொன் னிறம். சத்துருக்கன் வெள்ளி நிறம்.

129. பேருணர்வு—மூதறிவு. சிலை ஆயும்—வில்வித்தையை ஆராய்ந்து கூறும். தெவ்வர்—பகைவர். கலைகளை யுடைய வட்டமான ஒளியையுடைய

கலையாழிக் கதிர்த்திங்கள் உதயத்திற் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கு மனையார்கள். 4

130 இறையோடும் அரசிறைஞ்சும் செறிகழற்கால் தொரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான் புதல்வரெனும்
பெயரேகாண்
உறையோடு நெடுவேலாய் உபநயன விதிமுடித்து
மறையோது வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண். 5

131 சங்கிவரால் என்வேள்விக் கிடையூறு கடிதியற்றும்
தீங்குடைய கொடியோரைக் கொல்விக்குஞ் சிந்தையனாய்ப்
பூங்கழலார்க் கொண்டுபோய் வனம்புக்கேன் புகாமுன்னம்
தாங்கரிய பேராற்றல் தாடகையே தலைப்பட்டாள். 6

132 அலையுருவக் கடலுருவத் தாண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா
உலையுருவக் கனலுமிழ்கண் தாடகைதன் உரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி. 7

133 செக்கர்நிறத் தெரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன
உக்கனவோர் முடிவில்லை ஓரம்பினெடும் அரக்கி
மக்களிலங் கொருவன்போய் வான்புக்கான் மற்றையவன்
புக்கவிடம் அறிந்திலேன் போந்தனனென் வினைமுடித்தே. 8

---

சந்திரன்; பூர்ண சந்திரன். கலித்து ஓங்கும்—ஆரவாரஞ் செய்து பொங்கும். அலைகளையுடைய கடல்.

130. திறை—கப்பம். அரசு—சிற்றரசு. உறையிலே தங்குகின்ற வேலையுடையவனே!

131. கடிது—விரைவாக. தலைப்பட்டாள்—எதிர்ப்பட்டாள்.

132. அலை உருவு அக்கடல்: உருவு—தோன்றுகின்ற: பாய்ந்து வருகின்ற. இன்றேல் உருவக் கடல். கடல் உருவம்—கடலினது நிறம். நிலை உருவம்—நிலையான இயற்கை யழகு. உருவ நோக்கு—நன்றாகப் பார். கண்ணுக்கு உலை உவமை. உலை போல உமிழும். உருவக் கனல்—அச்சந் தருந் தீ. கண் தாடகை—கண்ணையுடைய தாடகை; கோபாவேசத்தோடு வந்த தாடகை. உரம் உருவி—மார்பைத் துளைத்து. வாளி—அம்பு.

133. உக்கன—சிதறி விழுந்தன. ஒருவன்—சுபாகு. மற்றையவன்—மாரிசன்.

134 ஆய்ந்தோர்க்கு முணர்வரிய அயற்கேயும் அறிவரிய
காய்ந்தேவில் உலகனைத்துங் கடலோடும் மலையோடும்
தீந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈந்தேனும் மனமுட்க இவற்கேவல் செய்குனவால். 9

135 கோதமன்தன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்காற்
பொடிகண்டாய்
காதலென்தன் உயிர்மேலும் இக்கரியோன் பாலுண்டால்
ஈவதிவன்தன் வரலாறும் புயவலியும் எனவுரைத்தான். 10

---

134. அரிய—வினைமுற்று. அயற்கு—நான்முகனுக்கு. காய்ந்து ஏவில்—கோபங்கொண்டு ஏவி விட்டால். தீந்து ஏற—கரிந்து போகும்படி. அவற்றை ஈந்த யானுமே வெள்கும்படி ஏவல் செய்வன. தன்னிடம் வைத்ததைவிட மிக்க அன்பு பூண்டு இராமனுக்குப் பணி செய்ததனால் மனம் உட்கினன்.

135. பன்னி—பத்தினி; அகலிகை. போது—தாமரை மலர். அம்மலர் வாடாது நின்றது போல். பொலங்கழல்—பொன்னாலாகிய வீரக் கழல். கால் வண்ணம் இது; கைவண்ணங் கூறவும் வேண்டுமோ என்பது குறிப்பு. என் உயிரின்மேல் வைத்துள்ளதை விட அதிக அன்பு இக்கரியோனிடம் எனக்கு உண்டு.

---

## 11. இராமபிரான் வில்லிறுத்தமை.

இராமபிரான் வில்லை வளைக்கப்புக அது முறிந்த நிகழ்ச்சியை வருணிப்பன இப்பாடல்கள்.

இப்பகுதியில் கம்பர் வில்லிறுத்த நிகழ்ச்சியை நேரிற் காண்பது போன்று காட்சிப்படுத்துகின்றார். இராமபிரான் வில்லை நோக்கி நடந்த பொழுது தோகையர் முதலியோர் கூறியனவும், வில்லிறுத்தபின் மக்கள் இராமன் அழகை வியந்து உரைத்தனவும், அவர் குழுவினராய்ப் பிரிந்து மணமகன் சார்பாகப் பேசுவாரும் மணமகள் பக்கம் பரிவாரும் சண்டையைத் தடுத்துச் சமாதானம் செய்வாருமாகிப் பேசியனவும் மனித இயல்பிற்கேற்றவாறு அமைந்து நின்று இன்பம் பயப்பன.

[தெ. ப:—கார்முகப் படலம்: 26, 28—30, 32—35, 37, 40, 42, 43.]

136 பொழிந்தநெய் ஆகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான்
அழிந்தது வில்லென விண்ணவர் ஆர்த்தார்
மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்றார். 1

137 காணு நெடுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்
பாணியி வன்படர் செங்கை படாதேல்
வாணுதல் நங்கையும் வாழ்விலள் என்பார். 2

138 கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
இருங்களி றிச்சிலை ஏற்றில னாயின்
நரந்த நறைக்குழல் நங்கையும் நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குதும் என்பார். 3

139 வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
வெள்ள மணைத்தவன் வில்லை எடுத்திப்
பிள்ளைமுன் இட்டது பேதைமை என்பார். 4

140 தோகையர் இன்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட உம்பர் உவப்ப
மாக மடங்கலும் மால்விடை யும்பொன்
நாகமு நாகமு நாண நடந்தான். 5

---

136. உலகைக் காக்கும் வேள்வித்தீ இராமனுக்கு உவமை. நெய்யாகிய ஆகுதி கோசிக முனிவன் குறிப்பாக இட்ட கட்டளைக்கு உவமை. முப்பகை வென்றார்—முனிவர்.

137. கால்—வில்லின் கால்; நாண்—நாணம். நலம் கிளர் செங்கேழ் பாணி—அழகு விளங்குகின்ற சிவந்த கை. படர்—பரவிய.

138. பனிப்ப—நீர் பெருக. இருங்களிறு—இராமன். களிறு ஏற்றில னாயின்—திணை வழுவமைதி. நரந்தம் நறைக் குழல்—கத்தூரியின் மணங் கமழ்கின்ற கூந்தல். முருங்கு எரி—யாவற்றையும் அழிக்கின்ற நெருப்பு: முருக்கு என்பதன் விகாரம். குவித்துப் பனிப்ப இங்ஙனங் கூறினர்.

139. வள்ளல்—இராம பிரான். கொள்—ஏற்றுக்கொள். வெள்ளம் அணைத்தவன்—சிவபெருமான்; கங்கை நீர்ப் பெருக்கை நிறுத்தினவன்.

140. ஓகை—மகிழ்ச்சியுரை. ஆகுபெயர். மாகம் அடங்கலும் உம்பர் உவப்ப—வானுலகம் முழுவதும் தேவர் உவப்ப. பொன் நாகம்—பொன் மலை; மேரு. நாகம்—யானை. இன்றேல் மாகம் மடங்கலும் நாண—ஆகாயத்திலே எழுகின்ற சிங்கமும் நாணும்படி என்று கொள்க.

141 ஆடக மால்வரை அன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதை எனும்பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்ன எடுத்தான். 6

142 தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார். 7

வேறு

143 ஆரிடைப் புகுதும் நாமென்று அமரர்கள் கமலத் தோன்றன்
பேருடை அண்ட கோளம் பிளந்ததென் றேங்கி நைந்தார்
பாரிடை யுற்ற தன்மை பகர்வதென் பாரைத் தாங்கி
வேரிடைக் கிடந்த நாகம் இடியென வெருவிற் றன்றே. 8

144 மாலையும் இழையுஞ் சாந்தும் சுண்ணமும் வாச நெய்யும்
வேலைவெண் முத்தும் பொன்னுங் காசுநுண் துகிலும் வீசிப்
பால்வளை அமிழ்த ளாய பல்லியந் துவைப்ப முந்நீர்
ஓல்கிளர்ந் துவாவுற் றென்ன ஒலிநகர் கிளர்ந்த தன்றே. 9

---

141. ஆடகம்—பொன். மணி—இரத்தினம்; மணியாகிய சீதை. சூடகம்—கையணி. வால் வளை—வெண்ணிற வளை; சீதா பிராட்டியைக் குறித்தது. எழுந்தான் (136) நடந்தான் (140) எடுத்தான் (141) என்று தொடுத்து அறிக.

142. தடுத்து—இயல்பாக இமைத்தலை விலக்கி. மடுத்தது—மிதித்தது. நாண் நுதி வைத்தது—நாணை மற்றொரு நுனியிலே சேர்த்தது; 'பூட்டியது' என்னாது 'வைத்தது' என்றமையால் நாணேற்றுதற்கு முன்னமேயே வில் முறிந்தமை பெறப்படும். நோக்கார்—காணாதவர்களாகி. கடுப்பினில்—விரைவினால். இமைக்கு முன் இரண்டும் நடைபெற்றன.

143. யாரிடம் அடைக்கலம் புகுவோம். பேருடை—பெருமையையுடைய. வருந்தினார்கள். வேரிடை—அடிப்புறத்தில். நாகம்—ஆதி சேடன்.

144. இழை—அணி கலம். சுண்ணம்—நறுமணப்பொடி. வாச நெய்—மயிர்ச் சாந்து வகையுள் ஒன்று. காசு—இரத்தினம். வீசி—ஒருவர்க் கொருவர் வழங்கி. பால் வளை—வெண்ணிறச் சங்கு. அமிழ்து அளாய பல் இயம்—அமுதத்தின் இனிமை கலந்த பல வாச்சியங்கள். துவைப்ப—ஒலிப்ப. முந்நீர்—கடல். ஓல்—ஆரவாரம். உவா—பருவ காலம். நகர் ஒலி கிளர்ந்தது.

145 வயிரியர் மதுர கீதம் மங்கையர் அமுத கீதம்
செயிரியர் மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம்
பயிர்கிளை வேயின் கீதம் என்றிவை பருகி விண்ணோர்
உயிருடை உடம்பு மெல்லாம் ஓவிய மொப்ப நின்றார். 10

146 தயரதன் புதல்வ னென்பார் தாமரைக் கண்ண னென்பார்
புயலிவன் மேனி யென்பார் பூவையும் பொருவு மென்பார்
மயலுடைத் துலக மென்பார் மானுட னல்ல னென்பார்
கயல்பொரு கடலுள் வைகும் கடவுளே காணு மென்பார். 11

147 நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறும் குரிசிற்கும் அன்ன தேயால்
தம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத் துலக மென்பார்
இம்பரிந் நகரில் தந்த முனிவனை இறைஞ்சு மென்பார். 12

---

145. வயிரியர்—இசை பாடுவார். செயிரியர்—கூத்தர். பயிர்—ஒலிக்கின்ற. கிளை—பலதிறப்பட்ட. வேய்—புல்லாங்குழல். உடம்பு எல்லாமும்.

146. என்பார் என்பார் என்று தனித்தனி முடிதலால் ஒவ்வொன்றும் வெவ்வேறு பகுதியினர் பேச்சு என்பது வெளிப்படை. ஒரு பகுதியினர் பேச்சுக்கும் அடுத்த பகுதியினர் கூற்றிற்கும் நெருங்கிய தொடர்பு அமைந்து எல்லாம் கோவைப்பட்டு பொருளொருப்பாடு பெறுகின்றது. பூவை—காயா. பொருவும்—ஒக்கும். மயலுடைத்து உலகம்—ஒரே பொருளைக் குறித்து 'புயல்' என்றும் 'காயா' என்றும் கூறக் கேட்டவர் கூற்று. மயல்—அறிவின் கலக்கம். அதற்கு விடை மானுடன் அல்லன். பின்னை யார் என்ற வினாவிற்கு விடை ஈற்றடி: நீங்கள் சண்டையிடுவது போன்று கயல் மீன்கள் பொருகின்ற பாற்கடலில் வைகும் திருமாலே இவன்; இதில் ஐயமில்லை என்பார்.

147. முன் சொல்லியவற்றை யெல்லாங் கேட்டு வியந்தவர் கூற்று முதலாமடி. அவர் கூறி முடிக்கு முன் மணமகள் பக்கம் பரிந்து பேசிய எதிர்க்கட்சியினர் கூற்று இரண்டாமடி. சீதாபிராட்டியின் வரம்பில் பேரழகைக் காண்கின்ற ஒவ்வொரு முறைக்குமே நம்பிக்கு ஆயிரங் கண்வேண்டும்; காணும் ஒவ்வொரு சமயமும் அழகு புதுக் களிப்புடன் தோன்றுதலால். வாக்கு வாதம் முற்றிவிடு மென்று அஞ்சிய மற்றொரு சாரார் பேச்சை வேறு பொருளில் திருப்பி நம்பிக்கேற்ற தம்பியைக் காண்மின் என்றார். இருவர் அழகிலும் ஈடுபட்டவர் 'தவமுடைத்து உலகம்' என்றார்; மற்றொரு சாரார் 'இவ்விருவரையுங் கொணர்ந்த முனிவனை யன்றோ முதலில் வணங்கவேண்டும்' என்றார். தொடங்கின்ற கலகம் நிகழாமற் காக்கப்பட்டது.

## 12. இராமபிரான் உலாவியல்.

தயரதனை எதிர்கொண்ட இராமபிரான் அவன் பணித்தபடி தேரேறி மிதிலைமா நகர் வீதியினூடே சென்று மணி மண்டபத்தை அடைந்தான். அங்ஙனம் அவன் வீதியின் வழியே செல்லும் பொழுது நிகழ்ந்த சில காட்சிகளைக்கூறும் இப்பகுதியிலுள்ள கவிகள்.

இராமபிரான் தாடகையை வதைத்தமை, அகலிகைக்கு நல்லுருவளித்தமை, வில்லிறுத்தமை ஆகியவற்றைக் கேள்விப்பட்ட அவ்வீதியிலுள்ள மாதரார் தேர் வருகின்றதெனஅறிந்து பெருந்திரளினராய்ச் செல்லலுற்றனர். சென்று யாவரும் இமைகொட்டாமற் பார்த்தனர்; பார்த்தவர் யாவரும் தம்மை இழந்தனர். விரைவாக வந்த தேர் நேருக்கு நேர் வந்தது; முழு அழகையும் நெருங்கிநின்று காணலாமென்று எண்ணி வந்தவர்கள் ஒரோவோர் அவயவத்திற்குமேல் காணமாட்டாராயினர். தேரும் போய்விட்டது. பலர் பலவாறு வருந்திப் பலப்பல கூறினர். இங்ஙனம் தேர் வருகையில் பல நிலைகளில் நிகழ்ந்தவற்றை ஒரு நிலையில் நின்று கண்ட ஒருவர் நமக்குக் கூறிக் காட்டுவது போன்று ஆசிரியர் வருணிக்கின்றார்.

மேலும் இப்பகுதியில் இராமபிரானது இரு பண்புகளை ஆசிரியர் உய்த்துணர வைக்கின்றார். அவன் பரம்பொருள் என்பதை, 'தோள் கண்டார்' என்ற கவியிலும் அயல் மாதரைச் சிந்தையாலுந் தொடாத பேராண்மையை, 'வேர்த்து மேனி' என்னுங் கவியிலும் காட்டுகின்றார்.

[தெ. ப:—உலாவியற் படலம்: 1, 2, 5, 6, 10, 13, 15, 16, 19, 21. 23, 32.]

148 மானினம் வருவ போன்று மயிலினந் திரிவ போன்றும்
மீனின மிளிர்வ போன்று மின்னிட மிடைவ போன்றும்

148. வீதியில் ஓரிடத்திலே நின்று பார்க்கும் பொழுது பெண்கள் கூட்டமாக நெருங்கிவரும் காட்சி வரன் முறையிற் கூறப்படுகின்றது. தூரத்திலே வரும் பொழுது மானினம் வருவபோன்றும்; சற்று நெருங்க ஆடை முதலிய அலங்காரங்களினாலே மயிலினம் திரிவபோன்றும்; இன்னும் சமீபிக்க ஆபரண ஒளியாலே நட்சத்திரங்கள் கூட்டமாக விளங்குவ போன்றும்; இன்னும் அணுகிய நிலையில் பலரும் தம்முள் நெருங்கலால் மின்னினம் மின்னி

தேனினஞ் சிலம்பி யார்ப்பச் சிலம்பினம் புலம்ப எங்கும்
பூநனை கூந்தன் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார். 1

149 விரிந்துகிழ் கூந்தல் பாரார் மேகலை அற்ற நோக்கார்
சரிந்தபூந் துகில்கள் தாங்கார் இடைதடு மாறத் தாழார்
நெருங்கினர் நெருங்கிப் புக்கு நீங்குமின் நீங்கு மின்னென்று
அருங்கல மனைய மாதர் தேனுகர் அளியின் மொய்த்தார். 2

150 அரத்தமுன் படைய மேனி அகலிகைக் களித்த தாளும்
விரைக்கருங் குழலிக்காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளுங் காண மறுகினின் விழு மாதர்
இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கும் ஈயின மென்ன
லானார். 3

151 வீதிவாய்ச் செல்கின் ருன்போல் விழித்திமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே வாவுமான் தேரிற் செல்வான்
யாதினு முயர்ந்தோன் தன்னை யாவர்க்குங் கண்ண னென்றே
ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி
விட்டான். 4

---

நடமாடுவபோன்றும்; ஆக நெருங்கிவர, வண்டுகளின் பூசலும், சிலம்புகளின் ஓசையும் மேற்பட மாதர் பொம்மென்ற ஓசையுடன் புகுந்து வண்டினம் பூவை மொய்ப்பது போன்று மொய்த்தனர். சிலம்பி—ஒலித்து. பொம்மென—விரைவுக் குறிப்பு.

149. அற்ற—அற்றுச் சிந்தினவற்றை. சரிந்த—இடம்விட்டுத் தளர்ந்த. பாரார்—நோக்கார். தாங்கார் தாழார் முதலியவற்றை எச்சமாகத் திரித்துப் பொருள்கொள்க. நெருங்கினர்—தேர் வருமிடத்தை அணுகியவராகி. நெருங்கிப்புக்கு—தம்முள்ளே நெருக்கிப்புக்கு. அப்படிப்புக இடமின்மையால் 'நீங்குமின் நீங்குமின்' என்றார். அருங்கலமனைய மாதர்—ஆபரணங்கள் தமக்கு அழகு செய்வது போன்று தாம் அவ் வீதிக்கு அழகு செய்யும் மாதர். அளி—வண்டு; வண்டுகளைப் போல விளைவு நோக்காது விரைந்து வீழ்ந்தனர்.

150. அரத்தம்—செந்நிறம். அளித்த—அருள் செய்த. விரை—மணம். கருங்குழலி—சீதா பிராட்டி. மறுகு—வீதி. வீழும்—ஆர்வத்தோடு வந்தடையும். அடைமொழிகள் வருபவர் கேள்விப்பட்டுக் காண விரும்பிய பண்புகளை ஒட்டிவந்தன.

151. வீதிவாய்ச் செல்கின்ருன் போல் மாதரார் கண்களுடே செல்பவன். தாவிச் செல்லுகின்ற குதிரைகள் பூட்டிய தேர். உறு பொருள்—தகுந்த பொருள். யாவர்க்கும் கண்ணன்—எல்லாருடைய கண்ணகத்தே இருப்பவன். திருமாலைக் கண்ணன் என்றல் உண்டு.

கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தூராதோ. 10

141 ஆடு கொடிப்படை சாடி அறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனும் இப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்தஎன் நாயக னுக்கிவர் நாமாளும்
காடு கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ. 11

142 மாமுனி வர்க்குற வாகி வனத்திடை யேவாழுங்
கோமுனி யத்தகு மென்று மனத்திறை கொள்ளாமே
ஏமுனை யுற்றிடில் ஏழு கடற்படை யென்றாலும்
ஆமுனை யிற்சிறு கூழென இப்பொழு தாகாதோ. 12

143 என்பன சொல்லி இரும்பன மேனியன் ஏனோர்முன்
வன்பனை வில்லினன் மல்லுயர் தோளினன் வாள்வீரற்கு
அன்பனும் நின்றனன் நின்றது கண்டரி ஏறன்ன
முன்பனின் வந்து மொழிந்தனன் மூரிய தேர்வல்லான். 13

## வேறு

144 கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவன் உயர்தோளான்
வெங்கரியின் ஏறனையான் விற்பிடித்த வேலையினன்
கொங்கலரும் நறுந்தண்டார்க் குகனென்னும்
குறியுடையான். 14

---

மடுத்து—கங்கைநதியிற் சேர்த்து (நிறைந்து.) இடை தூராதோ—(கடல்) இடத்தைத் தூர்த்துவிடாதோ?

141. ஆடு கொடிப்படை—ஆடுகின்ற கொடிகளை உயர்த்திய சேனையை. சாடி—அழித்து. வேடு—வேட்டுவச்சாதி. எடுத்து—படையெடுத்துவந்து. காணீரோ—பார்த்திர்களல்லவோ?

142. கோ—இராமபிரான். இறை கொள்ளாமே—சிறிதும் மனத்திற் கொள்ளாது. ஏ முனை உற்று இடின்—அம்புகளைப் போர்முனையிலே நின்று விடின். கடற்படை—கடல் போலும் படை. ஆ—பசு. முனையின்—முன்னர். சிறு கூழ்—இளம் பயிர். பசுமுன் உள்ள இளம் புல் முதலிய இல்லாமற் போதல் போன்று இருந்த இடந்தெரியாமல் அழிவர்.

143. இரும்பன மேனியன்—இரும்பு போன்று உறுதிபெற்ற மேனியன். ஏனோர் முன்—ஏனைய வேடர்களுக்கு முன். வாள் வீரன்—இராமபிரான். மேனியன் வில்லினன் தோளினனாகிய அன்பன் ஏனோர் முன் நின்றனன். அரி ஏறன்ன முன்பன்—பரதன். முன்பு—வலிமை. மூரிய—வலிய. தேர் வல்லான்—சுமந்திரன்.

144. நாவாய்—படகுகள். வெம் கரியின் ஏறு அனையான்—மதங் கொண்ட ஆண் யானை போன்றவன். வில்லைக் கையிலேகொண்ட சேனை சமுத்திரத்தை யுடையவன். கொங்கு அலரும்—தேன் சொரிகின்ற. குறி—பெயர்.

145 கற்காணுந் திண்மையான் கரைகாணுக் காதலான்
அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோள் மழைகாணு மணிநிறத்தாய்
நிற்காணும் உள்ளத்தான் நெறியெதிர்நின்
றனனென்றான். 15

146 தன்முன்னே யவன்றன்மை தந்தைதுணை முந்துரைத்த
சொன்முன்னே உவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல்
என்முன்னே அவற்காண்பென் யானேசென்
றெனவெழுந்தான். 16

147 என்றெழுந்த தம்பியொடும் எழுகின்ற காதலொடும்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினன் திருமேனி நிலையுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி எயினர்கோன் துண்ணென்றான். 17

---

145. கல் காணும் திண்மையான்—மலையை ஒத்த வலிமையை யுடையவன். கரை காணுக் காதலான்—இராமன்பால் கரைகாண வியலாத காதலை யுடையவன். அல்—இருள். கானில் அல் கண்டனைய அழகமைந்த மேனியான்: இன்றேல், அற்கு ஆணி கண்டனைய மேனியான்—இருளுக்கு உரையாணியைக் கண்டாலொத்த மேனியான். மல் காணும்—வலிமையின் எல்லையைக் கண்ட. மணி நிறம்—அழகிய நிறம். மழை காணும்—மேகத்தைக் கண்டாலொத்த. நின் காணும் உள்ளத்தான்—குகன் வழியெதிரே நிற்றலைக் கண்டு இங்ஙனம் கூறினன்.

146. தன் முன்னே—தனக்கு முன்பு. தந்தை துணை—தயரதனுக்குத் துணைவனான சுமந்திரன். முந்து உரைத்த சொல் முன்னே—முன்பு உரைத்த சொல்லினைக் கேட்டதும் கேளாததும். துரிசு—குற்றம். திருமனத்தான்—பரதன். மன்—இராமபிரான். தழீஇக்கொண்ட—தழுவிக்கொண்ட: தோழமை கொண்ட. மனக்கு—மனத்துக்கு. துணைவனேல்—நண்பனாயின். என்—அவன் வரும் வரையில் காத்திருப்பது எதற்கு! முன்னே யானே அவன் காண்பன்-அவன் என்னைக் காண்பதற்கு முன்னாக நானே அவனைக்காண்பேன். எழுந்தான்—இருக்கையினின்றும் எழுந்தான்.

147. என்று—என்று கூறி. எழுந்த தம்பியுடன்—தானெழுந்தபொழுதே உடனெழுந்த சத்துருக்கனுடன். எழுகின்ற காதலொடும்—உவப்பு காதலாக வளரலாயிற்று. குன்றெழுந்து சென்றதெனக் குளிர் கங்கைக் கரை குறுகி நின்றவனை—பரதனை. குகன் நோக்கினன். நெருங்கிய கரிய வாசனை வீசுகின்ற குஞ்சியை யுடைய வேடர் தலைவன் திடுக்கிட்டான்.

148 வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கரைகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையி னின்றிடை வீழ விம்முற்று நின்றொழிந்தான். 18

149 நம்பியுமென் நாயகனை ஒக்கின்றான் அயல்நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான் தவவேடந் தலைநின்றான்
துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ
பிழைப்பென்றான். 19

150 உண்டிடுக்கண் ஒன்றுடையான் உலையாத அன்புடையான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பெல்லாங்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்கள் நெறியென்னாத்
தண்டுறையோர் நாவாயில் ஒருதனியே தான்வந்தான். 20

---

148. வற்கலை—மரவுரி. நல் கலையில் மதிஎன்ன—நல்ல பிரகாசமான கலைகளை இழந்த சந்திரன் போன்று. கல்கனிய கரைகின்ற துயரானை—கண்ட கல்லும் கரையும்படி மனம் உருகும் துயரத்தை யுடையவனை: குகன் மனத்திலே தோன்றிய அபிப்பிராயம். கண்ணுற்றான்—முன்பு திருமேனி நிலை யுணர்ந்தான்; இப்பொழுது மனநிலையை நன்கு கண்டான். வில் கையினின்று இடை வீழ—கையில் இருந்த வில் தானாகவே நழுவிக் கீழே வீழ. விம்முற்று—மனங்கலங்கி. நின்றொழிந்தான்—செயலற்று நின்றான்: முதலிலே பரதன் மீது எழுந்த கோபம் முதலியன நீங்கப்பெற்றான்.

149. நம்பி—முன்பு 'வஞ்சனையால் அரசெய்திய மன்னர்' என்று குறிப்பிட்டவனை இப்பொழுது மனம் மாறிய நிலையில் 'நம்பி' என்று குறிப்பிடுகின்றான். தம்பி—இலக்குவன். திசை நோக்கி—இராமன் சென்ற தென் திசையை நோக்கி. தான் முன்பு எண்ணியது பொருத்தமில்லை எள்பதை யுணர்ந்து எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு என்று எண்ணினான். பிழைப்பு—தவறு.

150. உண்டு இடுக்கண்—நீடித்த துன்பம். உலையாத—நீங்காத; அழியாத. அன்புடையான்—இராமன், கொண்ட—மேற்கொண்ட. "முன்பு நாடு கொடுத்த எம் நாயகனுக்கிவர் நாமாளும் காடு கொடுக்கிலராகி எடுத்தது காலிரோ!" என்றவன் பரதன் புனைந்த தவவேடம் முதலியவற்றையும், பெருஞ்சேனையோடு வந்ததையுங் கண்டு காரணம் இன்னதென ஊகிக்க முடியாமல் 'குறிப்பெல்லாம் கண்டுணர்ந்து பெயர்கின்றேன்' என்றான். குறிப்பெல்லாம்—மனக்கருத்து முழுவதையும். கண்டு உணர்ந்து—நேரிற்கண்டும் கேட்டறிந்தும். பெயர்கின்றேன்—விரைவில் வருகின்றேன். காமின்கள் நெறி—வழியை யெல்லாம் ஒருவரும் வாராதபடி காவல் புரிமின். தனியே—வேறு துணையின்றி.

151 வந்தெதிரே தொழுதானை வணங்கினுன் மலரிருந்த
அந்தணனும் தனைவணங்கு மவனுமவ னடிவிழ்ந்தான்
தந்தையினும் களிகூரத் தழுவினுன் தகவுடையோர்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான். 21

வேறு

152 தழுவின புளினர் வேந்தன் தாமரைச் செங்க ணுனை
எழுவினு முயர்ந்த தோளாய் எய்திய தென்னை என்ன
முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி னின்றும்
வழுவினன் அதனை நீக்க மன்னனைக் கொணர்வான்
என்ருன். 22

153 கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழும் உயிர ணுகி
மீட்டுமண் ணதனில் விழ்ந்தான் விம்மினன் உவகை வீங்கத்

---

151. வந்து—நாவாயின் ஒரு தனியே தான் வந்து. (150) எதிரே தொழுதானை—தனக்கு முன்னே இராமன் இருக்கும் திசை நோக்கித் தொழுத பரதனை. (149) வணங்கினுன்—இராமனை வணங்குவது போன்று நீண்ட குஞ்சி மண்ணுறப் பணிந்தான். மலர் இருந்த அந்தணனும் தனைவணங்கும் அவனும்—திருமாலின் அவதாரமாகிய இராமபிரானையே அனவரதமும் நெஞ்சிலே கொண்டவனுதலால் தாமரை மலரிலுள்ள பிரமதேவனும் தன்னை வணங்குந் தகுதிவாய்ந்த பரதனும். அவன் அடிவிழ்ந்தான்—தன் பாதங்களிலே விழுந்து வணங்கிய குகனை. தந்தையினும் களிகூரத் தழுவினுன்—தந்தை மைந்தனைத் தழுவும்பொழுது உள்ள உவகையினும் மிக்க களிப்புடன் தழுவுவது போன்று தழுவினுன். தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்—தழுவிய நிலையில் களிகூர்ந்த குகனுடைய சிந்தனையை ஒட்டிக் கூறப்பட்டது. சீர்த்தி—புகழ்.

152. தழுவின புளினர் வேந்தன்—சீர்த்தியான் தழுவிய வேடர் தலைவன். தாமரைச் செங்கணுனை—பரதனை: தழுவிய பரதன் உவகை வெளிப்பட்டபடி. எழு—கணைய மரம். எழுவினும் உயர்ந்த தோளாய்—குகன் தன்னைத் தழுவிய தோளை அளந்தபடி. எய்தியது என்னை—வந்தது யாது காரியம் பற்றி? வழுவினன்—தவறிவிட்டான். அதனை—அவ்வழுவினை. மன்னனை—உரிய மன்னனுகிய இராமனை. மன்னனைக் கோணரும் பொருட்டு எய்தியது என முடிக்க.

153. கிளர்ந்தெழும் உயிரனுகி—இராமனுக்கு ஆபத்து வருமோ என்று ஐயுற்றபொழுது வாடிய உயிராகிய பயிர் பரதன் கூறியதைக் கேட்டதும் மழை பெய்தாற் போன்று ஒரு பங்கு தழைத்து ஓங்கலாயிற்று. மீட்டும் மண்ணதனில் விழ்ந்தான்—அதிக வெள்ளத்தினுல் பயிர் வளைந்து சாய்வது

தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவிற்
பூட்டிய கையன் பொய்யில் உள்ளத்தன் புகல லுற்றான். 23

154 தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்துத் தேக்கிப்
போயினை என்ற போது புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியி லம்மா. 24

155 என்புகழ் கின்றது ஏழை எயினனேன் இரவி என்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை ஒளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்க ளெல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய் உயர்குணத் துரவுத்
தோளாய். 25

156 எனவிவை இன்ன மாற்றம் இயைவன பலவுங் கூறிப்
புனைகழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன் பொருவில்
காதல்
அனையவற் கமைவிற் செய்தான் ஆரவற் கன்பி லாதார்
நினைவருங் குணங்கொ டன்றோ இராமன்மேல் நிமிர்ந்த
காதல். 26

---

போல, அளவு கடந்த உவகையினால் மறுபடியும் வணங்கினான். விம்மினன்—உடல் பூரிக்கப்பெற்றான்; பயிர் உயர்ந்ததோடு பருக்கவுஞ் செய்தது. எதனால் எனின்:—உவகை வீங்க—உவகை வெள்ளம் மேன்மேல் எழுதலால். இந்த நிலையில் பரதனை ஒரு முறை நோக்கினான். அவனது தீட்டுதற்கரிய திருமேனி யழகில், இராமபிரானது கார் குலாம் நிறத்தில் ஈடுபட்டது போன்று ஈடுபட்டு. பூட்டிய கையன்—(பாதங்களைப்)பற்றிய கையை எடுக்க மனமில்லாதவனானான். இராமன்பால் வைத்த அன்பிற்கு மேற்பட்ட அன்பு பரதன்மீது நிமிர்ந்தது. அந்நிலையிற் கூறலுற்றான்.

154. சிந்தனை முகத்துத் தேக்கி—கவலையை முகத்திலே நிறைத்து. போயினை—இராமனை அழைத்துப்போக வந்தாய். தன்மைகண்டால்—உனது இத்தன்மையைப் பார்த்தால். உனக்கு ஒப்பாவார்களோ! கேழ்—ஒப்பு.

155. ஏழை எயினனேன்—அறிவற்ற வேடனாகிய நான். புகழ்க்கற்றை—புகழப்படும் கிரணங்களின் தொகுதி. மன்—அரசர்கள். உரவு—வலிமை.

156. மாற்றம்—சொல். புலவு—புலால். பொருவு இல் காதல் அனையவற்கு அமைவில் செய்தான்—ஒப்பில்லாத காதலை அப்பரதன் மாட்டுத் தகுதியினாற் செய்தான். நினைவு அரும் குணம்—முன்பு 'செப்பருங் குணத்திராமன்' என்றார்; (அயோத்தி: 42.) நினைக்கவும் அரிய குணங்களாலல்லவோ குகனுக்கு இராமன் மேல் காதல் வெள்ளம் படிப்படியாகப் பெருகி நிமிர்ந்தது; அது போன்ற அருங்குணம் படைத்த பரதன் மாட்டும் அங்ஙனமே காதல் கடல்புரைய நிமிர்ந்தது.

## 23. குகன் அன்னையரைக் காணுதல்.

---

பரதன் தம்பியுடனும் தாய்மாருடனும் குகன் நாவாய் செலுத்தக் கங்கையைக் கடந்த பொழுது, அவ்வேடர் தலைவன் அன்னையர் மூவரையுங்கண்டு வணங்கிய வரலாறு இங்கே கூறப்படுகின்றது.

இப்பகுதியிற் காணப்படும் செய்யுள்கள் ஓசையினாலும் பொருளமைதியினாலும் மிகச் சீரியன என்று பலராலும் போற்றப்படுவன. பரதன் குகனுக்கு அன்னையரை அறிமுகஞ் செய்வித்தலைக் கூறும் இப் பகுதியில் குகனது பக்திப் பெருக்கம், பரதனது துன்பஞ் செறிந்த நிலைமை, மெய்ந்நிறுவிய தயரதன் பெருமை, கோசலையின் தெய்வீக மாண்பு, சுமித்திரையின் நிறை அன்பு, கைகேசியின் இடரிலாக் கொடுமை—இவற்றையெல்லாம் சீரிய ஓசை நலம் செறிந்த ஒரு சில பாடல்களினால் கண் முன்னே நிறுத்தும் கவிநயம் பல முறை படித்து இன்புறற்பாலது. பல திறப்பட்ட பாவநிலைகளைப் பெரும்பாலும் ஒரு நெறிப்பட்ட ஓசை நலம் வாய்ந்த செய்யுளில் அமைத்துக் கூறுந் திறம் நுனித்துணரற்பாலது.

[தெ. ப:—குகப்படலம்: 65-70.]

157 சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற
　　　கோசலையைத் தொழுது நோக்கி
வெற்றித்தார்க் குரிசிலிவ ராரென்று
　　　குகன்வினவ வேந்தர் வைகும்

---

157. தொழுது நோக்கி—கையினாற் கட்டாது தேவர் முதலியோர் தொழுவதுபோலத் தொழுது கண்ணால் நோக்கி. இவர் ஆர் என்ன—இங்ஙனம் தேவரும் சுற்றமும் தொழநின்ற பெருமையையுடைய இவர் யாவரோ என்னும் குறிப்புத் தோன்றும்படி வினவ; பரதனும் அதை உணர்ந்து கூறுவான். கொற்றத் தார்க் குரிசில்—வெற்றிமாலை சூடிய குரிசிலே! வேந்தர்

முற்றந்தான் முதற்றேவி மூன்றுலகும்
ஈன்றானை முன்னீன் றானைப்
பெற்றத்தாற் பெருஞ்செல்வம் யான்பிறத்த
லாற்றுறந்த பெரியாள் என்றான். 1

158 என்றலுமே அடியின்மிசை நெடிதுவீழ்ந்
தழுவானை இவனா ரென்று
கன்றுபிரி காராவின் துயருடைய
கொடிவினவக் கழற்கால் மைந்தன்
இன்றுணைவன் இராகவனுக்கு இலக்குவற்கும்
இளையவற்கும் எனக்கும் மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பான்
இந்நின்ற குரிசில் என்றான். 2

---

வைகும் முற்றத்தான்—தயரதன்; அரசர் வணங்கும் பொருட்டுக் காலம் பார்த்துக் காத்திருக்கும் முற்றத்தான். மூவுலகும் ஈன்றான்—பிரமன். அவனை முன் ஈன்றான்—திருமால்; இங்கு இராமன். பெற்றத்தால்—பெற்றதால்; விரித்தல் விகாரம். பெரியாள்—பெருந்தகையாள்.

158. நெடிது வீழ்ந்து—குஞ்சி மண்ணுறப் பணிந்து. அழுவானை—இராமனைப் பிரிந்த துயரம் முகத்திலே தெரிய அது கண்டு ஆற்றாது அழுகின்ற குகனை. இவன் ஆர் என்று—இப்படி அழுகின்றவன் யாவன் என்று. கன்று பிரி காராவின் துயருடைய கொடி—'கன்று பிரிந்துழிக் கறவை யொப்பக் கலங்கிய' கோசலை. (அயோத்தி. 58.) இராமன் மீதுள்ள அன்பு, அவனைச் சேர்ந்த குகன் மாட்டும் படர்ந்தமையால் 'கொடி' என்றார்; அன்றித் தன் மெல்லியல்புக்கு விஞ்சிய பாரம் சுமக்கும் கொடிபோலப் பெரிய துன்பத்தை ஆற்றியிருந்தவளாதலால் 'கொடி' என்றார் எனலுமாம். கழல்கால் மைந்தன்—மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றிய கோசலையின் மனோபாவங் கருதி பரதனும் 'மைந்தன்' எனப்பட்டான். இன் துணைவன் இராகவனுக்கு, இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான், குகன் என்பான் இந்நின்ற குரிசில். இதில் பரதன் தன்னை ஈற்றிலே வைத்துக் கூறியதும், 'குகன்' என்று பெயர் கூறி அறிமுகஞ் செய்ததும், அன்னையர் பெயர் குறியாமல் விட்டதும் அறியற்பாலன.

159 நைவி ரலிர்மைந்தீர் இனித்துயரால்
நாடிறந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்
றுமன்றே விலங்கற் றிண்டோள்
கைவீரக் களிறனைய காளையிவன்
தன்னோடுங் கலந்து நீவிர்
ஐவிரும் ஒருவிராய் அகலிடத்தை
நெடுங்காலம் அளித்திர் என்றாள். 3

160 அறந்தானே யென்கின்ற அயல்நின்றாள்
தனைநோக்கி ஐய அன்பின்
நிறைந்தானை உரையென்ன நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்ப தாக்கி

---

159. கன்றுபிரி காராவின் துயருடைய கொடி இருவரும் படுந் துயரங் கண்டு தன்துயரையும் மறந்து சமாதானஞ் செய்து அவர்களை வாழ்த்துகின்றாள். நைவீர் அலீர்—வருந்தற்பாலர் அல்லீர். மைந்தீர்—என்னுடைய மக்களல்லவோ; நானே தரித்திருக்க நீங்கள் இப்படி வருந்தலாமோ? இனி துயரால்—இனிமேல் துயரத்தால் வருந்த இடமுண்டோ! எல்லாம் நன்மையாக முடிதலைக் காணவில்லையோ! இறந்து—எல்லை நீங்கி. மெய்வீரர்—இராம லக்குமணர். விலங்கல் திண் தோள் கை வீரம் களிறு அனைய காளை இவன்—மலை போன்ற திண்ணிய தோளையுடைய, துதிக்கையையுடைய வலிமை மிக்க யானை போன்ற இவ்வீரன்; இவனிருக்கும்பொழுது காட்டிலே அவர்களுக்கு ஓர் இடையூறும் வாராதன்றோ! இவன் தன்னோடு கலந்து—இவனோடு மனங்கலந்து. ஒருவிராய்—ஒருவரைப்போல மனஒற்றுமையுடன். அளித்திர்—ஆளுங்கள்.

160. அறம் தானே என்கின்ற அயல் நின்றாள்—அறமே உருவெடுத்தாற்போன்ற சுமித்திரை. தயரதன் ஆணையின்றியும் 'அடியாரினில் ஏவல் செய்தி: முன்னம் முடி' என்றெல்லாம் கூறினமையின் 'அறம் தானே' எனப்பட்டது. அன்பின் நிறைந்தானை—நோக்கிய குகனுக்கு அவள் அகத்தியல்பு முகத்திற் காட்டிற்று. நெறிதிறம்பாத் தன் மெய்யை நிற்பதாக்கி இறந்தான்—தன் வாய்மையை நிலை நாட்டிப் பின்பு உயிர்விட்ட தயரதன்: 'ஈந்தேன், ஈந்தேன் இவ்வரம்; என் சேய் வனமாள மாய்ந்தே நான் போய் வானுலகாள்வேன்' என்று கூறி அப்படியே உயிரைவிட்டுத் தன் புகழை நிறுவியவன். இளந்தேவி—கைகேயியை அரசன் துறந்தமையால் இவளொருத்தியே இளந்தேவி ஆயினாள். யாவர்க்கும் தொழுகுலமாம் இராமன்—யாவருக்கும் குலதெய்வம் போன்ற

இறந்தான்றன் இளந்தேவி யாவர்க்குந்
தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளனென்னப் பிரியாதான்
றனைப்பயந்த பெரியாள் என்றான். 4

161 சுடுமயா னத்திடைதன் துணைஏகத்
தோன்றல்துயர்க் கடலி னேகக்
கடுமையார் கானகத்துக் கருணைஆர்
கலிஏகக் கழற்கால் மாயன்
நெடுமையால் அன்றளந்த உலகெல்லாந்
தன்மனத்தே நினைந்து செய்யுங்
கொடுமையால் அளந்தானை யாரிவரென்
றுரையென்னக் குரிசில் கூறும். 5

162 படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கும்
உயிர்ப்பாரம் குறைந்து தேய

---

இராமன்: 'கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ' (திருவாய்மொழி: 7:5:1.) என்பது ஈண்டு நோக்கற் பாலது. பின்பு பிறந்தானும் உளன் என்ன—'தம்பியுடையான் பகையஞ்சான்' என்பதற்கிலக்கியமாகப் பிறந்த தம்பியும் உளன் என்று உலகம் கூறும்படி. பிரியாதான்—'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்தற்கு' உடனுறைபவனாகிய இலக்குவனை. பெரியாள்—அத்தகைய மகனை ஈன்றளித்த பெருந்தகையாள்.

161. பிணங்கள் சுடும் காட்டிடைத் தன் கணவன் செல்லவும், தன் மகன் துயரமாகிய கடலில் விழவும், கடிய வெங்கானிடத்தே கருணைக் கடலாகிய இராமபிரான் ஏகவும், வாமன வேடத்தோடு வந்து வஞ்சித்துத் திரிவிக்கிரமனாக வளர்ந்த பேருருவத்தினால் அன்று அளந்த உலகம் முழுவதையும், வேண்டுமென்று எண்ணிச் செய்த கொடுமையால் துன்பத்தில் மூடியவனைக் கண்டு "இவர் யார்!" கூறுவாயாக என்று குகன் வினவப் பரதன் கூறுவான். இதில் அடங்கிய உவமானம் முதலியவற்றின் நயங்களை ஏற்ற பெற்றி ஆராய்ந்தறிக. (கம்பராமாயண சாரம்: பக். 201. பார்க்க.)

162. படர்—துன்பம். துன்பம் என்றுள்ள வெல்லாவற்றையும் படைத்தவள். பழிச்செயலைப் புரிந்தும் அதற்கு இரங்குதல், அன்றித் தன்னுயிரை

உடரெலாம் உயிரில்லா எனத்தோன்றும்
உலகத்தே ஒருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யறிந்திலையோ
இந்நின்றாள் என்னை ஈன்றாள். 6

---

மாய்த்தல் செய்யாது பழியை மேலும் வளர்க்கின்ற செவிலித்தாய் போன்றவள். பாழ்த்த—பாழ்பட்ட. பாழ்த்த வயிறு: பாழ்பட்ட வயிறு. நெடுங் காலம் கிடந்தேற்கும்—நீண்ட காலம் தங்கியமையினாலே கொடுமை ஊறியுள்ள எனக்கும். உயிர்ப்பாரம்—சரீரம். குறைந்து தேய—வரவர மெலிந்து முடிவில் முற்றும் தேய்ந்து தேய்ந்து அற்றுப் போகும்படி; 'தோன்றும்' என்பதனோடு முடிந்தது. உயிர் இல்லா எனத் தோன்றும்—உயிர்க் களை அற்றுத் தோன்றும்; உலகத்தே இடரிலா முகத்தாள் ஒருத்தி யன்றே; இவளை அறிந்திலையோ! இந்நின்றாள்—இங்கே நின்றவள்.

---

## 24. இராமபிரான் தயரதன் இறந்தது கேட்டுப் புலம்பல்.

---

பரதனை விசாரித்தறிந்த இராமபிரான் தயரதன் இறந்தது கேட்டு அறிவு கலங்கி மண்ணிலே விழுந்து மயங்கிப் பின்பு புலம்பிய புலம்பல் இங்கே காணப்படும்.

இச் செய்யுள்களில் அமைந்த ஓசை நலத்தின் இயல்பு இது போன்ற வேறு பகுதிகளோடு ஒப்பிட்டு உணரற்பாலது. பெருந் துயர் காரணமாக வாய்விட்டுப் புலம்பல் உலக வியற்கை. புலம்பலின் ஒலி அவரவர் பண்பிற்கேற்றவாறும், துயரத்தின் ஆழத்திற் கேற்றவாறும் உருக்கொள்ளும். சூர்ப்பநகையின் புலம்பல் அவளுடைய அரக்கப்பண்பிற் கேற்பப் பெரும் ஆரவாரத்தோடு செல்கிறது. (பாடம்: 27.) சீதாபிராட்டி புலம்பல் மாறி மாறி அலையெறியுங்கடல் போலெழும் ஆழ்ந்த வேதனைக் கேற்றவாறு மலையினின்று வீழ்ந்து சுழன்று நிமிரும் அருவி வெள்ளம்போல் அமைந்துளது. (பாடம்: 64.) விபீடணன் புலம்பல் கழிவிரக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரு விதமான தெளிவோடு இயல்கின்றது. (பாடம்: 69.) இராமபிரான் புலம்பல் அவனது நினைவரும் குணத்துக் கேற்பப்

பிழையைத் தன் தலைமேல் வைத்த உணர்ச்சியினின்றும் வெளிப் பட்டு, தந்தைபால் அன்பு ததும்ப, மேலே அடங்கிக் கீழே ஆழ்ந்து செல்லும் கங்கை வெள்ளம்போற் செல்கின்றது.

இப்பகுதியில் தயரதனது வாய்மை, ஆட்சிச்சிறப்பு, மகவன்பு முதலிய எல்லாப்பண்புகளும் வெளிப்படுவதோடு, இராமபிரான் அவன்பால் வைத்த பெருமதிப்பும் ஆழ்ந்த அன்பும் புலப்படு கின்றன.

[தெ. ப:—திருவடி சூட்டுபடலம்:—60-66.]

163 நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் தாயே தயாநிலையே
எந்தாய் இகல்வேந்த ரேறே இறந்தனையே
அந்தோ இனிவாய்மைக் காருளரே மற்றென்றான். 1

164 சொற்பெற்ற நோன்பின் துறையோன் அருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி நவைநீங்க நீஇயற்றி
எற்பெற்ற நீபெற்றது இன்னுயிர்போய் நீங்கவோ
கொற்பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய். 2

---

163. இச்செய்யுள் தயரதனது பெருமைகளை யெல்லாம் தொகுத்துக் கூறும். நந்தா—அணையாத. நந்தா விளக்கனைய நாயகன்—இராமன் பெயர் இருக்கும் வரையில் குன்றாத புகழாகிய விளக்குப் போன்ற தலைவன். தந்தாய், தாயே, தயாநிலையே—புகழ் விளக்கின் மூன்று சுடர். புகழுக்குக் காரணம். எந்தாய்—உலகுக்குத் தந்தை போன்று எனக்குந் தந்தையானவனே! அறத் தின் தாயே:—சிறப்பினால் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஏறு—ஆண்சிங்கம். இகல் வேந்தர் ஏறே—நான்காவது சுடர். இனி வாய்மைக்கு ஆர்—ஐந்தாம் சுடர். உளரே மற்று—வேறு முன் பின்னாகக் கூறத்தக்கவரும் உளரோ! மேல் வருவன இவற்றைத் தனித்தனி ஓராற்றான் விரித்துக் கூறும்.

164. சொல்—புகழ். நோன்பின் துறையோன்—விரத ஒழுக்க நெறியில் நின்ற கலைக்கோட்டு முனிவன். நல்பெற்ற—நன்மையைப் பெற்ற. நவை—குற்றம். என் பெற்ற நீ—என்னை மகனாகப் பெற்ற நீ. கொன் பெற்ற—அச்சந் தருகின்ற. ஈற்றடி 'இகல்வேந்தர் ஏறே' என்பதன் விரி.

165 மன்னுயிர்க்கு நல்குரிமை மண்பாரம் நான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந் தாரோய் பொறையுயிர்த்த வாறிதுவோ
உன்னுயிர்க்குங் கூற்றாய் உலகாள வுற்றேனோ
மின்னுயிர்க்குந் தீவாய் வெயிலுயிர்க்கும் வெள்வேலாய். 3

166 என்பரத்த தாக்கி அரசுரிமை இந்தியங்கள்
வெம்பவத்தின் வியத் தவம்விளைத்த வாறிதுவோ
சம்பரப்போர்த் தானவனைத் தள்ளிச் சதமகன்தன்
அம்பரத்தின் நீங்கா அரசளித்த ஆழியாய். 4

167 வேண்டு திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டிவ் வுலகுக்கு இடர்கொடுத்த புல்லனேன்
மாண்டு முடிவதல்லால் மாயாஉடம் பிதுகொண்டு
ஆண்டு வருவதினி யார்முகத்தை நோக்கவோ. 5

---

165. இச்செய்யுள் 'நானிலத்தோர் தந்தாய்' என்பதன் விரி. மன் உயிர்க்கு நல்கு உரிமை மண்பாரம்—நிலைபெற்ற உயிர்களுக்கு அருள் செய்கின்ற உரிமையோடு கூடிய அரசியற் பொறுப்பு. பொன் உயிர்க்கும் தார்—பொன்னாலாகிய மாலை. பொறை உயிர்த்தல்—இளைப்பாறுதல். தீவாய்—கொடிய முனையையுடைய. வெள்வேல்—வெள்ளியவேல்.

166. இது 'தனியறத்தின் தாயே' என்பதின் விரி. அரசுரிமையை என் வசமாகச் செய்துவிட்டு. இந்தியங்கள் வெம்பவத்தின் வியத் தவம் செய்த வாறு—ஐம்பொறிகளைக் கொண்டு கொடிய பிறவியினின்றும் நீங்கும்படி தவஞ்செய்தனுபவித்த விதம். தள்ளி—அழித்து. சதமகன்—இந்திரன். அம்பரம்—விண்ணுலகம். ஆழியாய்—சக்கரவர்த்தியே. ஆழி—ஆஞ்ஞா சக்கரம்.

167. 'அந்தோ' என்பதன் விரி இச் செய்யுள். ஒன்றை விரும்புகின்ற இயல்பினரும் விரும்பாத அரசாட்சியை நான் மேற்கொள்ள அமைந்து; தான் முதலிலே அரசாட்சியை வேண்டாமென்று மறுத்திருந்தால் இத் துன்பங்களெல்லாம் சேர்ந்திரா என்று கூறுகின்றான். உலகுக்கு—நானிலத்தோர் தந்தையாதலின் தான் அடைந்ததைவிட உலகம் அடைந்த துன்பத்தையே பெரிதாகக் கருதுகின்றான். மாயா உடம்பு இது கொண்டு—போகாத உயிருடன்: இவ்வளவு பெரிய துன்பத்தை அடைந்தும் தன்னுயிர் போகாமையைக் குறித்துத் தன்னை நொந்துகொள்ளுகின்றான். ஆண்டு வருவது—அவ்விடம் திரும்பி வருவதென்பது. இனி யார் முகத்தை நோக்கவோ—இனி உன்னுடைய முகத்தை எங்கே காணப் போகின்றேன்.

168 தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கானடைந்தேன் என்னத் தரியாது காவலநீ
வானடைந்தாய் இன்னமிருந் தேன்நான் வாழ்வுகந்தே
ஊனடைந்த தெவ்வர் உயிரடைந்த ஒள்வேலாய். 6

169 வண்மைஇயும் மானமும்மேல் வானவர்க்கும் பேர்க்ககிலாத்
திண்மைஇயும் செங்கோல் நெறியுந் திறம்பாத
உண்மைஇயும் எல்லாம் உடனேகொண் டேகினையே
தண்மைஇ தகைமதிக்கும் ஈந்த தனிக்குடையோய். 7

---

168. இது 'தயாநிலையே' என்பதன் விரி. தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டு—வண்டுகள் தஞ்ச மாக வந்து தங்குகின்ற சோலைகளையுடைய இனிய நாட்டைத் துறந்து. கான் அடைந்தேன் என்ன—கொடிய காட்டை அடைந்தேன் என்று சொல்லியவுடனே. தரியாது—சிறு காலப் பிரிவையும் பொறுத்துத் தரிக்கலாற்ருது. வானடைந்தாய்—'கானகமே மிகவிரும்பி நீ துறந்த வளநகரைத் துறந்து நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன்' என்பதுபோன்று வானடைந்தாய். (பெருமாள் திருமொழி: 9 : 10.) இன்னம் இருந்தேன் நான்—நீ வானடைந்தாய் என்று கேட்டும், நீங்கா உயிரோடு இன்னும் இருந்தேன். ஏன் எனில்:— வாழ்வு உகந்தே—உன்பால் வைத்த அன்பினும் உயிர் வாழ்வதில் கொண்டுள்ள விருப்பத்தினுல் அதை உகந்து.

கற்பனை முதலிய அலங்காரப் பண்பின்றியே சோலைகளில் தேன் அடைவதுபோல நேரே நெஞ்சிலே சென்றடைகின்ற உணர்ச்சி நலம் வாய்ந்தது இச் செய்யுள்.

169. இது 'வாய்மைக்கு ஆருளரே' என்பதன் விரி. மானம்—பெருமை. வானவர்க்கும் பேர்க்ககிலாத் திண்மை—தேவர்களெல்லாம் ஒன்று சேர்ந் தாலும் அசைக்க முடியாத வலிமை. உடனே—உன்னுடனே; கூடவே. தகைமை தண் மதிக்கும் ஈந்த தனிக்குடையோய்—சந்திரனைவிடக் குளிர்ச்சி செய்யும் ஒப்பற்ற குடையை யுடையவனே!

அயோத்தியா காண்டம் முற்றிற்று.

---

# 3. ஆரணிய காண்டம்.

## 25. கோதாவரிக் காட்சி.

---

அகத்திய முனிவன் பணித்தபடியே, சடாயு வழி காட்ட, பஞ்சவடியை நோக்கிச் சென்றவர் கோதாவரி நதியினையும் அதன் காணுதற்கினிய காட்சிகளையும் கண்டு களித்தனர். அவ்வண்ணம் கண்டு களித்த வரலாறு இப்பகுதியிற் கூறப்படு கின்றது.

இப்பகுதியில் கோதாவரி நதியின் சிறப்புக் கூறப்படு கின்றது. சரயுநதியைப் போலவே கல்லிடைப் பிறந்துபோந்து கடலிடைக் கலக்குமுன் ஐவகை நிலங்களிலும் படர்ந்தவழி ஆங்காங்கு வாரிக்கொணர்ந்த மணி, பொன் முதலாய பொருள் களெல்லாம் கட்புலனாம்படி பஞ்சவடிக்கருகே ஓடும்பொழுது கோதாவரி நீர் தெளிந்து தண்ணென்றொழுகிற்று. அதன் இனிமையை யாவரும் நுகரும் வண்ணம் பல படித்துறைகள் ஆங்காங்கு அமைக்கப்பட்டிருந்தன. கரை மருங்கில் குவளை தாமரை முதலியன மலர்ந்து அழகு செய்தன. காற்றினால் அலைப்புண்ணும் அப்பெரிய நீர் நிலையிலெழும் ஆரவாரத்தி னிடையே ஒரு பக்கம் அன்னங்கள் சஞ்சரிக்கும்; ஒரு பக்கம் யானைகள் இணைந்து சென்று நீருண்டு மீளும்.

இராமபிரானும் சீதாபிராட்டியும் இத்தகைய காட்சியைக் கண்டு சொல்லிறந்த புதியதோர் இன்பம் அனுபவித்தனர். கங்கைக்கரை மருங்கினும் சித்திரகூட மலைச்சாரலினும் காணாத தொரு புதிய உவகைமேலிட்டவராய், சொல்லின் துணை வேண் டாது கண்பார்வையினாலேயே மனக்குறிப்புப் புலனாம்படி, காடுறை வாழ்க்கை இன்பத்தின் உச்சநிலையை அடைதற்கிடனா யிருந்த கோதாவரிக்காட்சி இச்செய்யுள்களில் பல்லலங்காரப் பண்பு வெளிப்படக் கூறப்படுகின்றது.

[தெ. ப:—சூர்ப்பநகைப்படலம் 1—4, 6.]

1 புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச்
சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார். 1

---

1. சான்றோர் கவியைப்போல இருந்த கோதாவரி நதியை இராமலக்குமணர் கண்டார் என்று கூறுகின்றது இச் செய்யுள். சிலேடையுவமை.

கோதாவரிக்கு:-- புவியினுக்கு அணியாய்—பூமிக்கு இன்றியமையாத அலங்காரமாகி; இந்நதியைப்பற்றி இதிற் கூறப்படும் பொருளை ஒரு சொல்லில் அமைத்துக் கூறுகின்றது. எல்லா உயிர்களும் வாழ்தற்கின்றியமையாப் பொருள்களை விளைவித்தும் தூய்மை செய்தும் வருதலால் அணியாயிற்று. ஆன்ற பொருள் தந்து—அடியிலே நிரம்பிய மணி பொன் முதலிய பொருளை எளிதிலே தந்து; புலத்திற்றாகி—விளை நிலங்களிலே தண்ணீர் பாயும்படி அதற்கேற்ற உயர்நிலையை யுடையதாகி; புலம்—வயல். அவி அகம் துறைகள் தாங்கி—வெப்பத்தைத் தணிக்கின்ற மரச் செறிவினையுடைய நீர்த்துறைகளைக் கொண்டு; ஐந்திணை நெறி அளாவி—குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐவகை நிலங்களின் வழியைச் சார்ந்து; சவி உறத் தெளிந்து—அடியிற் கிடந்த மணி முதலியன வெல்லாம் கண்ணுக்குத் தோன்றும்படி தெளிந்து; சவி—ஒளி; ஈண்டு கண்ணொளி ஊடு செல்லுமாறு தெளிந்து தண் என்று ஒழுக்கமும் தழுவி—குளிர்ந்த நீர்ப்பெருக்கை இடையறாது கொண்டு; சான்றோர் கவிபோல இருந்த கோதாவரியினை வீரர் கண்டார்; வீரர் கண்டமை சீதாபிராட்டியும் கண்டமைக்கு உபலக்கணம்.

சான்றோர் கவிக்கு:—புவியினுக்கு அணியாய் — உலகிலுள்ள நன்மக்களுக்கு இன்றியமையாத ஆபரணம் போலாகி, அதாவது உயர்ந்தோரால் நன்கு மதிக்கப்பட்டு; அணியாதற்குக் காரணம் மேலே விவரிக்கப்படுகின்றது. ஆன்ற பொருள் தந்து--சொல்லின் அளவிற்கு விஞ்சிய குறிப்புப் பொருள் முதலியவற்றால் நிரம்பிய பொருளைத் தந்து; புலத்திற்றாகி — அப்படிப் பொருள் நிரம்பிய விடத்துக் கற்போர் அறிவிற்குப் புலனாதற்குக் காரணமான உறுப்புக்களைக் கொண்டதாகி; அவி அகத்துறைகள் தாங்கி—தேவர் உணவைப்போன்று இன்சுவையுடைய அகப்பொருள் துறைகளைக் கொண்டு; ஐந்திணை நெறி அளாவி—அன்பின் ஐந்திணைக்குரிய முதல் கரு உரிப் பொருள்களில் ஏற்றவை விரவப்பெற்று; சவி உறத் தெளிந்து—அதன் பொருள் விளங்க அறிவொளி மிகும்படி தெளிவுற்று; தண்ணென்று ஒழுக்கமும் தழுவி —கேட்ட அளவிலேயே மனத்தில் இனிமையைத் தோற்றுவிக்கும் ஓசையோடு பொருந்திய சொன்னடையுடையதாய்; அமைந்த சான்றோர் கவி என முடிக்க.

2 வண்டுறை கமலச் செவ்வி வான்முகம் பொலிய வாசம்
உண்டுறை குவளை ஒண்கண் ஒருங்குற நோக்கி ஊழின்
தெண்டிரைக் கரத்தின் வாரித் திருமலர் தூவிச் செல்வர்க்
கண்டடி பணிவ தென்னப் பொலிந்தது கடவுள் யாறு. 2

3 எழுவுறு காத லாலிங் கிரைந்திரைத் தேங்கி யேங்கிப்
பழுவநாட் குவளைச் செவ்விக் கண்பனி பரந்து சோர
வழுவிலா வாய்மை மைந்தர் வனத்துறை வருத்த நோக்கி
அழுவதும் ஒத்த தாலவ் வலங்குநீர் ஆறு மன்னோ. 3

4 ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல்
செய்தான்

---

2. வண்டுகள் தங்குகின்ற தாமரை மலர்களாகிய அழகிய ஒளி பொருந்திய முகம் மலர்ச்சியடைய. வாசம் உண்டு—மணம் தங்கப் பெற்று. ஒருங்குற நோக்கி—வைத்தகண் வாங்காது ஒன்றுபட்டது போன்று நோக்கி. ஊழின்—முறையே. வரிசையாக வருகின்ற அலைகளால் வாரி. அழகிய மலர்களைத் தூவி, வீரரைக் கண்டு அடி பணிவது போன்று விளங்கிற்று அந்நதி. யாறு பொலிய நோக்கி தூவி அடிபணிவதென்னப் பொலிந்தது.

3. எழுவுறு காதலால்—காணுந்தோறும் மேலே கிளர்ந்தெழுகின்ற காதலினாலே. இங்கு—அசை. இரைத்து இரைத்து ஏங்கி—பெரிய ஓலமிட்டு ஏக்கங்கொண்டு. பழுவம் நாள் குவளை—காடு போன்று மிகுதியாகவுள்ள அன்றலர்ந்த குவளைகளாகிய. செவ்விக் கண்—அழகிய கண்களினின்றும். பனி பரந்து சோர—நீர்த்துளிகள் பரவிச் சிந்தும்படி. மைந்தர் வனவாசஞ் செய்யும் துன்பத்தைக் கண்டு அழுவதும் ஒத்தது. அலங்கு நீர் ஆறு—அசைகின்ற நீரையுடைய ஆறு. வழு இலா வாய்மை மைந்தர்—குற்றமில்லாத மைந்தர்; வாய்மையை மேற்கொண்ட மைந்தர். இத்தகைய பண்பு மேம்பட்டவரும் காட்டில் வந்து வருந்துகின்றமையை நோக்கி அழுவது போன்றது.

4. ஓதிமம்—அன்னப்புள். இவர்கள் வருவதைக் கண்டு ஒதுங்கிச் சென்றது. அப்படி அது விலகிச் சென்றதை சீதாபிராட்டியின் நடைக்கு வெட்கி ஒதுங்கியதாக உட்கொண்ட இராமபிரான் சீதையின் நடையை நோக்கி ஓர் இளமுறுவல் புரிந்தான். மாது அவள் தானும்—அக்குறிப்பை உணர்ந்த சீதாபிராட்டியும். அங்கே வந்து நீருண்டு மீளும் யானை நடப்பதைப் பார்த்து அந்த யானையின் நடையை அவனது நடை வென்ற குறிப்புத் தோன்ற, புதியதோர் முறுவல் பூத்தாள்—அதுவரையில் இல்லாத புதிய இனி

மாதவள் தானும் ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
போதக நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள். 4

5 வில்லியல் தடக்கை வீரன் விங்குநீர் ஆற்றின் பாங்கர்
வல்லிகள் நுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்குல் நோக்க
எல்லியங் குவளைக் கானத் திடையிடை மலர்ந்து நின்ற
அல்லியங் கமலங் கண்டாள் அண்ணல்தன் வடிவு கண்டாள். 5

---

மையையுடைய முறுவல் அழகுபெறப் பூத்தவளானாள். போதகம்—பத்து வயது யானைக்குட்டி. உழையள்—பக்கத்திலிருப்பவள். முறுவல் மொழியினாலேயே இருவரும் பேசி என்றுமில்லாத புதிய இன்பக் களிப்பில் மூழ்கினார்கள்.

5. வில்லியல் தடக்கை வீரன்—இராமபிரான். விங்கு நீர் ஆற்றின் பாங்கர்-பெருகுகின்ற நீர் நிறையும் ஆற்றின் பக்கத்திலே. வல்லிகள் நுடங்கக் கண்டான்—சீதாபிராட்டியின் இடைக்குப் பேருவமையாக விளங்கிய கொடிகள் அசைவதைப் பார்த்தான். மங்கைதன் மருங்குல் நோக்க—உவமேயமாகிய அவளது மருங்குலை நோக்கினான். அப்படி நோக்க; அவனது பார்வையின் உட்கருத்தை யுணர்ந்த அவளும் (முதலில்), எல்லி அம் குவளைக் கானத்து—இருள்போற் கரிய நிறமுள்ள குவளைக் காட்டினிடையே; அல்லி அம் கமலம் கண்டாள்—இதழ்களை யுடைய தாமரையைப் பார்த்தாள்: (பின்பு) அண்ணல்தன் வடிவு கண்டாள்—குவளைக் காடுபோன்ற மேனியினிடையே தாமரை மலர்ந்தது போன்று விளங்கிய கண், கால் முதலியவற்றோடு விளங்கிய அவனது வடிவத்தைக் கண்டாள்.

---

## 26. சூர்ப்பநகை இராமபிரானைச் சந்தித்தல்.

மூவரும் பஞ்சவடியில் வாழ்ந்துவரும் காலத்தில் ஒரு நாள் சூர்ப்பநகை அவ்விடம் வந்தாள். அவள் தமயனாகிய இராவணன் காலகேயர் என்னும் அசுரரை வென்று திக்குவிசயஞ் செய்த காலத்தில் அவளது கணவனை மைத்துனனென்று பாராது கொன்றுவிட்டான். விதவை இடும்பை எய்திய சூர்ப்பநகை அவன்மீது கடுஞ்சினங் கொண்டு, பலவாறு நிந்தித்துக் கலங்கி யழ, அவன் அவளைச் சமாதானஞ் செய்யும் பொருட்டுத் தண்டக வனத்திற்கு அனுப்பி, அன்னவளுக்குத் துணையாகக் கரன் முதலிய வீரரை ஜனஸ்தானத்தில் இருத்தினான். அக்

காலம் முதல் சூர்ப்பநகை அந்த வனத்திலே தன் மனம் போனபடி எங்குந் திரிந்து வருவாளாயினள். அங்ஙனந் திரிபவள் ஒரு நாள் பஞ்சவடியை எய்தினள்; இராமபிரானைத் தற்செயலாகக் கண்டு விட்டாள்; கண்டவள் அவன் மேனியழகில் ஈடுபட்டாள்; காமம் கதுவப்பட்டாள். எப்படியும் அவனை அடைய வேண்டும், இன்றேல் ஆவி நில்லாது என்று கருதி ஒரு மந்திரத்தின் உதவியினால் தன் உருவத்தைப் பாருமையின் இல்லதொரு மெல்லுருவமாக மாற்றிக்கொண்டு, அன்னநடை நடந்து, இராமபிரானை அணுகி, தன் மனோரதம் நிறைவேறும் வண்ணம் அவனிடம் பேசலுற்றாள். அப்படி அவள் அப்பிரானை முதல் முறை கண்டு பேசிய வரலாறு இப்பகுதியிற் கூறப்படுகின்றது.

கம்பர் தம் நாடகத்திறமை விளங்கும்படி படைத்த பாத்திரங்களுள் சூர்ப்பநகைக்கு ஒரு தனி இடம் உரியது. நவீன அகநூற் கொள்கைகளுக்கு எல்லா வகையாலும் இயைந்த வண்ணம் இவளுடைய குணம், மனோபாவம், உள் மனத்தின் செயல் முதலியவற்றைச் சமைவுறப் படைத்துள்ளார். இவள் மாட்டு அரக்கர்க் குரிய வஞ்சனை, பொய்ம்மை, கண்டதிலே கால் தாழும் அவா, பிறர் மனநிலை கருதாது தன் வல்லமையையே மதிக்கும் பேதைமை, கொண்டது விடாப்பிடிவாதம், தன்னினப் பற்று முதலிய இழிபண்புகள் மலிந்திருந்தன. அவற்றோடு இவளிடம், 'கொல்லாத மைத்துனனைக் கொன்றானென்பது கருதிக் கொடுமைசூழும்' (யுத்த: 286.) இயல்பும் தடித்திருந்தது; தன் கணவனை இழந்து, கைம்மைத் துன்பம் கைம்மிக்க நிலையில் இராவணன்மீ தெழுந்த கொதிப்பும் வெறுப்பும் காலம் பல சென்றும் முற்றாக நீங்கவில்லை. வெளித்தோற்றத் தளவில் அதன் ஆரவாரம் அடங்கியபோதிலும் உள்ளுள்ளே அவளறியாமலே பிரஞ்ஞைக்கு அப்பாற்பட்ட எல்லையில் பகைமை யுணர்ச்சி வேரூன்றிக் கிடந்தது; இராமபிரானைக் கண்டபொழுது தோன்றிய காதலோடு தானும் தொழில் புரியலாயிற்று. இங்ஙனம் வெளிப்பார்வைக்கு மங்கியது போன்று உண்மையில் ஊறிய பகைமை, அது முதல் இவள் அறிந்தும் அறியாமலும் தன் காரியத்தை நிறைவேற்றத் தொடங்கிற்று; மற்றொன்று சூழினும் தான் முந்துறும் ஊழ்வினைபோல இவளது

சிந்தனையிற் கலந்துநின்று இவள்பேச்சிலும் செயலிலும் மாறி மாறிப் பல்வேறு உருக்கொண்டு தன்னை வெளிப்படுத்தலாயிற்று.

இக்காரணத்தினலேயே இராமபிரானிடம் செல்லும் பொழுது அரக்க உருவத்தை மாற்றிக்கொண்டு செல்லவேண்டும் என்ற எண்ணம் இவளுக்குத் தோன்றிற்று. மேலும் அப் பிரானிடம் பேசும்பொழுது 'அம் மாய வல்லரக்கரோடு வாழ் வினை மதிக்கலாதேன்' எனவும், 'நீங்கினேன் அப்பழிபடு பிறவி' எனவும் அரக்கர்க்கு எதிர்த்தட்டான மனேபாவத்தை ஏறிட்டுக் கொண்டு பேசலானுள். இரண்டாம் முறை இராமபிரானைக் கண்டு பேசும்பொழுதும் அவன், 'அரக்கர் குலந் தொலைத்த பின்னரே நாடுபுகுவோம்' என்று கூறக்கேட்டவள், இராவணன் மீது ஏற்பட்ட பகைமையுணர்ச்சி தலையெடுப்ப, தன்னை இராமன் கட்சியினள் என்று கருதித் தன் தமயனைப் பழி வாங்கத் திட்டம் போட்டு, 'களங் கோடற் குரிய செருக் கண்ணியக்கால் ஒரு மூவேங் கலந்த காலை......................இருகோளுஞ் சிறை வைத்தாற்கு இளையேன்' என்று கூறலானுள். இவள் மனதில் இராமன்மீது காதலும் கோபமும் மாறி மாறித் தலையெடுத்தது போலவே இராவணன்மீது பழிவாங்கும் பகைமையுணர்ச்சியும் சகோதர உணர்ச்சியும் மாறி மாறித் தலையெடுத்தன. அவள் இராவணனிடம் பேசும்பொழுதும் இந்த முரண்பட்ட மனே பாவம் வெளிப்பட்டு நின்றது. இராமலக்குமணரைப் பற்றி அவனிடங் கூறும்பொழுது, 'நுங்கள் குலம் வேரோடு மடங்கக் கோறுமென முந்தைபொரு சூளுறவு கொண்டார்' என்று தான் இராமன் பக்கத்தவள் என்று பிறர் கருதும்படி, ஆனல் அத் தகைய நினைவு இன்றிப் பேசலானுள். சில சமயம் இந்த முரண் பாடு உள்மனத்தின் சேட்டையால், தன்னுணர்ச்சியில் தட்டா மலே ஏக காலத்தில் சிலேடையாக உருக்கொண்டு வெளிப்பட லாயிற்று. சீதையைப் பெற்ற பின் இராவணன் அடையப் போகும் பெருஞ்சிறப்பை விரிக்கப்புக்கவள் அவனுக்கே நன்மை, பெருமை எல்லாம் உண்டு என்று கருதிக்கூறிய அச்சொற்களி லேயே சிலேடையாக மற்றொரு நேர்மாறுன அமங்கலப் பொரு ளும் அவள் அறியாமலே புகுந்தது. (ஆரணிய: 122, 123, 124.) பேசும்பொழுது அவனுடைய நன்மையையே குறித்துப் பேசும் பேச்சிலே மற்றொரு விபரீதமான பொருளைப் பகைமை வேருன்

றிய உள்மனம் புகுத்த வல்லதாயிற்று. இங்ஙனம் தலைகிழான காதலால் தூண்டப்பட்ட உள்மனத்தின் செயல் முறையைச் சூர்ப்பநகை வாயிலாக நவீன அகநூன் மரபு விளங்கும்படி ஆசிரியர் கோடித்துக் காட்டியுள்ளமை பெரிதும் வியக்கற்பாலது.

இதுவரையிற் கூறியனவெல்லாம் சூர்ப்பநகையைப் பற்றி வரும் பகுதிகள் எல்லாவற்றிற்கும் பொதுவாகக் கொள்ளற்பாலன. இனி இப்பாடத்திற்கே சிறப்பாக உரிய சிலவற்றையுங் கூறுதல் தகும்.

இதில் முதற்கண் ஆராயற்பாலது தன்னை முற்றிலும் மறைக்க முயன்ற சூர்ப்பநகை அம்முயற்சியின் வாயிலாகவே தன்னை வெளிப்படுத்திக் கொண்டதை ஆசிரியர் காட்டுந் திறனேயாகும். அவள் தன் உருவம், குணம், பெயர், வரலாறு முதலியவற்றையெல்லாம் மறைத்து இராமபிரானை ஏமாற்றப் பார்க்கின்றாள். ஐயுறு மனத்தவனாகிய அப்பிரான் கேட்ட வினுக்களுக்கு விடையளிக்கும் வாயிலாக, படிப்படியே தன்னைப் பெரும்பாலும் வெளிப்படுத்தினாள். பின்பு சீதாபிராட்டி வந்ததும், இவள் தன்னிச்சைவழி ஆராய்ந்து, 'என்னைப்போல் இடையே வந்தாள்; இகழ்விப்பேன் இவளை' என்று எண்ணிச் சில கூறலுற்றுத் தன்னை முழுதும் படம் பிடித்தாற் போன்று காட்டிவிட்டாள். இங்ஙனம் தன்னை ஒளிக்கமுடியாமல் வெளிப்படுத்திக்கொண்ட படிகளைச் சீரியதொரு முறையில் நகைச்சுவையும் நாடகப் பண்பும் விளங்க ஆசிரியர் காட்டியுள்ளமை அறிஞர் இன்புறற்பாலது.

இப்பாட ஆரம்பத்திலுள்ள சில செய்யுள்கள் இவள் நடையின் பண்பைப் பற்றிக் கூறுவன. தன்னுடைய முரண்பட்ட பண்புக்கேற்ற வண்ணம் ஒரோவோரிடத் தமைந்த அழகுகளெல்லாம் ஒருவழித் தொக்காற் போன்று, 'மானின் விழி பெற்று மயில் வந்ததென வந்த' சூர்ப்பநகைக்கென்று உரியதொரு தனிப்பட்ட ஓசைநயம் இச்செய்யுள்களிற் காணப்படுதலைத் தாடகை வருகை, பிராட்டி மணிமண்டப மடைந்தமை முதலிய பகுதிகளோடு ஒப்பிட்டுத் தெளியலாம்.

இப்பாடத்தின் பிற்பகுதியில் சீதாபிராட்டியின் அழகு சூர்ப்பநகை வாயிலாக மற்றொரு முறையில் விரித்துரைக்கப் படு

கின்றது. முன்பு வேறு சில இடங்களிலும் அஃது விரித்துரைக்கப்பட்டது. மிதிலைக் காட்சியிற் கூறப்பட்டது தனிப் பட்ட நிலையிற் காணப்பட்ட வரம்பில் பேரழகு; செஞ்சொற் கவியின்பம் போன்றது. இங்கே கூறப்படுவது பத்து ஆண்டு களுக்கு மேலாக இராமபிரானுடன் கானுறை வாழ்க்கையினை அனுபவித்து நிறைவெய்திய தெய்வீகப் பேரழகு. அங்குக் கூறியது 'வெங்களி விழிக்கொரு விழவாகிய' பேரழகு; இங்குக் கூறப்படுவது 'எண் பிறங்கு அழகு'. அங்கே காட்சிக் கரை காண ஒண்ணு அழகு வெள்ளம்; இங்கு உருவநாறும் வான் சுடர்ச் சோதிவெள்ளம்; வந்திடை வயங்கும் சுழிபட்டோடும் சுடர்ச் சோதிவெள்ளம். இத்தகைய பரிபூரண நிலை எய்திய எண்பிறங்கு அழகின் சிறப்பை, இராமபிரான்மீது மையலுற்ற மனத்தினளாய்த் தன் மனத்தைப் பறிகொடுத்த சூர்ப்பநகை, அக்காதலையும் ஒரு கணம் முற்றும் மறந்து, 'கண் பிற பொருளிற் செல்லா; கருத்தெனின் அஃதே; கண்ட பெண்பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறருக்கு' என்று கூறி ஈடுபடுமாற்றால் ஆசிரியர் ஐயமற உய்த்துணர வைக்கின்றார்.

[தெ. ப:— சூர்ப்பநகைப் படலம் : 31, 32, 34–69.]

6 பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்ச நிமிர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள். 1

6. பஞ்சி—பஞ்சு; செம்பஞ்சு: ஒளிர் பஞ்சு என மாறுக. பல்லவம்—தளிர். இவ்விரண்டும் அனுங்க நிமிர் சீறடிகள்: அனுங்க—வருந்த. செம் செவிய—சிவந்த: செம்பஞ்சும் தளிரும் பாதத்தின் மென்மைக்கு ஒப்பாகா மையின் வருந்தும்படி தாமரை மலர்போ லுயர்ந்த சீறடியளாகி வந்தாள். அஞ் சொல் இள மஞ்ஞையென வந்தாள்: அன்னமென வந்தாள்: மின்னும் வஞ்சியென வந்தாள்: காண்போருக்கு நஞ்சமென வந்தாள். இப்படி வந்தவள் யாரெனின் வஞ்ச மகளாகிய சூர்ப்பநகை. உள்ளே நஞ்சமும் வஞ்சனையும் நிறைந்த அரக்கி செம்பஞ்சு, தளிர், தாமரை இவற்றின் மென்மை, நிறம் முதலியவற்றைக் கொண்ட பாதங்களை யுடையவளாய், மயில், அன்னம், வஞ்சிக்கொடி முதலியவற்றின் சாயல், நடை, உருவம் இவற்றை மேற் கொண்டு செயற்கை நலம் மிகும்படி வந்தாள். அவள் ஏறிட்டுக்கொண்ட மென்மைப் பண்பிற்கு இசைய மெல்லெழுத்துக்கள் இப்பாட்டில் மிக்கு வந்தன.

7 பொன்னெழுகு பூவினுறை பூவையெழில் பூவை
பின்னெழில்கொள் வாளிணை பிறழ்ந்தொளிர் முகத்தாள்
கன்னியெழில் கொண்டது கலைத்தட மணித்தேர்
மின்னிழிவ தன்மையிது விண்ணிழிவ தென்ன. 2

8 கானினுயர் கற்பக முயிர்த்தகதிர் வல்லி
மேனிநனி பெற்றுவிளை காமநெறி வாசத்
தேனின்மொழி யுற்றினிய செவ்விநனி பெற்றோர்
மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள். 3

9 நூபுரமு மேகலையு நூலுமற லோதிப்
பூமுரலும் வண்டுமிவை பூசலிடும் ஓசை
தாமுரைசெய் கின்றதொரு தையல்வரு மென்னக்
கோமகனும் அத்திசை குறித்தனன் விழித்தான். 4

---

7. பொன்—அழகு. பூவை எழில்—இலக்குமியின் அழகையும்; பூவைப் பின் எழில்—பூவைப் புள்ளிவிடத்துள்ள அழகையும்; கொண்ட இரண்டு வாளாகிய கண்கள் மாறுபட்டு விளங்கும் முகத்தினையுடையாள். கன்னி எழில்—இளம் பெண்ணின் வடிவம்: அவ்வடிவத்தைக் கொண்ட தேர். கலை—ஆடை: அன்றி மேகலை. மின் இழிவது அன்மை இது விண் இழிவது என்ன—மின்னோடிறங்குவது அல்லாமல் விண்ணோடு இறங்குவது என்று கண்டார் கருதும்படி வந்தாள் என்று அடுத்த கவியோடு முடியும். விண்—மேகம். மின் இடைக்கும் விண் கூந்தலுக்கும் உவமை.

8. கான்-வாசனை. கற்பக மரம் பெற்ற ஒளி பொருந்திய வடிவத்தைப் பெற்று மேன்மேலும் விளைகின்ற காம நெறியிலே செலுத்துகின்ற நறு மணம் கமழும் தேன்போன்ற இனிய சொற்களையுங்கொண்டு. கண்ணுக்கினிய அழகையும் மிகுதியாகப் பெற்று ஒப்பற்ற மானின் கண்களையும் பெற்று ஒரு மயில் வந்தது போல நடந்துவந்தாள். விளை காமம்—முற்றிய காமம்.

9. நூபுரம்—சிலம்பு. மேகலை—அரைப்பட்டிகை. நூல்—சேலை: ஆகுபெயர். அறல் ஓதி பூ முரலும் வண்டு—கரு மணல் போன்ற கூந்தலில் உள்ள பூக்களில் உள்ள ஒலிக்கின்ற வண்டுகள். இந் நான்கும் ஆரவாரஞ் செய்கின்ற ஓசை ஒன்றையொன்று தாக்கிப் போட்டியிடுவது போன்று ஒலித்தமையின் 'பூசலிடும் ஓசை' எனப்பட்டது. இவளது தோற்றம் வல்லி, தேன், மான், மயில் இவற்றின் சேர்க்கையழகுடன் விளங்கியது போல இவளிடத்து எழுந்த ஓசையும் நூபுரம், மேகலை, ஆடை, வண்டுகள் முதலியவற்றின் ஒலிகளின் சமுதாயமான பூசலாயிற்று. தாம் உரை செய்கின்றது—இவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து ஒன்றை அறிவிப்பது போன்று ஒலித்தன. எதனை எனின்! ஒரு தையல் வரும் என்பதை. இப்படி அறிவிக்கவே வந்த திசையைக் குறித்துப் பார்த்தான்.

10 பேருழைய நாகருல கிற்பிறிதின் வானிற்
பாருழையின் இல்லதொரு மெல்லுருவு பாரா
ஆருழை யடங்கும் அழகிற்கவதி யுண்டோ
நேரிழையர் யாவரிவர் நேரென நினைந்தான். 5

11 அவ்வயினவ் வாசைதன் அகத்துடைய அன்னாள்
செவ்விமுக முன்னியடி செங்கையின் இறைஞ்சா
வெவ்விய நெடுங்கணயில் விசிஅயல் பாரா
நவ்வியின் ஒதுங்கிஇறை நாணிஅயல் நின்றாள். 6

12 தீதில்வர வாகதிரு நின்வரவு சேயோய்
போதவுள தெம்முழைஓர் புண்ணியம தன்றோ
ஏதுபதி ஏதுபெயர் யாவருற வென்றான்
வேதமுதல் பேதையவள் தன்னிலை விரிப்பாள். 7

---

10. பேருழைய நாகர் உலகு—அகன்ற இடத்தையுடைய நாகர் உலகம். வான்—தேவருலகம். பாருழையின்—பூமியின் கண்ணும். இம்மூன்றுலகினும் இல்லாததொரு மென்மையான உருவத்தைப் பார்த்து. ஆர்? உழை அடங்கும் அழகிற்கு அவதி உண்டோ-இப்படி வந்த இவர் யாராயிருக்கலாம்? இவரிடம் அடங்கியுள்ள அழகிற்கு எல்லையுண்டோ? நேரிழையருள் யாவர் இவருக்கு ஒப்பாவார்? என்று எண்ணினான்.

11. செவ்வி முகம் முன்னி—அழகிய முகத்தைப் பார்த்து. வெவ்விய நெடுங்கண் அயில் விசி—கொடிய நீண்ட கண்களாகிய வேற்படையை இராமபிரான் மேலே படும்படி சுழற்றி எறிந்து. அயல் பாரா—அயலில் யாவரேனும் உளரோ என்பதைப் பார்த்து. நவ்வியின்—மானைப் போல. இறை நாணி—சிறிது வெட்கப்படுபவள்போலக் காட்டி. அயல் நின்றாள்—இராமபிரான் அருகிலே நின்றாள்.

12. திரு நின்வரவு—சிறப்பினையுடைய நினது வரவு. சேயோய்—நெடுந்தொலையிலிருப்பவளே! போத உளது—எம்மைத் தேடிவர நேரிட்டது. எம் உழை ஓர் புண்ணியமதன்றோ—எம்மிடமுள்ள ஒரு புண்ணியமதனால் அல்லவா! பேதையவள் தன்னிலை விரிப்பாள்—அறிவிலியாதலால் கேட்ட வினாக்களுக்கு நேர் விடை கூறாது கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்து வாளாய்த் தன் மனநிலையை யெல்லாம் விரித்துக் கூறுவாளாயினள்,

## வேறு

13 பூவிலோன் புதல்வன் மைந்தன்
புதல்விழுப் புரங்கள் செற்ற
சேவலோன் துணைவ னான
செங்கையோன் தங்கை திக்கின்
மாவெலாந் தொலைத்து வெள்ளி
மலையெடுத் துலகை மூன்றுங்
காவலான் பின்னை காம
வல்லியாங் கன்னி என்றாள். 8

14 அவ்வுரை கேட்ட வீரன்
ஐயுறு மனத்தான் செய்கை
செவ்விதன்று அறித லாகுஞ்
சிறிதினென் றுணரச் செங்கண்
வெவ்வுரு அமைந்தோன் தங்கை
என்பது மெய்ம்மை யாயின்
இவ்வுரு இயைந்த தன்மை
இயம்புதி இயல்பின் என்றான். 9

---

13. பூ இலோன்—தாமரை மலரை இடமாக உடையவன் பிரமன். அவன் புதல்வன்—புலத்தியன். அவன் மைந்தன்—விச்சிரவசு என்னும் முனிவன்; அவனுடைய மகள். தன்னை மணஞ் செய்வதில் குல முறையில் குறையின்மையைக் குறிப்பாக இங்ஙனம் உணர்த்தினாள். முப்புரங்கள் செற்ற சேவலோன்—சிவபெருமான். சே—இடபம். அவன் துணைவன்—குபேரன். மா—யானை. காவலோன்—இராவணன். பின்னை—பின் பிறந்த தங்கை. காமவல்லி—கற்பக மரத்திற் படருங் கொடி. ஒரு கொள் கொம்பை நாடிய கொடி போன்று வந்தவளாதலின் இப்பெயர் கூறினாள். கன்னி—மணஞ் செய்துகொள்வதில் தடையின்மையை உணர்த்தினாள்.

விச்சிரவசு பரத்துவாச முனிவன் மகளை மணஞ்செய்து குபேரனைப் பெற்றான். பின்பு அவன் சுமாலி என்னும் அரக்கன் மகள் கேசியை மணந்து இராவணன், கும்பகருணன், சூர்ப்பநகை, விபீடணன் என்பவர்களைப் பெற்றான். குபேரன் ஒன்றுவிட்ட தமையனாதலின் வேறுபாடு தோன்ற, 'தங்கை' என்றும், 'பின்னை' என்றும் விகற்பித்துக் கூறினாள்.

14. ஐயுறு மனத்தான்—கேட்ட வினாக்களுக்கு நேர் விடை கூறாது தன்னிலை விரித்தமையின் ஐயுறவு தானாக எழுந்தது. செய்கை செவ்விதன்று—நடந்துகொண்ட மாதிரியும் நன்றாயில்லை. (11.) உணர—அவள் தன்மையை நன்குணரும் பொருட்டு: மேலும் வினவலானான். வெவ்வுரு அமைந்தோன்—இராவணன். இயல்பின்—உள்ளபடி.

15 தூயவன் பணியா முன்னஞ்
சொல்லுவாள் சோர்வி லாளம்
மாயவல் லரக்க ரோடு
வாழ்வினை மதிக்க லாதேன்
ஆய்வுறு மனத்தே னாகி
அறந்தலை நிற்ப தானேன்
தீவினை தீய நோற்றுத்
தேவரிற் பெற்ற தென்றாள். 10

16 இமையவர் தலைவ னேயும்
எளிமையின் ஏவல் செய்யும்
அமைதியின் உலக மூன்றும்
ஆள்பவன் தங்கை யாயின்
சுமையுறு செல்வத் தோடும்
தோன்றலை துணையு மின்றித்
தமியைநீ வருதற் கொத்த
தன்மையென் தையல் என்றான். 11

---

15. பணியா முன்னம் சொல்லுவாள்—இங்ஙனம் அவன் கேட்பானென்று எதிர்பார்த்து அதற்கு ஆயத்தமாக வைத்திருந்த விடையை, அவன் வினவியவுடனேயே கூறுவாள். மாய வல்லரக்கர்—மாய அரக்கர்; வல்லரக்கர்: மாயங்களில் வல்லவர்: கொடுமையுள்ளவர். மதிக்கலாதேன்—அவருடன் வாழ்வதை ஒரு சிறந்த வாழ்வாக மதியாதவளாகிய நான். ஆய்வுறு மனத்தேனாகி—அரக்கருட் பிறந்து அவருடன் வாழ விரும்பாதயான் செயற்பாலது யாது என்று ஆராயும் மனத்தினை யுடையேனாகி. அறம் தலை நிற்ப தானேன்—அரக்கருடைய மறச்செயலை வெறுத்து அறத்தின் வழியே ஒழுகத் தீர்மானித்தேன். அரக்கர் சேர்க்கையாலாகிய தீவினை சாம்பராகும்படி நோன்பு பல மேற்கொண்டேன்; அங்ஙனம் யான் செய்த கடுந்தவத்தால் என் மீது இரங்கிய தேவர்களிடம் பெற்றது இந்த உருவம்.

16. முன்பு எழுந்த ஐயம் தெளியும் பொருட்டு இன்னுமொன்று கேட்கலுற்றான்-எளிமையின்-எளிய தன்மையில்; குற்றேவல் செய்வாரைப்போன்று. அமைதியின்—மாட்சியுடன். சுமையுறு செல்வம்—மிகுதியான செல்வப் பெருக்கம். துணையும் இன்றி—ஆடம்பரம் இல்லையென்றாலும் வழித்துணையாக ஒருவரும் இல்லாமல். தமியை—தன்னந்தனியளாய். தையல்—பெண்பாலாகிய நீ இப்படி வரலாமோ?

17 வீரனஃ துரைத்த லோடும்
மெய்யிலாள் விமல யானச்
சீரிய ரல்லார் மாட்டுச்
சேர்கிலேன் தேவர் பாலும்
ஆரிய முனிவர் பாலும்
அடைந்தனென் இறைவ ஈண்டோர்
காரிய முண்மை நின்னைக்
காணிய வந்தேன் என்றாள். 12

18 அன்னவள் உரைத்த லோடும்
ஐயனும் அறிதற் கொவ்வா
நன்னுதல் மகளிர் சிந்தை
நன்னெறிப் பால அல்ல
பின்னிது தெரியும் என்னாப்
பெய்வளைத் தோளி என்பால்
என்னை காரியத்தைச் சொல்லஃது
இயையுமேல் இழைப்பல் என்றான். 13

19 தாமுறு காமத் தன்மை
தாங்களே உரைப்ப தென்பது
ஆமென லாவ தன்றால்
அருங்குல மகளிர்க் கம்மா
ஏமுறும் உயிர்க்கு நோவேன்
என்செய்கேன் யாரு மில்லேன்
காமனென் றொருவன் செய்யும்
வன்மையைக் காத்தி என்றாள். 14

---

17. மெய் இலாள்—முன்சொன்ன பொய்யையே மீண்டும் கூறத் துணிந்தவள். ஈண்டோர் காரியம் உண்மை—முற்பகுதி முதல் வினாவிற்கு விடை; இஃது இரண்டாம் வினாவிற்கு விடை: தனியே வந்து பேசவேண்டிய கருமம்: ஆதலால் துணையுமின்றி வந்தேன்.

18. அறிதற்கு ஒவ்வா—இலேசில் அறிய முடியாதன. நன்னுதல்...... பால அல்ல—வெளித்தோற்றம் அழகிதேயாயினும் மனம் அப்படியன்று. என்னை காரியத்தை—என்னிடம் என்ன காரியத்தை யுடையாய்! இயையுமேல்—செய்யத்தக்கதாயின்.

19. தாம் உறு—தாம் உற்ற. ஆம் எனல் ஆவதன்று—தகுதியுடைய தெனல் பொருந்தாது. ஏம் உறும் உயிர்க்கு நோவேன்—இன்பத்தை அடைய விரும்பும் உயிரின் (நிலை தளராதிருக்கும் பொருட்டு) வருந்துகின்ற யான்; அதாவது உயிரோடு கூடி வாழ்தற்குரிய வகை தெரியாமல் தத்தளிக்கின்ற யான். வன்மையைக் காத்தி—கொடுமையை நீக்கி என்னைப் பாதுகாப்பாய்.

20 சேணுற நீண்டு மீண்டு
செவ்வரி சிதறி வெவ்வேறு
ஏணுற மிளிர்ந்து நானு
விதம்புரண் டிருண்ட வாட்கண்
பூணியல் கொங்கை அன்னாள்
அம்மொழி புகல லோடும்
நாணிலள் ஐயன் நொய்யள்
நல்லளும் அல்லள் என்றான். 15

21 பேசல னிருந்த வள்ளல்
உள்ளத்தின் பெற்றி ஓராள்
பூசல்வண் டரற்றுங் கூந்தற்
பொய்ம்மகள் புகன்ற என்கண்
ஆசைகண் டருளிற் றுண்டோ
அன்றென லுண்டோ என்னும்
ஊசலால் உலாவு கின்றாள்
மீட்டுமோர் உரையைச் சொல்வாள். 16

---

20. அவளைப்பற்றி ஆராய்ந்த இராமபிரான் அவள் கூற்றினால் ஒரு முடிவிற்கு வந்தான். அன்னாள்—சூர்ப்பநகை. சேண் உற நீண்டு—பார்வை நெடுந்தூரம் சேரும்படி நீண்டு. மீண்டு—மறுபடி அவ்வளவு தூரமும் கடந்து திரும்பிவந்து. செவ்வரி சிதறி—சிவந்த நிறமுள்ள இரேகைகள் பரவலுற்று: அவை கண்டோர்க்குப் புலனாம்படி 'புரண்டு' என்பதனோடு முடியும். வெவ்வேறு ஏண் உற மிளிர்ந்து—பலவிதமான எண்ணங்களைக் கண்டார் அடையும்படி விளங்கி; நானுவிதம் புரண்டு—பல்வேறு வகையாகப் புரளலுற்று; இருண்ட வாள் கண்—அப்படிப் புரண்டதனால் கருவிழி மிளிர நின்ற நிலையில் கருமையுற்ற வாள்போலும் கண்களையுடைய; பூணியல்......அன்னாள்—ஆபரணங்களை அணிந்த சூர்ப்பநகை: அம்மொழி புகல. ஐயன்—இராமபிரான். நாண் இலள்; நொய்யள்—இழிகுண முடையவள்; அதாவது அடக்கமில்லாதவள்: நல்ல நடத்தையும் இல்லாதவள் என்ற முடிவிற்கு வந்தான். தன்னை மறைக்க முயன்ற அரக்கி ஓரளவு தன்னை வெளிப்படுத்திக் கொண்டாள்.

21. உள்ளத்தின் பெற்றி—சிந்தனையின் தன்மை. ஓராள்—அறிய முடியாதவளாகி: அவன் மனத்திலுள்ளதை முகக்குறிப்பினின்றும் அறிய மாட்டாதவளாகி. பூசல் வண்டு அரற்றும் கூந்தல்—இருவருக்குமிடையே நிலவிய மௌனத்தினிடையே வண்டுகளின் ஆரவாரம் மிகுந்து காட்டியது. பொய்ம்மகள்—சூர்ப்பநகை: தனக்குள்ளே சிந்திப்பாளாயினாள். ஊசலால்—மன அலைவினால்: அன்றி, கலக்கத்தால். உலாவுகின்றாள்—மனத்தின் ஊசலால் தரித்து நிற்கமாட்டாது உலாவலானாள். மீட்டும் ஓர் உரையைச் சொல்வாள்—அவன் மனநிலையை அறியும் பொருட்டு.

22 எழுதரு மேனி யாய்ஈண்டு
எய்திய தழிந்தி லாதேன்
முழுதுணர் முனிவர் ஏவல்
செய்தொழின் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மை யோடும்
இளமையும் பயனின் றேகப்
பொழுதொடு நாளும் வாளா
கழிந்தன போலும் என்றாள். 17

23 நிந்தனை அரக்கி நீதி
நிலையிலாள் வினைமற் றெண்ணி
வந்தன ளாகு மென்றே
வள்ளலும் மனத்துட் கொண்டான்
சுந்தரி மரபிற் கொத்த
தொன்மையின் துணிவிற் றன்றால்
அந்தணர் பாவை நீயான்
அரசரில் வந்தேன் என்றான். 18

24 ஆரண மறையோன் எந்தை
அருந்ததிக் கற்பின் எம்மோய்
தாரணி புரந்த சால
கடங்கர்தம் மரபின் தையல்

---

22. பொழுதொடு நாளும்—இரவும் பகலும்; ஒவ்வொரு சிறு பொழுதும் வீணாகக் கழிந்து கழிந்து நாள் முழுவதும் கழிந்தது. இன்று—இன்றி. போலும்—ஒப்பில் போலி. பழுதறு பெண்மை—பழுதற்ற பெண்மை.

23. வினைமற்றெண்ணி வந்தனளாகும்—வேறு ஏதோ தீவினை செய்ய எண்ணி வந்தவளே இவள்: முன்பு இவள் குணம் தீயது என்பதை நிச்சயித்தான்: இப்பொழுது இவள் வந்த நோக்கமும் தீயது என்ற முடிவிற்கு வந்தான். மரபிற்கு ஒத்த தொன்மையின் துணிபிற்று அன்று—வமிச முறைமைக்கேற்ற பழைய ஒழுகலாற்றின் உறுதியை உடையதன்று. ஏனெனில் அந்தணர் பாவை நீ; யான் அரசரில் வந்தேன் என்றான். தொன்மை—பழைய ஒழுக்கத்திற்கு ஆகுபெயர்.

24. எந்தை ஆரண மறையோன்—என் தந்தை வேதம் ஓதுதற்கு உரிமை பூண்ட அந்தணன். எம்மோய்—என்தாய். சாலகடங்கர் என்னும் அரச வமிசத்தினர் பெண் போர் அணி—போர் செய்தலையே ஆபரணமாகக் கொண்ட. பொருந்தலை இகழ்தற்கு—என்னை மணஞ் செய்தலை இகழ்வதற்கு

போரணி பொலங்கொள் வேலோய்
பொருந்தலை இகழ்தற் கொத்த
காரண மிதுவே யாயின்
என்னுயிர் காண்பென் என்றாள். 19

25 அருத்தியள் அனைய கூற
அகத்துறு நகையின் வெள்ளைக்
குருத்தெழு கின்ற நீலக்
கொண்டலுண் டாட்டங் கொண்டான்
வருத்தநீங் கரக்கர் தம்மின்
மானுடர் மணத்தல் நங்கை
பொருத்தமன் றென்று சாலப்
புலமையோர் புகல்வர் என்றான். 20

26 பரர்வருஞ் சிரத்தை யாரும்
பத்தியின் பயத்தை ஓராது
இராவணன் தங்கை என்றது
ஏழைமைப் பால தென்னு
அரானை அமல னென்னும்
அறிவித்தேன் முன்னம் தேவர்ப்
பராவினன் நீங்கி னேனப்
பழிபடு பிறவி என்றாள். 21

---

என் உயிர் காண்பென்—என் உயிரினை உடலினின்றும் பிரிப்பேன்: இப்படியான சிறிய காரணங்கூறி என்னைப் புறக்கணிப்பாயானால் நான் உன் முன்னாலேயே என்னுயிரை விடுவேன்.

25. அருத்தியள்—ஆசை வழிப்பட்டவள். நகையின் வெள்ளைக் குருத்து—சிரிப்பின் வெண்மை நிறம் பொருந்திய இளவொளி. உண்டாட்டம்—விளையாட்டு விருப்பம். வருத்தம்—துன்பம்.

26. பராவரும்—புகழ்தற்கரிய. சிரத்தை ஆரும்—ஊக்கம் மிகுந்த. பத்தியின் பயம்—பக்தியின் பயன்; அதாவது எனது உண்மையான பேரன்பின் சீர்மையை ஒன்றாகக் கருதாமல். ஏழைமைப் பாலது—அறிவினத்தின் பாற்பட்டது.

27 ஒருவனே உலக மூன்றிற்கு
ஓங்கொரு தலைவன் ஊங்கில்
ஒருவனே குபேரன் நின்னோடு
உடன்பிறந் தவர்கள் அன்னார்
தருவரேற் கோடும் அன்றேல்
தமியை வேறிடத்துச் சார
வெருவுவென் நங்கை என்றான்
வேதத்தின் அறிவை வென்றான். 22

28 காந்தர்ப்ப மென்ப துண்டாற்
காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும்
மறைகளே வகுத்த கூட்டம்
ஏந்தற்பொற் றோளி னுயிலைது
இயைந்தபின் எனக்கும் மூத்த
வேந்தற்கும் விருப்பிற் றாகும்
வேறுமோர் உரையுண் டென்றாள். 23

29 முனிவரோ டுடையர் முன்னே
முதிர்பகை முறைமை நோக்கார்
தனியைநீ யாத லான்மற்
றவரோடுந் தழுவற் கொத்த
வினயமீ தல்ல தில்லை
வின்னும்நின் னாட்சி யாக்கி
இனியராய் அன்னர் வந்துன்
ஏவலில் நிற்பர் என்றாள். 24

---

27. மூன்றுலகிற்கும் உயர்ந்த ஓர் அரசன். ஊங்கில்—உவ்விடத்தி லுள்ள. கோடும்—ஏற்றுக்கொள்ளுதும். சார—செல்வாயாக. வெருவுவென்—இருவருக்கும் தான் பயப்படுவதாக விளையாட்டாகக் கூறி மறுத்தான்: அதை அவள் உண்மையென்று நம்பிச் சில கூறலானாள்.

28. காந்தர்ப்பம்—கந்தருவம். கூட்டம்—மணம். ஏந்தல்—மலை.

29. முறைமை—நீதி முறைமை. தழுவற்கு—நட்பினால் சேர்தற்கு. வினயம்—தந்திரம்.

30 நிருதர்தம் அருளும் பெற்றேன்
நின்னலம் பெற்றேன் நின்னோடு
ஒருவருஞ் செல்வத் தியாண்டும்
உறையவும் பெற்றேன் ஒன்றோ
திருநகர் தீர்ந்த பின்னர்ச்
செய்தவம் பயந்த தென்று
வரிசிலை வடித்த தோளான்
வாளெயி றிலங்க நக்கான். 25

31 விண்ணிடை இம்பர் நாகர்
விரிஞ்சனே முதலோர்க் கெல்லாம்
கண்ணிடை ஒளியின் பாங்கர்க்
கடிகமழ் சாலை நின்றும்
பெண்ணிடை அரசி தேவர்
பெற்றநல் வரத்தாற் பின்னர்
மண்ணிடை மணியின் வந்த
வஞ்சியே போல்வாள் வந்தாள். 26

32 ஊன்சுட உணங்கு பேழ்வாய்
உணர்விலி உருவ நாறும்
வான்சுடர்ச் சோதி வெள்ளம்
வந்திடை வயங்கல் நோக்கி

---

30. நிருதர்—அரக்கர். ஒருவு அரும் செல்வம்—நீங்குதற்கு அருமையான செல்வம். யாண்டும்—எப்பொழுதும். தீர்ந்த பின்—நீங்கிய பின்னர். வரி சிலை—கட்டமைந்த வில். வாள்—ஒளி.

31. இம்பர் நாகர் விண்ணிடை விரிஞ்சனே முதலோர். இம்பர்—இவ்வுலகத்தவர். நாகர்—கீழுலகத்தவர்; சர்ப்ப சாதியார். விரிஞ்சன்—பிரமன்; சிருட்டிப்பவன். (இவர்களுக்கெல்லாம்) கண்ணிடை ஒளி—கண் கூசும்படியான ஒளி பொருந்திய திருமேனியையுடைய இராமபிரான். ஒளியின் பாங்கர்—அவனிருந்த பக்கமாக. கடி—நறுமணம். பெண்ணிடை அரசி—பெண்கள் இனத்தின் தலைவிபோன்ற சீதாபிராட்டி. மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள்—பூமியின்கண்ணே இரத்தினம் போன்று அவதரித்த வஞ்சிக் கொடி போன்றவள்.

32. ஊன் சுட உணங்கு பேழ்வாய் உணர்விலி—மாமிசத்தைப் பதஞ் செய்ய அதன் மணத்தினாலே அதனை உண்ணுதற்கு வாயூறித் துடிக்கின்ற திறந்த பெரிய வாயையுடைய அறிவிலியாகிய சூர்ப்பநகை; இராமபிரானைக்

மீன்சுடர் விண்ணும் மண்ணும்
விரிந்த போர்அரக்க ரென்னும்
கான்சுட முளைத்த கற்பின்
கனலியைக் கண்ணிற் கண்டாள். 27

33 மருவொன்று கூந்த லாளை
வனத்திவன் கொண்டு வாரான்
உருவிங்கி துடைய ராக
மற்றையோர் யாரு மில்லை
அரவிந்த மலருள் நீங்கி
அடியிணை படியிற் றோயத்
திருவிங்கு வருவாள் கொல்லோ
என்றகந் திகைத்து நின்றாள். 28

34 பண்புற நெடிது நோக்கிப்
படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங் கழகிற் கெல்லை
யில்லையா மென்ன நின்றாள்

---

கண்டதும் அவனை அடைய வேண்டு மென்று ஆசைப்பட்டமையால் அங்ஙனம் கூறப்பட்டது. உருவம் நாறும் வான் சுடர்ச் சோதி வெள்ளம்—சீதா பிராட்டியின் மேனியொளியின் பெருக்கு: உருவம் நாறும்—வடிவத்தினின் றும் முளைத்தெழுந்த. இடை வயங்கல் நோக்கி—இடையிலே விளங்குதலை நோக்கி: கற்பின் கனலியைக் கண்டாள் என முடிக்க. இரண்டுலகில் எங்கும் பரவியுள்ள அரக்கராகிய காட்டைச் சுடுதற்கு முளைத்த கற்பாகிய நெருப்பை யுடையவளைக் கண் கூசும்படி கண்டாள்.

33. மருவு—வாசனை. கூந்தலாளை—கூந்தலாகிய இவளை. கொண்டு வாரான்; (ஆதலால் இவள் அவன் மனைவி யல்லள்.) இங்கு இது உரு உடைய ராக. அரவிந்தம்—தாமரை. படி—பூமி. தோய—படிய. அகம் திகைத்து நின்றாள்—உடனே ஒரு முடிவிற்கு வரமுடியாமலும் சோதி வெள்ளம் இடை வயங்கலாலும் சிந்தனை மேலே செல்லமாட்டாது தம்பித்தது.

34. பிராட்டியைக் கண்டு அவள் யாராயிருக்கலாம் என்று ஆராயத் தொடங்கியவள், தொடங்கிய விஷயத்தை விட்டு அவளது தெய்விகமான அழகில் தன்னையும் மறந்து ஈடுபடுகின்றாள். பண்புற நெடிது நோக்கி—பிராட்டியின் அழகின் பண்புகளை எல்லாம் நன்கு தன் மனத்திலே உறும்படி நீண்ட நேரம் உற்று நோக்கினாள்; நோக்கித் தான் கொண்ட முடிபைக் கூறுவாளாயினாள். படைக்குநர் சிறுமையல்லால்—பிரமதேவனது மனச்

கண்பிற பொருளிற் செல்லா
கருத்தெனின் அஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்றால்
என்படும் பிறருக் கென்றாள். 29

35 பொருதிறத் தானை நோக்கிப்
பூவையை நோக்கி நின்றாள்
கருதமற் றினிவே றில்லை
கமலத்துக் கடவுள் தானே
ஒருதிறத் துணர நோக்கி
உருவினுக் குலக மூன்றின்
இருதிறத் தார்க்குஞ் செய்த
வரம்பிவர் இருவர் என்றாள். 30

---

சிறுமையே யன்றி. பேரழகினையுடைய ஒரு பெண்ணைப் படைக்க முற்பட்ட பிரமன் அரக்கர் முதலியவரை ஒத்த பேருருவினை யுடையளாகப் படைக்காமல் ஒரு சிறிய உருவினளாய்ப் படைத்த மனப்பான்மையை அரக்கியாகிய சூர்ப்ப நகை சிறுமை என்கின்றாள். இந்த ஒரு குறையைத் தவிர வேறு குறையில்லை: படைக்கப்பட்ட பொருளின் உருவின் சிறுமையே யன்றி. அவ்வுருவதில் அடங்கிய அழகிற்கு அளவில்லை என்று கருதுகின்றாள். ஏனெனில் எண்பிறங்கு அழகிற்கு எல்லை இல்லையாம்—ஒரு முறை கண்டால் எப்பொழுதும் மன வட்டத்திலே இடையறாது விளங்குகின்ற இப்பேரழகிற்கு ஒரு முடிவு காண ஒண்ணாது போலும்; என்ன நின்றாள்—என்று தனக்குள்ளே சொல்லி மேலும் சிந்தனை செல்லாமையாற் செயலற்று நின்றாள். அப்படிச் சிறிது செயலற்று நின்று பெயர்த்துங் கூறுவாள்:— கண் பிற பொருளில் செல்லா—இவள் மீது வைத்த கண்ணின் பார்வை வேறொருபொருளிற் செல்லமாட்டா: கருத்து எனின் அஃதே—மனமோ என்றால் அதன் நிலைமையும் கண்ணினைப் போன்றதே; வேறொன்றினைப் பற்றிச் சிந்திக்க விடுகிறதில்லை. இவ்வளவும் யாருக்கு எனின்:— பெண் பிறந்தேனுக்கு—ஒரு ஆடவன் மீதெழுந்த ஆசை கனற்ற நின்ற நிலையில் ஒரு முறை இவளைக் கண்ட பெண்ணாய்ப் பிறந்த எனக்கு. என்றால்—என் மனநிலை இப்படியாயின். என் படும் பிறருக்கு—ஆடவராய்ப் பிறந்தார்க்கு மனம் என்ன பாடுபடும். (பால : 101.)

35. தன்னிலை மறந்து பிராட்டியின் பேரழகில் ஈடுபட்டு, இராமபிரானைக் கண்டவள் இருவருமான சேர்த்தியழகில் ஈடுபடுகின்றாள். பொரு திறத் தானை நோக்கி—இராம பிரானைப் பார்த்தாள். பூவையை நோக்கி—கிளி போன்ற சீதாபிராட்டியைப் பார்த்தாள். நின்றாள்—இருவரது வரம்பில் பேரழகில் ஈடுபட்டு ஒரு கணம் பிரமித்து நின்றாள். பின்பு தான் கொண்ட முடிபைக் கூறுவாளாயினாள். ஒரு திறத்து உணர நோக்கி—ஒருபடிப்பட ஆராய்ந்து பார்த்து. வரம்பு—அழகின் பேரெல்லை.

36 பொன்னைப்போற் பொருவின் மேனிப்
பூவைப்பூ வண்ணந் தானிம்
மின்னைப்போ லிடையா ளோடும்
மேவுமெய் யுடைய னல்லன்
தன்னைப்போல் தகையோ ரில்லாத்
தளிரைப்போ லடியின் ளுளும்
என்னைப்போல் இடையே வந்தாள்
இகழ்விப்பேன் இவனை என்று. 31

37 வருமிவள் மாயம் வல்லள்
வஞ்சனை அரக்கி நெஞ்சந்
தெரிவிலள் தேறுந் தன்மை
சீரியோய் செயலிற் றன்றால்

---

36. தான் முன்பு ஆரம்பித்த ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்துகின்றாள். ஆனால் தன் விருப்பத்திற் கேற்ற முடிவிற்கே வருகின்றாள். பொருவு—ஒப்பு. பூவைப்பூ—காயாம்பூ. மெய்—உடல்: இன்றேல் மெய்யன்பு; அதாவது தன் மனைவிமாட்டுக் காட்டிற்கு உடன் கொண்டு செல்லும் அத்தகைய மெய்யன்பையுடையன் அல்லன். தன்னைப்போல் தகையோர் இல்லா—தன்னை ஒத்த அழகினையுடையவ ரில்லாத. என்னைப்போல் இடையே வந்தாள்—என்னைப்போன்ற ஒப்பில் பேரழகினளாகிய இவளும் என்னைப் போலவே இடையிட்டு வந்தனளாதல்வேண்டும். இம்முடிவிற்கு வந்ததும் ஒரு பெரிய உண்மையைக் கண்டு பிடித்துவிட்டோம் என்ற களிப்பு மிக்கது: மிகவும், இகழ்விப்பேன் இவனை என்று—இவனை இகழும்படி செய்வேன் என்று தீர்மானித்து; 'என்றாள்' என்று அடுத்த செய்யுளில் வருஞ் சொல்லோடு முடியும்.

37. இச்செய்யுளில் சூர்ப்பநகை கருதிய பொருள் ஒன்றாகவும், அவள் அறியாமலே உள் மனத்தின் சேட்டையால் தானாகப் புகுந்து இராமபிரான் உணர நின்ற பொருள் ஒன்றாகவும் அமைந்துளது. தன்னை முற்றாக மறைக்க முயன்ற சூர்ப்பநகை முழுவதும் தன்னை இதன் வாயிலாக வெளிப்படுத்திக் கொள்ளுகின்றாள்.

நெஞ்சம் தெரிவு இலள்—இவள் நெஞ்சின் ஆழங்காணமுடியாது. தேறுந் தன்மை சீரியோய் செயலிற்று அன்று—இப்படிப்பட்டவள் என்று இவளைத் தெளிதல் உன்போன்ற சாதுக்களுக்கு இயலுமான தொன்றன்று. விலக்குதி

உருவிது மெய்ய நன்றுல்
ஊன்நுகர் வாழ்க்கை யாளை
வெருவினென் எய்தி டாமல்
விலக்குதி வீர என்றுள். 32

38 ஒள்ளிதுன் னுணர்வு மின்னே
உன்னையார் ஒளிக்கும் ஈட்டார்
தெள்ளிய நலத்தி னுலுன்
சிந்தனை தெரிந்த தம்மா
கள்ளவல் லரக்கி போலாம்
இவளை நீ காண்டி என்று
வெள்ளிய முறுவல் முத்தம்
வெளிப்பட வீரன் நக்கான். 33

---

வீர—நீ பெரிய வீரனல்லவோ! அத்தகைய வீரனுகிய நீ சிறிதுங் கண்ணோட்டமின்றி இவளைத் துரத்துவாய்.

38. இராமபிரான் கூறிய விடையும் இருபொருளுடையதாயிற்று; அவன் எண்ணிய பொருளும் அதனை உணரமாட்டாத அரக்கி கொண்ட பொருளுமாம்.

சூர்ப்பநகை கொண்ட பொருள்:— ஒள்ளிது உன் உணர்வு மின்னே—உன்னுடைய அறிவு உனது வடிவத்தைப் போலவே ஒளிவிட்டு விளங்குகின்றது. உனது அறிவிற்கு இலக்காகாமல் தன்னை மறைக்கும் வல்லமையுடையார் யாவருளர்? நீ இவளைத் தெள்ளத் தெளிந்து கூறிய சிறப்பினுலே உன் சிந்தனைத் திறம் விளங்கிற்று. அம்மா—இப்படிப்பட்ட திறம் ஒருவரிடம் காணப்போமோ? கள்ள வல்லரக்கி போலாம் இவளை நீ காண்டி—கள்ள வல்லரக்கி போன்ற இவள் உண்மை நிலையை நீ ஒருத்தியே இப்பொழுது கண்டுபிடித்தாய்.

இராமபிரான் எண்ணிய பொருள்:—ஒள்ளிது உன் உணர்வு—வஞ்சப் புகழ்ச்சி. மின்னே—நீ பேதையாதலால் இவளை வெளிப்படுத்துவதாக எண்ணி உன்னையே வெளிப்படுத்தினுய். உன்னை யார் ஒளிக்கும் ஈட்டார்—உன்னை நீ பல வழிகளிலும் மறைக்க முயன்றுய்; உன்னை மறைக்கும் வல்லமை உனக்குத்தான் உண்டோ? தெள்ளிய நலத்தினுல் உன் சிந்தனை தெரிந்தது—உனது பேச்சில் அமைந்த தெளிவாகிய பண்பினுல் உனது நெஞ்சின் அடியிலே கிடந்த எண்ணம் இப்பொழுது முழுவதும் விளங்கிற்று. அம்மா—இப்படியும் ஒருத்தி உண்டோ! கள்ள வல் அரக்கி போலாம் இவளை நீ காண்டி—உன்னுடைய கண்ணுக்குக் கள்ளமும் கொடுமையுமுடைய அரக்கி போலத் தோன்றும் இவளை நீ மற்றொரு முறை பார்; அரக்கி நீயோ அவளோ என்பது விளங்கும். முறுவல் முத்தம்—பற்கள். முன்பு வெள்ளைக் குருத்தெழுகின்ற நிலக் கொண்டல் இப்பொழுது வாய்விட்டுச் சிரித்தான்.

39 ஆயிடை அமுதின் வந்த
அருந்ததிக் கற்பின் அஞ்சொல்
வேயிடைத் தோளி னாளும்
வீரனைச் சேரும் வேலை
நீயிடை வந்த தென்னை
நிருதர்தம் பாவை என்னாக்
காயெரி அனைய கள்ள
உள்ளத்தாள் கதித்த லோடும். 34

40 அஞ்சினள் அஞ்சி அன்னம்
மின்னிடை அலச ஓடிப்
பஞ்சின்மெல் லடிகள் நோவப்
பதைத்தனள் பருவக் கால
மஞ்சிடை வயங்கித் தோன்றும்
பவளத்தின் வல்லி என்னக்
குஞ்சர மனைய வீரன்
குவவுத்தோள் தழுவிக் கொண்டாள். 5

41 வளையெயிற் றவர்க ளோடும்
வரும்வினை யாட்டேன் றாலும்
விளைவன தீமை யேயாம்
என்பதை உணர்ந்து வீரன்
உளைவன இயற்றல் ஒல்லை
உன்னிலை உணரு மாயின்
இளையவன் முனியும் நங்கை
ஏகுதி விரைவின் என்றான். 36

39. ஆயிடை—அச்சமயத்தில். அமுதின் வந்த—அமுதம் போன்று உலகில் அவதரித்த; அருந்ததிக் கற்பினையும் அழகிய சொல்லினையும் மூங்கில் தோற்றுப் பின்னிடும்படியான தோளினையுமுடைய சீதாபிராட்டி இராமபிரானைக் கிட்டுமளவில். இடை—குறுக்கே. நிருதர் தம் பாவை—கள்ள வல்லரக்கியே! காய் எரி அனைய கள்ள உள்ளத்தாள்—எரிகின்ற நெருப்பை ஒத்த உள்ளத்தாள்; கள்ளம் நிறைந்த மனத்தினள். கதித்தலோடும்—கோபித்து அதட்டிய அளவில்; 'அஞ்சினள்' என்று அடுத்த கவியில் வருஞ் சொல்லோடு முடியும்.

40. அன்னம்—விரைந்து ஓடும் வலிமை இல்லாதவள். அலச—தளரும்படி. பதைத்தனள்—அச்சத்தோடு நோவும் சேரப் பதைத்தனள். வயங்கி—விளங்கி. பவளத்தின் வல்லி—பவளக் கொடி. மஞ்சு இராமபிரானுக்கும் பவளத்தின் வல்லி சீதாபிராட்டிக்கும் உவமை. கால மஞ்சு—காள மேகம்.

41. வளை எயிற்றவர்—அரக்கர். வரும் விளையாட்டு—தேடிச் செல்லாது தானே எதிர்ப்பட்ட விளையாட்டு. உளைவன இயற்றல்—துன்பந்தருவனவற்றைச் செய்பற்க. ஒல்லை—விரைவில்.

42 பொற்புடை அரக்கி பூவிற்
புனலினிற் பொருப்பில் வாழும்
அற்புடை உள்ளத் தாரும்
அநங்கனும் அமரர் மற்றும்
எற்பெறத் தவஞ்செய் கின்றார்
என்னை நீ இகழ்வ தென்னே
நற்பொறை நெஞ்சில் நில்லாக்
கள்வியை நச்சி என்றாள். 37

43 தன்னொடுந் தொடர்வி லாதேம்
என்னவும் தவிராள் தானிக்
கன்னெடு மனத்தி சொல்லுங்
கள்ளவா சகங்கள் என்று
மின்னொடு தொடர்ந்து செல்லும்
மேகம்போல் மிதிலை வேந்தன்
பொன்னொடும் புனிதன் போயப்
பூம்பொழிற் சாலை புக்கான். 38

---

42. பொற்பு—அழகு. பூ—தாமரை. புனல்—பாற்கடல். பொருப்பு—கைலாயமலை. அன்புடைய உள்ளத்தவர், மற்று அமரரும் என் பெற. இகழ்வது—புறக்கணிப்பது. நச்சி—விரும்பி.

43. தொடர்விலாதேம் என்னவும் தவிராள்—அவளோடு எவ்வித உறவுங் கொள்ளோம் என்று கூறவும் நீங்குகின்றிலள். மனத்தி கள்ள வாசகங்கள் சொல்லும் : சொல்லும்—சொல்லுவாள். இன்றேல் 'கள்ள வாசகங்கள்' என்று கூறி வியப்பும் அருவருப்பும் மேலிட்டநிலையில் வாக்கியத்தை முடியாமலே அவ்விடம்விட்டு அகன்றனன் என்றுங் கொள்ளலாம்; இங்ஙனங் கொள்ளுமிடத்து, 'சொல்லும்' என்டதைப் பெயரெச்சமாகக் கொள்க. மின்னொடும் தொடர்ந்து செல்லும் மேகம் போல்— 'மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்ன!'

## 27. சூர்ப்பநகை புலப்பல்.

சீதா பிராட்டியைத் தொடர்ந்தபொழுது இலக்குவனுல் மூக்குங் காதும் அறுப்புண்ட சூர்ப்பநகை துன்பம் பொறுக்க மாட்டாது, முன்னைய அரக்கப் பண்பு தலையெடுப்ப, கூற்றும் உட்கும் தன் குலத்தினேர் பெயரெலாங் கூறிப் புலம்பிய புலப்பல் இங்கே காணப்படும்.

இலக்குவனுல் உறுப்பறையுண்டபின் இராமபிரான்மீ தெழுந்த காதல் சிறிது அமுங்க, அவன்மீது கோபம் தலையெடுத்தது. இந்நிலையில் இராவணன் மாட்டுக் கொண்டிருந்த பணிவு மறைய, பழைய சகோதர உணர்ச்சியும் தன்குலப் பெருமிதமும் தாண்டவமாடத் தொடங்கின. அந்நிலையில் தன்குலத்தினேர் பெயரெலாங் கூறி, மானுடவர் மாட்டுச் சீற்றம் வெளிப்படப் பற்பல பன்னிப் புலம்பலுற்றுள். மந்திரத்தின் உதவியினுற் பெற்ற மெல்லுருவம் மறைதலால் பழைய அரக்கியாகவே நின்று அவள் ஆற்றிய அமலை திக்கனைத்தினுஞ் சென்றது. இவ்வாறு கடுஞ்சீற்றம் தலையெடுத் தாற்றிய காலத்தும் இராமன்பாற் கொண்ட காதலுணர்ச்சி இடையிடையே சிறிதே தலைநிமிரப் பார்த்தது. இதனுல் மானிடரை இகழும் பொழுதும் 'உருப் படிவம் மன்மதனை ஒத்துளரே யாயினும்' என்று ஒரு கணம் அவர்கள் வடிவழகில் ஈடுபடுகின்றுள்.

இப்புலப்பலிற் காணப்படும் ஓசை அவளது அரக்கப் பண்பிற் கேற்றபடி அமைந்துளது. புரள்கின்றதொரு பெருமலை மருங்கிலுள்ள மரம் முதலியவற்றைப் பிளந்து முறிப்பது போன்ற ஒலி இப்பாடல்களிற் காணப்படும். அவளது தடித்த, அளவு கடந்த உணர்ச்சிவேகம் பலதிறப் பட்ட எதுகை, மோனை, பின்வருநிலைகளுடன் குமிழியிட்டுப் பொங்கி வருகின்றது.

[தெ. ப:—சூர்ப்பநகைப் படலம்: 101, 102, 104, 105, 109, 110, 113.]

44 நிலையெடுத்து நெடுநிலத்து நீயிருக்கத் தாபதர்கள்
சிலையெடுத்துத் திரியுமிது சிறிதன்றே தேவரெதிர்
தலையெடுத்து விழியாமை சமைப்பதே தழலெடுத்தான்
மலையெடுத்த தனிமலையே இவைகாண வாராயோ. 1

45 புலிதானே புறத்ததாக் குட்டிகோட் படாதென்று
ஒலியாழி உலகுரைக்கும் உரைபொய்யோ ஊழியினுஞ்
சலியாத மூவருக்கும் வானவர்க்குந் தானவர்க்கும்
வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ. 2

46 காற்றினையும் புனலினையும் கனலினையுங் கடுங்காலக்
கூற்றினையும் விண்ணினையுங் கோளினையும் பணிகோடற்கு
ஆற்றிலை நீ சண்டிருவர் மானுடவர்க் காற்றாது
மாற்றினையோ உன்வலத்தைச் சிவன்தடக்கை வாள்கொண்டாய். 3

47 உருப்படிவ மன்மதனை ஒத்துளரே யாயினுமுன்
செருப்படியிற் பொடியொவ்வா மானுடரைச் சீறுதியோ
நெருப்படியிற் பொடிசிதற நிறைந்தமதத் திசையானை
மருப்பொடியப் பொருப்பிடியத் தோள்நிமிர்த்த வலியோனே. 4

---

44. நிலை எடுத்து—வாழ்க்கை நிலைகொண்டு. திரியும் இது—தம் இச்சைப்படி சஞ்சரிப்பது. சிறிதன்றே—உனக்குக் குறைவல்லவா? தலையெடுத்து—தலைநிமிர்ந்து. சமைப்பதே—இவர்கள் செய்யத்தகுமோ?

45. கோள்படாது—பிடிக்கப்படாது. ஊழியினும் சலியாத—ஊழிக் காலத்திலும் நிலை குலையாத. வலி—துன்பம்.

46. கோள்—கிரகங்கள்.

47. உரு படிவம்—அழகிய வடிவம். உன் செருப்படியில் பொடி ஒவ்வா மானிடர்—1. உனது செருப்பில் ஒட்டிய தூசியும் பொருத மனிதர்: 2. உன்னோடு போர் மூண்டால் ஒரு அணுவும் நிகராகாதவர். நெருப்பு அடியில் பொடிசிதற—காலினால் எழுப்பப்பட்ட தூசி நெருப்பாகச் சிதறும்படி (நிறைந்த மதம்.) திசை யானைகள் நடந்தால் அவற்றின் வலிமையால் பாதம் வைத்ததும் எழும்படி தூசி நெருப்பாக விழும். திசையானை............நிமிர்த்த வலியோனே—இருபது தோள்களை நிமிர்த்தியவுடன் அவை திசையானைகளின் கொம்புகளை ஒடித்து வேகம் அடங்காமையின் மலைகளையும் இடித்தன; அப்படிப்பட்ட வலிமை யுடையோனே!

48 உரன்நெரிந்து விழவென்னை உதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நான்கிடந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ இவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த அண்ணாவோ அண்ணாவோ. 5

49 நசையாலே மூக்கிழந்து நாணமிலா நான்பட்ட
வசையாலே நினதுபுகழ் மாசுண்ட தாகாதோ
திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த
இசையாலே நிறைந்தபுயத் திராவணவோ இராவணவோ. 6

50 கல்லீரும் படைத்தடக்கை அடற்கரது டணர்முதலா
அல்லீரும் சுடர்மணிப்பூண் அரக்கர்குலத் தவதரித்தீர்
கொல்லீரும் படைக்கும்ப கருணனைப்போற் குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ யானழைத்தல் கேளீரோ. 7

---

48. உரன்—வலிமை. நெரிந்து விழ—அழிந்து விழ. நரன் இருந்து தோள் பார்க்க நான் கிடந்து புலம்புவதோ—அம்மனிதன் உட்கார்ந்து தன்தோள் வலிமையைப்பற்றி இறுமாப்புக்கொள்ள அரக்கர் குலத்தில் தோன்றிய நான் பூமியிலே கிடந்தபடி புலம்புவது அழகோ! அவன் கிடந்து புலம்ப நான் இருந்துபார்த்தாலன்றோ என் நெஞ்சு ஆறுதலடையும். இவை படவும் கடவேனோ—இப்படியான துன்பங்களை அனுபவிக்க யான் என்ன குற்றஞ் செய்தேன்? அண்ணாவோ அண்ணாவோ—அடுக்கு புலம்பல் பற்றியது.

49. நசை—ஆசை. வசை—பழி. மாசுண்டதாகாதோ—குற்றமடைந்த தாகாதோ. விசை கலங்க—வேகம் அடங்க. வேகம்—கோபாவேசம்.

50. கல் ஈரும் படை—மலையைப் பிளக்கும் வல்லமை வாய்ந்த படை. அடல்—வெற்றி. அல் ஈரும்—இருளை விலக்கும். கொல் ஈரும் படை—கொல்லனால் அராவப்பட்ட படை. கும்பகருணன்—குடம்போன்ற காதுகளை யுடையவன் என்பது பொருள்.

---

## 28. சூர்ப்பநகை மீண்டும் இராமபிரானைக் கண்டு பேசுதல்.

---

சூர்ப்பநகை இரண்டாம் முறை, இலக்குவன் அருகிருப்ப இராமபிரானைக் கண்டு பேசியதைப்பற்றிக் கூறுவது இப்பகுதி.

மூக்கும் காதும் அறுப்புண்டு வீரர்மீது கோபங்கொண்டு அரக்கரை விளித்து அரற்றிய சூர்ப்பநகை இராமபிரானைக் கண்டாள். கண்டதும் கோபம் உள்ளே மறைந்தது; முன்பு கொண்ட காதலே தலையெடுக்கலாயிற்று. அப்பிரான் கோபித்து, 'விடிப்போகாதே; இப்பெய்வனத்தை விட்டகல ஓடிப்போ' என்று கூறவும் ஆசையாளாய் நயத்தாலும் பயத்தாலும் தான் விரும்பிய காரியத்தை நிறைவேற்றப் பாடுபட்டாள்; தன்னால் அவர்கள் அடைய நின்ற பயனை எடுத்துக் கூறினாள்; தன் சிறப்பு, பெருமை முதலியவற்றை விளக்கினாள்; அவர்கள் செய்த தீமையை நன்மையாகத் தான் கொண்டதாகக் காட்டினாள்; அரக்கர் வெகுளியைச் சுட்டி வெருட்டினாள்; கடைசியில் தன்னோடு வாழும்படி இறைஞ்சினாள்.

இராமபிரான் மறுபடியும் வெளிப்படையாகத் தான் அரக்கர் குலத்தை வேரறுக்க வஞ்சினம் உரைத்துள்ளமையைக் கூறினான். அதற்கும் அவள் அஞ்சவில்லை. இந்நிலையில் இராவணன்மீது முன்பு கொண்டிருந்த பகைமை இப்பொழுது பழிவாங்கும் எண்ணமாக உருக்கொண்டது. "அப்படியானால் என்னுடைய உதவி உங்களுக்குப் பெரிதும் அவசியமன்றோ?" என்றெல்லாம் அலற்றுவாளாயினாள். "உனக்கு இயையாதெனின் இளங்கோவோடு என்னை இருத்தி" என்றாள். இப்படியே அவள் அலைப்ப, அதற்கு இலக்குவன் ஒரு முற்றுப் புள்ளி வைத்தான். நின்றால் உயிர் போய்விடும் என்றுணர்ந்ததும் அவள் காதல் வேகம் கோபாவேசமாக உருக்கொண்டது. "உங்கள் கூற்றுவனாகிய கரனை இதோ கொணர்கின்றேன்" என்று சினங்கொண்டு சென்றாள்.

இங்ஙனம் சூர்ப்பநகையின் குணத்திலுள்ள முரண்பாடு, உள்மனத்தின் இயலால் நெறிப்பட்ட காதல் வேகத்தின் வலிமை முதலியன இப்பகுதியில் ஆசிரியரால் காட்டப்பட்டுள்ளன. தன்னுணர்ச்சியில் தட்டாமல் அவள் பேச்சில் அமைந்த நகைச் சுவையும் குறிப்பிடற்பாலது.

[தே. பு:—சூர்ப்பநகைப்படலம்: 123—143.]

51 பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை ஒருங்கவிப்பான்
தேடிப்போந் தனமின்று தீமாற்றஞ் சிலவிளம்பி
விடிப்போ காதேஇம் மெய்வனத்தை விட்டகல
ஓடிப்போ என்றுரைத்த உரைகடந்தாற்கு
அவளுரைப்பாள். 1

52 நரைதிரையோன் றில்லாத நான்முகனே முதலமரர்
கரையிறந்தோர் இராவணற்குக் கரனிறுக்குங் குடியென்றால்
விரையுமிது நன்றன்று வேறாக யானுரைக்கும்
உரையுளது நுமக்குறுதி உணர்வுளதேல்
என்றுரைப்பாள். 2

53 ஆக்கரிய மூக்குங்கை அரியுண்டாள் என்றுரை
நாக்கரியுந் தயமுகனூர் நாகரிக ரல்லாமை
மூக்கரிந்து நுங்குலத்தை முதலரிந்தீர் இனியுமக்குப்
போக்கரிதிவ் வழுகையெலாம் புல்லிடையே உகுத்தீரே. 3

54 வான்காப்போர் மண்காப்போர் மாநாகர் வாழுலகந்
தான்காப்போர் இனித்தங்கள் தலைகாத்து நின்றுங்கள்

---

51. பேடிப்போர் வல்லரக்கர்—பேடித்தனமான மாயைப் போர் செய்கின்ற கொடிய அரக்கரது. ஒருங்கு அவிப்பான்—அடியோடு ஒழிக்கும் பொருட்டு. தீ மாற்றம்—கொடிய சொற்கள். வீடிப்போகாதே—வீணே இறந்துபோகாதே. மெய் வனம்—மெய்ம்மைக்குரிய தவவனம். அகல ஓடிப்போ—எட்டாத தூரத்திற்கு ஓடி உயிர் தப்புதி. உரைகடந்தான்—இராமபிரான்.

52. நரை—மயிர் வெளுத்தல். திரை—தோல் சுருங்குதல். இரண்டும் முதுமையின் குணங்கள். இவை இல்லாத. கரையிறந்தோர்—கடல் போன்று எல்லை இல்லாதவர். கரன் இறுக்கும் குடி—கப்பஞ் செலுத்துங் குடிமக்கள். விரையும் இது—அவசரப்பட்டு ஓடிப்போ என்று கூறும் இச் செயல். நன்று அன்று—உங்களுடைய நன்மைக்கு ஏற்றதன்று. யான் தனியாகக் கூறும் வார்த்தை உளது; உமக்கு நன்மை எது என்பதை அறிய வேண்டும் என்னும் உணர்ச்சி இருக்குமானால்.

53. ஆக்கு அரிய—மறுபடி உண்டாக்க முடியாத. உங்கை—உன் தங்கை. என்றுரை—என்று இச் செய்தியை சொன்னவரை. தயமுகனூர்—இராவணன். நாகரிகர் அல்லாமை—கண்ணோட்ட முடையரல்லாமையினால். முதலரிந்தீர்—வேரோடும் அறுத்து விட்டீர்கள். இனி உமக்கு போக்கு அரிது—இப்பிழை செய்த உமக்கு உயிர் தப்பும் வழியில்லை. புல்லிடையே உகுத்தீர்—வீணாக்கிவிட்டீர்.

54. 'விரையுமிது நன்றன்று' என்பதை விரித்தாள் கீழ். 'நுமக்குறுதி உணர்வுளதேல்' என்பதை விரிக்கின்றாள் இச்செய்யுளில். நாகர்—சர்ப்ப

ஊன்காக்க உரியார்யார் என்னை உயிர் நீர்காக்கின்
யான்காப்பென் அல்லாலவ் விராவணனார் உளரென்றாள். 4

55 காவற்றிண் கற்பமைந்தார் தம்பெருமை தாங்கழறார்
ஆவற்பேர் அன்பினால் அறைகின்றே னுமன்றோ
தேவர்க்கும் வலியான்தன் திருத்தங்கை யாளிவளீண்டு
ஏவர்க்கும் வலியாளென்று இளையானுக் கியம்பீரோ. 5

56 மாப்போரிற் புறங்காப்பேன் வான்சுமந்து செலவல்லேன்
தூப்போலக் கனிபலவுஞ் சுவையுடைய தரவல்லேன்
காப்போரைக் கைத்தென்னீர் கருதியது தருவேனிப்
பூப்போலும் மெல்லியலாற் பொருளென்னோ புகலீரால். 6

57 குலத்தாலு நலத்தாலும் குறித்தனவே கொணர்தக்க
வலத்தாலு மதியாலும் வடிவாலு மடத்தாலும்

---

சாதியார். இனி, தங்கள் தலைகாத்து நின்று உங்கள் ஊன் காக்க உரியார் யார்—என் மூக்கரியுண்டபின் தயமுகனார் கோபத்திற்கு ஆளாகாமல் தேவர் முதலியோர்கள் தங்கள் உயிர்தப்பி நிற்றலோ அரிது; அப்படி நின்றாலும் உங்கள் உடலிலுள்ள ஊன் அரக்கருக்கு இரையாதலைத் தடுக்க அவர்களால் இயலுமோ!

55. இதுமுதல் ஏழு செய்யுள் 'வேறாக யானுரைக்கும் உரையுளது' என்பதன் விரி.

காவல் திண் கற்பமைந்தார்—மனமாகிய காவலையுடைமையால் கலங்காத கற்பு அமையப்பெற்ற என் போன்ற பெண்கள். தம் பெருமை தாம் கழறார்—பிறர் தம் பெருமையைப் புகழ்வதன்றித் தாமே சொல்லிக் கொள்ளார். எனினும் ஆவலாக விளைந்த பெரிய அன்பினாலே உங்கள் உயிரைப் பாதுகாக்கும் வல்லமை என்னிடம் உள்ளது என்பதைக் கூறுகின்றேனல்லவா? ஏவர்க்கும்—யாவரினும்.

56. மாப்போரில்—பெரிய போர்க்களத்தில். புறங்காப்பேன்—பாதுகாப்பேன். தூ-மாமிசம். புலால் போன்ற கனிகளே சுவையிற் சிறந்தன என்று கருதிக் கூறுகின்றாள், 'ஊன்சுட உணங்கு பேழ்வாய் உணர்விலி' யாதலின். காப்போரைக் கைத்து என்—இப்படிப் பல வகையாலும் பாதுகாப்பவரை வெறுத்து நீர் பெறும் பேறு யாது! இப் பூப்போலும் மெல்லியல் என்று சீதா பிராட்டியைச் சுட்டிக் கூறுகின்றாள். பொருள் என்னோ—பயன் ஏதேனும் உளதோ? யான் கூறியவற்றுள் ஒன்றையேனும் இவளாற் செய்ய இயலுமோ? புகலீர்—சொல்லுமின். ஆல்—அசை.

57. நலம்—நற்குணத்தினால் வரும் மேன்மை. வலம்—வலிமை. வடிவு—அழகு. மடம்—இளமை. நேரிழையார்—பெண்கள். சொல உரியாரை—

நிலத்தாரும் விசும்பாரு நேரிழையார் என்னைப்போற்
சொலத்தானிங் குரியாரைச் சொல்லீரோ வல்லீரேல். 7

58 போக்கினிர் என்னாசி போய்த்தென் நீர் பொறுக்குவிரேல்
ஆக்குவெனோர் நொடிவரையின் அழகமைவென் அருள்கூரும்
பாக்கியமுண் டெனினதனாற் பெண்மைக்கோர் பழுதுண்டோ
மேக்குயரு நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றோ. 8

59 விண்டாரே யல்லரோ வேண்டாதார் நான்வேண்டின்
உண்டாய காதலினென் னுயிரென்ப துமதன்றோ
கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடமன்றோ
கொண்டாரே கொண்டாடும் உருப்பெற்றாற் கொள்ளீரோ. 9

60 சிவனுமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தெறுகுலிசத்
தவனுமடுத் தொன்றாகி நின்றன்ன உருவோனே
புவனமனைத் தையுமொருதன் பூங்கணையால் உயிர்வாங்கும்
அவனுமுனக் கிளையானோ இவனேபோன் றருளிலனால். 10

---

சொல்லத் தகுதியுடையவரை. இங்கு—இப்பொழுது. சொல்லீரோ—சொல்லுவீர்களோ? வல்லீரேல்—அப்படி ஒருவர் இருந்தாலன்றோ சொல்லுவீர்; அப்படி இல்லாமையினால் பேசாமலிருக்கின்றீர்.

58 என் நாசி போக்கினிர். போய்த்து என்—அதனால் இழந்தது யாது? ஒன்றும் கெட்டுப்போய்விடவில்லை. பொறுக்குவிரேல்—இக்குறையைப் பொருட்படுத்தாது என்னை ஏற்றுக்கொள்ளுவீராயின். ஓர் நொடிவரையின் ஆக்குவென்—ஒரு நொடிப் பொழுதில் அதனைப் பழையபடி உண்டாக்குவேன். பெண்மைக்கு—பெண்களுக்குள்ள நற்குணங்களுக்கு. மேக்கு—மேலே; அதிகமாய். மிகை—குற்றம்.

59. மனம் வேறுபட்டவரல்லரோ விரும்பப்படாதவர். உமது மனத்தில் உண்டான அன்போடு நான் விரும்பப்பட்டால் எனது உயிரும் உமக்கே உரியதன்றோ. கட்டழகு—மிக்க அழகு. விடமன்றோ—விடம்போலக் கொடியதன்றோ. கொண்டார்—மணஞ் செய்துகொண்டவர். உரு—வடிவம். கொள்ளீரோ—அங்கீகரிக்க மாட்டீரோ.!

60. மலர்த் திசை முகன்—தாமரை மலரிலே தோன்றிய பிரமன். தெறு குலிசத்தவன்—பகைவரை அழிக்கும் வச்சிரப் படையுடைய இந்திரன். அடுத்து—சேர்ந்து. புவனம்—உலகம். ஒரு தன் பூங்கணை—ஒப்பற்ற தன் மலரம்பு. உயிர் வாங்கும்—கொன்றாலன்ன துன்பஞ் செய்யும். அவனும்—அம்மன்மதனும். இளையானோ—தம்பியோ. இவனே போல்—இந்தத் தம்பியைப் போலவே. ஆல்—அசை.

## வேறு

61 பொன்னுருவப் பொருகழலீர் புழைகாண
மூக்கரிவான் பொருள்வே றுண்டோ
இன்னுருவம் இதுகொண்டிங் கிருந்தொழியும்
நம்மருங்கே ஏகாள் அப்பால்
பின்னிவரை அயலொருவர் பாராரென்
றேயரிந்தீர் பிழைசெய் தீரோ
அன்னதனை அறிந்தன்றோ அன்பிரட்டி
பூண்டதுநான் அறிவி லேனோ. 11

61 வெப்பழியா நெடுவெகுளி வேலரக்கர்
ஈதறிந்து வெகுண்டு நோக்கின்
அப்பழியால் உலகனைத்தும் நும்பொருட்டால்
அழிந்தனவாம் அறத்தை நோக்கி
ஒப்பழியச் செய்கிலார் உயர்குலத்துத்
தோன்றினோர் உணர்ந்து நோக்கி
இப்பழியைத் துடைத்துதவி இனிதிருத்திர்
என்னொடுமென்று இறைஞ்சி நின்றாள். 12

---

61. பொன் உருவப் பொரு கழலீர்—பொன் மயமான அழகிய வீரக் கழலை அணிந்தவர்களே! புழைகாண—துவாரம் தோன்றும்படி. அரிவான்—அறுப்பதற்கு. பொருள்—நோக்கம். இன்னுருவம் இது—இனிய உருவமாகிய இதனை. இங்கு நம்மருங்கே இருந்தொழியும். பிழை—குற்றம். நான் அறிவிலேனோ—உங்களுடைய உட்கருத்தை உணரும் அறிவில்லாதவளோ நான்!

62. நயத்தாலும் பயத்தாலும் பேசி ஈற்றில் கெஞ்சுகின்றாள். வெப்பு—கோதிப்பு. அழியா—எவ்வளவு பழிவாங்கினாலும் அடங்காத. நோக்கின்—அவர்களது கோபப் பார்வையினாலேயே உலகம் சாம்பலாகிவிடும் என்று கருதுகின்றாள். பழியால்—பொல்லாங்கினால். உலகு அனைத்தும் நும் பொருட்டால் அழிந்தனவாம்—எல்லா உலகமும் உங்கள் நிமித்தமாக அழிந்தன என்றாகிவிடும். ஒப்பு—அழகு. தம் உயர்குலத்திற்கேற்ற அழகு குலையும்படியான காரியங்களைச் செய்யமாட்டார். உணர்ந்து நோக்கி—ஈன்கு ஆலோசித்துப் பார்த்து. இப்பழியைத் துடைத்து—எனது மூக்கறுத்த இக் குற்றத்தை இல்லாமற் செய்து. உதவி—என்னைத் துன்புறுத்தும் மன்மதனை வெல்லத் துணைபுரிந்து. இறைஞ்சி நின்றாள்—வணங்கி நின்றாள்.

63 நாடறியாத் துயரிழைத்த நவையரக்கி
நின்னன்னை தன்னை நல்குந்
தாடகையை உயிர்கவர்ந்த சரமிருந்தது
அன்றியுநான் நவமேற் கொண்டு
தோடகையத் துறுமலர்த்தார் இகலரக்கர்
குலந்தொலைப்பான் தோன்றி நின்றேன்
போடகலப் புல்லொழுக்கை வல்லரக்கி
என்றிறைவன் புகலும் பின்னும். 13

64 தரையளித்த தனிநேமித் தயரதன்தன்
புதல்வரியாம் தாய்சொல் தாங்கி
விரையளித்த கான்புகுந்தேம் வேதியரும்
மாதவரும் வேண்ட நீண்டு
கரையளித்தற் கரியபடைக் கடலரக்கர்
குலந்தொலைத்துக் கண்டாய் பண்டை
வரையளித்த குலமாட நகர்புகுவேம்
இவைதெரிய மனக்கொள் என்றான். 14

---

63. நாடு அறியாத் துயர் இழைத்த நவை அரக்கி தாடகை—நாட்டவர் முன்பு அனுபவித்தறியாத துன்பத்தைச் செய்த, குற்றமே உருக்கொண்டாற் போன்ற அரக்கியாகிய தாடகை. நின் அன்னைதன்னை நல்கும் தாடகை—தாடகை கணவனை இழந்தபின் அரக்கத் தன்மையை அடைந்து தன் மக்களோடு இராவணனது தாய் மாமன் சுமாலியிடம் செல்ல அவன் அம்மக்களை அபிமான புத்திரராகக் கொண்டான்: ஆதலால் தாடகை, சூர்ப்பநகையின் தாயாகிய கேசியின் தாயாகக் கூறப்படுகிறாள். இருந்தது—உள்ளது. தோடு அகைய துறு மலர்த்தார் அரக்கர்—இதழ்கள் ஒடியும்படி நெருக்கமாகத் தொடுத்த பூமாலையை அணிந்த அரக்கர். இகல் அரக்கர்—போரினைச் செய்கின்ற அரக்கர். அத்தகைய அரக்கர் குலத்தை. தொலைப்பான்—முற்றும் அழிக்கும் பொருட்டு. தோன்றி நின்றேன்-பிறந்து நின்றேன். புல் ஒழுக்கை—அற்ப ஒழுக்கத்தை. அகலப்போடு—விட்டுவிடு.

64. தரை அளித்த தனி நேமித் தயரதன்—உலகம் முழுவதையும் அரசாண்ட ஓர் ஆஞ்ஞா சக்கராதிபதியாகிய தயரதன். விரை அளித்த கான்—வாசனையையுடைய கானகம். நீண்டு—பின்னும் சில நாள் காட்டிலிருந்து. கரை அளித்தற்கரிய—எல்லையமைக்க அரிதான. கண்டாய்—அசைநிலை. வரை அளித்தகுல மாட நகர்—மலைகளும் தமக்கு ஒப்பாமென்று கூறத்தகும் கூட்டமான மாளிகைகளையுடைய நகரம். தெரிய—விளங்க.

65 நெறித்தாரை செல்லாத நிருதரெதிர்
நில்லாதே நெடிய தேவர்
மறித்தாரீண்டு இவரிருவர் மானுடவர்
என்னாது வல்லை யாகின்
வெறித்தாரை வேலரக்கர் விறலியக்கர்
முதலினர்நீ மிடலோ ரென்று
குறித்தாரை யாவரையுங் கொணருதியேல்
நின்னெதிரே கோறும் என்றான். 15

66 கொல்லலா மாயங்கள் குறித்தனவே
கொள்ளலாம் கொற்ற முற்ற
வெல்லலா மற்றியற்றும் வினையெலாங்
கடக்கலா மேல்வாய் நீங்கிப்
பல்லெலாம் உறத்தோன்றும் பகுவாயள்
என்னாது பார்த்தி யாயின்
நெல்லெலாஞ் சுரந்தளிக்கும் நீர்நாட
கேளென்று நிருதி கூறும். 16

67 காம்பறியுந் தோளாளைக் கைவிட
ரெனினுமியான் மிகையோ கள்வர்
ஆய்பொறியில் அடலரக்கர் அவரோடே
செருச்செய்வான் அமைந்தி ராயின்

---

65. நெறித்தாரை—நல்லொழுக்க வழியிலே. நிருதர் எதிர் நில்லாதே—அரக்கருக்குப் போரில் எதிர் நிற்கலாற்றாது. நெடிய தேவர்—சிறந்த தேவர். மறித்தார்—சிறைப்பட்டனர். மானுடவர் என்னாது—மனிதர்கள் தானே என்று அலட்சியஞ் செய்யாமல். வெறி—கோபாவேசம்; 'வெப்பழியா நெடு வெகுளி'. தாரை வேல்—கூர்மையான வேல். விறல் இயக்கர்—வலிமையுடைய இயக்கர். மிடலோர்—வலிமையுடையோர். கொணருதியேல்—அழைத்துவந்து என்முன் நிறுத்த வல்லையாயின். கோறும்—கொன்றிடுவோம்.

66. கொல்லலாம் — அரக்கரையெல்லாம் அழிக்கலாம். மாயங்களை உள்ளத்திற் கொண்டபடியே நாமறிந்து கொள்ளலாம். கொற்றம் முற்ற—வெற்றி பூர்த்தியாகும்படி. மற்று இயற்றும் வினையெலாம் கடக்கலாம்—அவர்கள் செய்கின்ற மாய வினைகளையெல்லாம் வென்று மேற்செல்லலாம். உறத்தோன்றும்—நன்கு வெளிப்பட்டுத் தோன்றும். பகுவாயள்—திறந்த வாயள். பார்த்தியாயின்—கருணையோடு நோக்குவாயாயின். சுரந்து அளிக்கும்—மேன்மேல் மிகுதியாக விளைகின்ற.

67. காம்பறியும் தோளாள்—இள மூங்கிலை ஒத்த தோள்களையுடையவள். கள்வர் ஆம் பொறி இல் அடல் அரக்கர்—வஞ்சகராகிய அறிவில்லாத

தாம்பொறியிற் பலமாயந் தரும்பொறிகள்
அறிந்தவற்றைத் தடுப்பெ னன்றே
பாம்பறியும் பாம்பின்கால் எனமொழியும்
பழமொழியும் பார்த்தி லீரோ. 17

68 உளங்கோடல் உனையிழைத்தாள் உளள்ஒருத்தி
என்னுதியேல் நிருத ரோடும்
களங்கோடற் குரியசெருக் கண்ணியக்கால்
ஒருமூவேங் கலந்த காலைக்
குளங்கோடும் என்றிதுவும் உறுகோளே
என்றுணருங் குறிக்கோள் இல்லா
இளங்கோவோடு எனை இருத்தின் இருகோளுஞ்
சிறைவைத்தாற்கு இளையேன் என்றாள். 18

69 பெருங்குலா உறுநகர்க்கே ஏகுநாள்
வேண்டும் உருப்பிடிப்பேன் அன்றேல்
அருங்கலாம் உற்றிருந்தான் என்னினும்
ஈங்கிளையவன் தானரிந்த நாசி
ஒருங்கிலா இவளோடும் உறைவேனே
என்பானேல் இறைவ ஒன்றும்
மருங்கிலா தவளோடு மன்றோநீ
நெடுங்காலம் வாழ்ந்த நென்பாய். 19

---

வலிமையுடைய அரக்கர். அமைந்திராயின்—தீர்மானித்துள்ளீராயின். பொறியின் பல மாயம் தரும் பொறிகள் அறிந்து—பஞ்சேந்திரியங்களைப் போலப் பல வஞ்சனைகளைச் செய்ய வல்ல யந்திரம் முதலியவற்றை யான் அறிந்து.

68. உனை உளங்கோடல் இழைத்தாள் ஒருத்தி உளள் என்னுதியேல்—உன்னை மனங்கவர்ந்தவளாகிய மனைவி ஒருத்தி இருக்கின்றாள் என்று கருதுவாயாயின். நிருதரோடும் களங்கோடற்கு உரிய செரு கண்ணியக்கால்—அரக்கரோடும் போர்க்களத்திலே கொள்ளுதற்குரிய போரைக் கருதினால். ஒரு மூவேம் கலந்த காலை—நாம் மூவரும் ஒன்று சேர்ந்தபொழுது. குளம்—நெற்றி; ஈண்டு தலை. கோடும்—கொள்ளுவோம். உறுகோள்—பொருந்திய கொள்கை. குறிக்கோள்—மக்களறிவு. மூவரும் ஒன்று சேர்ந்தால் அரக்கர் தலையைக் கொள்ளமுடியும்; இது ஏற்ற கொள்கை என்று உணரும் ஆலோசனை இல்லாத இளையவன். இருகோள்—சூரியன், சந்திரன். இளையேன்—தளரேன்; பின்னிடமாட்டேன்.

69 பெரும் குலா உறு நகர்—பெரிய கொண்டாட்டம் மிக்க நகர். பிடிப்பேன்—மந்திர வலிமையினாற் கொள்ளுவேன். அருங் கலாம்—நீங்கிய கோபம். ஒருங்கு—முழுவதும். மருங்கு—இடை.

70 என்றவள்மேல் இளையவன்தான் இலங்கிலைவேல்
கடைக்கணியா இவளை ஈண்டு
கொன்றுகளை யேமென்றால் நெடிதலைக்கும்
அருளென்கொல் கோவே என்ன
நன்றதுவே யாமன்றோ போகாளேல்
ஆகவென நாதன் கூற
ஒன்றுமிவர் எனக்கிரங்கார் உயிரிழப்பேன்
நிற்கிலென அரக்கி உன்னா. 20

71 ஏற்றநெடுங் கொடிமூக்கும் இருகாதும்
நகிலிரண்டும் இழந்தும் வாழ
ஆற்றுவனே வஞ்சனையால் உமையுள்ள
பரிசறிவான் அமைந்த தன்றோ
காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக்
கொடியானைக் கரனை உங்கள்
கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன்
என்றுசலங் கொண்டு போனாள். 21

---

70. இலங்கு இலை வேல் கடைக்கணியா—விளங்குகின்ற மூவிலை வடிவமான வேற் படையைக் கடைக் கண்ணால் பார்த்து. ஈண்டு—இப்பொழுதே. களைதல்—ஒழித்தல். நெடிது அலைக்கும்—மிகவும் துன்பப் படுத்துவாள். அருள் என் கொல்—உனது கட்டளை யாதோ? அதுவே நன்றும் அன்றோ. ஒன்றும்—ஒரு சிறிதும். உன்னா—நினைத்து. அடுத்த கவியோடு முடியும்.

71. ஏற்றம்—உயர்ச்சி. நெடும் கொடி மூக்கும்—நீண்ட கொடிபோலும் மூக்கும். வாழ ஆற்றுவனே—உங்களோடு உயிர் வாழச் சகிப்பேனோ? உள்ள பரிசு—உங்களிடத் துள்ள குணாதிசயங்களை. வஞ்சனையால் அறிவான் அமைந்ததன்றோ—வஞ்சிக்கும் தன்மையால் அறிந்து கொள்ளும் பொருட்டுச் செய்ததல்லவா? கடியானை—வேக முள்ளவனை. சலம்—கோபம்.

## 29. கரன் வதம்.

கடுஞ்சினங்கொண்டு சென்ற சூர்ப்பநகை குருதியாறொழுகத் தலைவிரிகோலமாய்க் கரனிடஞ் சென்று அவன் காலில் விழுந்து அழுதாள். அவன், "இது செய்தவர் யார்?" என்னலும், அரக்கி நடந்தவற்றைக் கூறி, "உடன் வாழும் மெல்லியலை இலங்கையர் கோனிடம் உய்ப்பல் என்றெடுக்கலுற்ற என்னை அவர் வெகுண்டு இங்ஙனஞ் செய்தனர்" என்றுரைத்தாள். அதுகேட்டுக் கோபங்

கொண்டெழுந்த கரனை இடைவிலக்கி, பதினல்வர் படைவீரர் போர்க்கெழுந்து சென்று இராமபிரானெடு பொருது உயிரிழந்தனர். அன்னர் இறந்த செய்தியறிந்த கரன் தன் தம்பியருடனும் பதினன்கு படைத்தலைவருடனும் போர்க்குப் புறப்பட்டனன். தனியனுய் நின்று போர்செய்த இராகவன் முதலில் படைத்தலைவரை அழித்தான். பின்பு கரன் தம்பியரான திரிசிராவையும் தூடணனையுங் கொன்ருன். ஈற்றில் எதிர்த்து வந்த கரனையும் சிரமறுத்தான். இப்பகுதியில் கரனெடு போர்செய்து அவனைக் கொன்ற வரலாறு கூறப்படுகின்றது.

இப்போர் ஒரு தனிப்பட்ட சீரிய முறையில் வருணிக்கப் படுகின்றது. போர் நிகழ்ச்சிக் கேற்ற ஓசையும் நடையும் அமைந்துள்ள இப்பகுதியில் தன்னந்தனியனுய்ப் போர் செய்த இராமபிரானது வீரமும் கைவில் இற்ற பொழுதும் கலங்கா மனநிலையும் நன்கு காட்டப்பட்டுள்ளன.

[தெ. ப:—கரன் வதைப்படம் 162—167, 169—186.]

72 தம்பிதலை யற்றபடி யுந்தய ரதன்சேய்
அம்புபடை யைத்துணி படுத்ததும் அறிந்தான்
வெம்புபடை விற்கைவிச யக்கரன் வெகுண்டான்
கொம்புதலை கட்டிய குலக்கிரி கடுப்பான். 1

73 அந்தகனும் உட்கிட அரக்கர்கட லோடும்
சிந்துரம் வயப்புரவி தேர்திசை பரப்பி
இந்துவை வளைக்குமெழி லிக்குல மெனத்தான்
வந்துவரி விற்கைமத யானையை வளைத்தான். 2

---

72. தம்பி—தூடனன். படை—இராக்கத சேனை. வெம்பு—உக்கிரங் கொண்ட (கரன்.) வெகுண்ட போதைய தோற்றம் ஈற்றடியிற் கூறப்பட்டது; பிறை எயிறு யானைத் தந்தம் போன்று வெளிப்பட்டன: தந்தங்களை முகத்தின் கண்ணே கொண்ட குலயானை போன்றவன்.

73. அந்தகன்—யமன். கடல் போன்று கொந்தளிக்கும் பெரிய அரக்கர் சேனை. சிந்துரம்—யானை. சந்திரனை முற்றிலும் சூழ்ந்து கொள்ளும் மேகக் கூட்டமென. யானை—இராமபிரான்.

74 அடங்கலில் கொடுந்தொழில் அரக்கரவ் வனந்தன்
படங்கிழி தரப்படி தனிற்பல விதப்போர்
கடங்கலுழ் தடங்களிறு தேர்பரி கடாவித்
தொடங்கினர் நெடுந்தகையும் வெங்கணை துரந்தான். 3

75 துடித்தன கடக்கரி துடித்தன பரித்தேர்
துடித்தன முடித்தலை துடித்தன தொடித்தோள்
துடித்தன மணிக்குடர் துடித்தன தசைத்தோல்
துடித்தன கழற்றுணை துடித்தன இடத்தோள். 4

76 வாளின்வனம் வேலின்வனம் வார்சிலை வனந்திண்
தோளின்வனம் என்றிவை துவன்றி நிருதப்பேர்
ஆளின்வனம் நின்றதனை அம்பின்வன மென்னுங்
கோளின்வன வன்குழுவி னிற்குறை படுத்தான். 5

77 தானுருவு கொண்டதரு மந்தெரி சரந்தான்
மீனுருவு மேருவை விலங்குருவு மேலாம்
வானுருவு மண்ணுருவும் வாளுருவி வந்தார்
ஊனுருவு மென்னுமி துணர்த்தவு முரித்தோ. 6

78 கடுங்கர னெனப்பெயர் படைத்தகழல் வீரன்
அடங்கலும் அரக்கரழி வுற்றிட அழன்றான்
ஒடுங்கலில் நிணக்குருதி ஓதமதி னுள்ளான்
நெடுங்கடலில் மந்தர மெனத்தமியன் வந்தான். 7

---

74. கொடுந் தொழில்—தீய செயல்: அச்செயலில் உள்ள வேகம் அடங்குதலில்லாத அரக்கர். மதநீரைப் பொழிகின்ற பெரிய யானை. கடாவி—செலுத்தி. நெடுந்தகை—அவர்கள் அம்பு துரக்கும் வரையில் பொறுத்திருந்த இராமபிரான்.

75. துடித்தன—பதைத்து விழுந்தன. தேர்ப் பரி. தொடி—வளை மணிக் குடர்—சிறந்த குடல்கள்.

76 வனம்—அடர்ந்த தொகுதியைக் குறிக்கும்: ஈற்றடியில் அழகு. கோள்—கொலைத்தொழில். குறை படுத்தல்—துணி படுத்தல்.

77. தருமம் தானே உருவெடுத்தாற்போன்ற இராமபிரான். உருவும்—வடிவும். மேருவை விலங்க உருவும்: விலங்க—குறுக்காக. வாளுருவி வந்தார்—வாள்களை உறையினின்றும் கழித்தெடுத்து. வந்தவர். ஊன்—உடம்பு.

78. அரக்கர் அடங்கலும் அழிதலாலே. ஒடுங்கல் இல்—குறைவில்லாத. குருதி ஓதம்—உதிர வெள்ளம். மந்தரமலைபோலத் தமியனாய் நின்றான்.

79 செங்கணெரி சிந்தவரி விற்பகழி சிந்தப்
பொங்குகுரு திப்புணரி யுட்புகையு நெஞ்சன்
கங்கமொடு காகமிடை அக்கடலி னேடும்
வங்கமென லாயதொரு தேரின்மிசை வந்தான். 8

80 செறுத்திறுதி யிற்புவனி தீயஎழு தீயின்
மறத்தின்வயி ரத்தொருவன் வந்தனுகு முந்தைக்
கறுத்தமணி கண்டர்கட வுட்சிலை கரத்தால்
இறுத்தவனும் வெங்கணை தெரிந்தனன் எதிர்ந்தான். 9

81 தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை அரக்கர்பதி எய்தான்
தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை இராமனும் அறுத்தான். 10

82 ஊழியெரி யிற்கொடிய பாய்பகழி ஒன்பான்
ஏழுலகி னுக்குமொரு நாயகனும் எய்தான்
சூழ்சுடர் வடிக்கணை அவற்றெதிர் தொடுத்தே
ஆழிவரி விற்கரனும் அன்னவை அறுத்தான். 11

83 கள்ளஅமர் மாயவினை கல்வியின் விளைத்தான்
வள்ளலுரு வைப்பகழி மாரியின் மறைத்தான்
உள்ளமுலை வுற்றமரர் ஓடினர் ஒளித்தார்
வெள்ளெயி றிதழ்ப்பவள வீரனும் வெகுண்டான். 12

---

79. புகையும்—கோபம் மூளும். கங்கம்—கழுகு. மிடைய—நெருங்க. வங்கம்—மரக்கலம்.

80. செறுத்து—உக்கிரமாக. இறுதி—உகாந்த காலம். எழு தீ—கிளர்கின்ற நெருப்பு. மறம்—கொடுமை. வயிரம்—பகைமை. இரண்டையுமுடைய கரன். அனுகு முன்பு. சிவபெருமானது தெய்வத் தன்மை பொருந்திய வில்லினை. தெரிந்தனன்—தெரிந்து.

81. தீயினது வடிவத்தை யுடைய. கால்—காற்று. வடி—கூர்மை.

82. தீயின் சுவாலை சூழ்ந்த வடிக்கணை. ஆழி—சக்கரம். சக்கரம் போன்று வளைத்த வில்.

83. கள்ள அமர்—வஞ்சனைப் போர். கல்வியின்—வித்தையினாலே. உள்ளம் உலைவுற்று—மனம் நடுங்கி. ஓடினர்—ஓடி.

## வேறு

84 முடிப்பன் இன்றொரு மொய்கணை யாலெனாத்
தொடுத்து நின்றுயர் தோளுற வாங்கினான்
பிடித்த திண்சிலை பேரகல் வானிடை
இடிப்பின் ஓசை படக்கடி திற்றதே. 13

85 வெற்றி கூறிய வானவர் வீரன்வில்
இற்ற போது துணுக்கமுற் றேங்கினார்
மற்றொர் வெஞ்சிலை இன்மை மனக்கொளா
அற்ற தாலெம் வலியென அஞ்சினார். 14

86 என்னும் மாத்திரத் தேந்திய கார்முகம்
சின்ன மென்றுந் தனிமையுஞ் சிந்தியான்
மன்னர் மன்னவன் செம்மல் மரபினால்
பின்னு றத்தன் பெருங்கரம் நீட்டினான். 15

87 கண்டு நின்று கருத்துணர்ந் தானென
அண்டர் நாதன் தடக்கையின் அத்துணை
பண்டு போர்மழு வாளியைப் பண்பினாற்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன். 16

88 கொடுத்த வில்லையக் கொண்டல் நிறத்தினான்
எடுத்து வாங்கி வலங்கொண்டு இடக்கையிற்
பிடித்த போது நெறிபிழைத் தோர்க்கெலாம்
துடித்த வாலிடக் கண்ணொடு தோளுமே. 17

---

84. மொய்கணை—வலிய அம்பு. ஓர் அம்பைத் தொடுத்தபடி நின்று. வாங்கினான்—வளைத்து இழுத்தான். பெரிய அகன்ற வானம். விரைவாக ஒடிந்தது.

85. துணுக்கம்—நடுக்கம். அற்றது—அற்றுப்போய்விட்டது.

86. என்னும் மாத்திரத்து—வானவர் இங்ஙனங் கூறி அஞ்சிய அளவில். கார் முகம்—வில். சின்னம்—ஒடிந்தது. செம்மல்—இராம பிரான். மரபினால்—பழைய மரபு முறைப்படி.

87. அத்துணை—அந்தச் சமயத்தில். மழுவாளி—பரசுராமன். மழு வாளியிடம். முன்பு பரசுராமனிடங் கொண்ட வில்லை இராமபிரான் வருணனிடம் ஒப்படைத் திருந்தான். பண்பினால்—உரிமையினால்.

88. வலங்கொண்டு வாங்கி எடுத்து—வலக்கையால் வாங்கி ஏந்தி. நாண் ஏற்றுதற்கு இடக்கையிற் பிடித்த பொழுது. ஆல்—அசை.

89 ஏற்றி நாணிமை யாமு னெடுத்தது
கூற்றி னானுங் குனிக்கக் குனித்தெதிர்
ஆற்றி னானவன் ஆழியந் தேர்சரம் 18
நூற்றி னான்நுண் பொடிபட நூறினான்.

90 எந்தி ரத்தடந் தேரிழந் தானிழந்து
அந்த ரத்திடை ஆர்த்தெழுந் தம்பெலாஞ்
சுந்த ரத்தனி வில்லிதன் தோளெனும் 19
மந்த ரத்தின் மழையின் வழங்கினான்.

91 தாங்கி நின்ற தயரத ராமனும்
தூங்கு தூணி யிடைச்சுடு செஞ்சரம்
வாங்கு கின்ற வலக்கையோர் வாளியால் 20
வீங்கு தோளொடு பார்மிசை வீழ்த்தினான்.

92 வலக்கை வீழ்தலும் மற்றக் கையால்வெற்றி
உலக்கை வானத் துருமென ஓச்சினான்
இலக்கு வற்குமுன் வந்த இராமனும் 21
விலக்கி னானொரு வெங்கதிர் வாளியால்.

93 விராவ ருங்கடு வெள்ளெயி றிற்றபின்
அராவ மூன்ற தனையதன் னாற்றலால்
மராம ரங்கையில் வாங்கிவந் தெய்தினான் 22
இராம னங்கோர் தனிக்கணை ஏவினான்.

94 வரம ரக்கன் படைத்தலின் மாயையின்
உரமு டைத்தன்மை யானுல கேழையும்
பரமு ருக்கிய பாவத்தி னால்வலக் 23
கரமெ னக்கரன் கண்டமுற் றானரோ.

---

89. நாண் ஏற்றி. அது—அவ்வில்லை. யமனும் மதிக்கும்படி. குனித்து—வளைத்து. சரம் நூற்றினால். எதிர்த்தவனாகிய கரனது தேரைப் பொடிபட அழித்தான்.

90. எந்திரத் தடந் தேர்—எந்திரம் போன்று விரைந்து செல்லும் பெரிய தேர். அந்தரம்—ஆகாயம். மந்தரத்தின் மீது மழை போல.

91. தாங்கி நின்ற—தடுத்து நின்ற. தூங்கு தூணி—தோளிலே கட்டப் பட்ட அம்பறாத் தூணி. வாங்குகின்ற—அம்பை எடுக்கும் நிலையிலுள்ள.

92. உரும்—இடி. ஓச்சினான்—உயர வீசினான். இராமனும் ஒரு வாளியால் அதனை விலக்கினான்.

93. விராவரும் கடு—பொருந்தியுள்ள நஞ்சு; நஞ்சினைக் காலுகின்ற பற்கள். வாங்கி வந்து—எடுத்து வந்து.

94. அரக்கன்—ஈண்டு இராவணன். பரம் முருக்கிய—மிகுதியும் துன்புறுத்திய. வரத்தினாலும், மாயையினாலும், தேக வலிமையினாலும்—ஏழுலகையும் முருக்கினான்; அப்படி முருக்கிய பாவத்தினால் கரன் கழுத்தறுப் புண்டான்.

95 ஆர்த்தெ ழுந்தனர் ஆடினர் பாடினர்
தூர்த்த மைந்தனர் வானவர் தூய்மலர்
தீர்த்த னும்பொலிந் தான்கதி ரோன்திசை
போர்த்த மென்பனி போக்கிய தென்னவே. 24

---

95. தூர்த்து—தூய்மலர் பொழிந்து. அமைந்தனர்—முன்னைய துணுக்கம் நீங்கப் பெற்றனர். தீர்த்தன்—பரிசுத்தனாகிய இராமபிரான். திசை போர்த்த—எல்லாத்திசைகளையும் மூடிய.

## 30. சூர்ப்பநகை இராவணனிடம் முறையிடுதல்.

கரன் முதலிய காளைவீரர் இராமபிரானது வில் ஒன்றில் கடிகை மூன்றில் விண்ணுல கெய்திய பின்பும், அப்பேரிழவை மறந்தனள்போல் அப்பிரானது தங்கவரைப் புயத்திடைக் கிடந்த பேராசை மனங்கவற்ற ஆற்றாளாகி, தன் மனோரதம் நிறைவேறுதற்கிடையூறாக இருந்த சீதாபிராட்டியைப் பிரித்துப் பழிவாங்கும் எண்ணத்துடன் இராவணனிடம் அவள் தன்மை உரைப்பேன் என்று தலையில் அங்கை வைத்து மலையிலங்கையை நோக்கி ஓடினாள். அங்ஙனம் சென்றவள் அரக்கர்கோனிடம் பேசி அவன் மனத்தைச் சீதைபால் திருப்பிய வரலாறு இப் பகுதியிற் காணப்படும்.

இராமபிரானிடம் சென்ற பொழுது பொய்ம்மையும் வஞ்சனையும் மேற்கொண்டு தன்னை மறைக்க முயன்று அது முடியாமல் ஏமாற்றமடைந்த 'ஊன்சுட உணங்கு பேழ்வாய் உணர்விலி' யாகிய அரக்கி, 'பாம்பின்கால் பாம்பறியும்' என்பதற்கிணங்க இராவணன் மனப்பாங்கினை நன்கறிந்தவளாதலால், அவன் மனத்தைப் பித்தேற்றி அன்னவனை எளிதில் ஏமாற்ற வல்லவளாயினாள். பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள் தன் கணவன் இராவணனால் தலையறுப்புண்டமைக்கும் தான் இராமனால் காதும் மூக்கும் அறுப்புண்டமைக்கும் ஒரே முறையிற் பழிவாங்கும்படி 'கனிவாய்த் திருவினைப் பிரித்து' இராவணன் தலையுடன் அரக்கர் குலமும் அறும்படியான கொடுமை சூழ வல்லளாயினாள்.

தன் காலடியில் விழுந்து புரண்டழுத அரக்கியை நோக்கி, இராவணன் எடுத்த சீற்றத்தனாய், "யாவர் செயல்?" என்றான். அவள், "மானிடர் தடிந்தனர்கள் வாளுருவி" என்று விடை பகர, அதனைச் சிறிதும் நம்பாமல், "உள்ளதைப் பயப்படாமற் சொல்" என்றான். தன்னாற் காதலிக்கப்பட்ட மானுடர் வல்ல

மையைத் தன் கணவனைக் கொன்ற தமையன் அவமதித்துக் கூறியதைக் கேட்கப் பொறாத அரக்கி, இராவணன்மீது கொண்டிருந்த அலட்சியமும் இராமன்மாட்டுள்ள பெருமதிப்பும் ஒருங்கு எழ, வீரர் இருவரது வலிமை, அழகு, முதலிய வற்றைத் தனது வாக்கு வல்லமை முழுவதுந் தோன்ற விரித் துரைத்து, இடையே இராவணனுக்குத் தைக்கும்படி, "உன்னை ஓர் துகள்தனையும் உன்னார்; நுங்கள் குலம் வேரொடு மடங்கக் கோறும் என முந்தை ஒரு சூளுறவு கொண்டார்" என்று ஆவேசத்தோடு விடை பகர்ந்தாள். அதுவரை போர்க்களத் தில் வெற்றியன்றி மற்றொன்று பெற்றறியாத அரக்கர் வேந்தன் அவமானத்தாற் புழுங்கினன்; தன்னையே பலவாறு நொந்து வருந்தினன். மானிடர்மீதெழுந்த கோபக்கனல் சூர்ப்பநகை மீதும் சிறிது வீச, "அம்மானுடரைக் கரன் முதலிய வீரர் கொன்றிலரோ?" என்று பெருமிதத்துடன் வினவினன். அது கேட்டதும், கரன் விழுந்து கிடந்த காட்சியைக் கண்டனள் போற் கவன்று வயிறலைத்து ஒப்பாரி வைக்கலானாள். பின்பு நிகழ்ந்தது இன்னதென்று ஒருவாறு விளங்கும் வண்ணம் உரைக்கலுற்றாள். இராமபிரான் புரிந்த வீரப்போர் அவள் அகக்கண் முன்னே எழ, அவனது 'கல்லொன்று கமலச் செங் கண்' அழகினில் ஈடுபட்ட நிலையில் கரன் முதலியோருக்கு நேரிட்ட கதியை வியப்புணர்ச்சி தோன்றக் கூறினாள். அவள் கூற்றின் பண்பை நோக்காது அதன் சாரத்தை மட்டும் உட் கொண்ட இராவணனுக்குக் கோபத்துடன் துக்கமும் பொங்கி எழுந்தது. அத்துன்பம் சீற்றத்திற்கு ஊற்றஞ் செய்ய, எடுத்த சீற்றம் சூர்ப்பநகை மீதுந் தாவிற்று; அவளை நோக்கி, "நீ இடை இழைத்த குற்றம் என்னை கொல்?" என்று உறுக்கினன். அவன் கொண்ட சீற்றத்தை ஒரு துகள்தனையும் பொருட்படுத்தாத வஞ்சக அரக்கி, ஆறுதலாக இழுத்திழுத்துப் பேசலுற்று "என் வயின் உற்ற குற்றம்" என்று தொடங்கி, சீதாபிராட்டியின் வாம்பில் பேரழகை இராவணன் மனங்கவரும்படி சில சொற் களால் வருணித்து, "இன்ன இயல்பினள் பொருட்டாற் புகுந்தது" என்று அரை குறையான விடை கூறி அவன் ஆராய்ச்சியை வேறு திசையில் திருப்பினாள். தூண்டிலை விழுங்கிய மீனைப்போன்று அவளது சூழ்ச்சி வலையில் அகப் பட்ட இராவணன் தன் கவர்ச்சியை வெளிப்படையாகக் காட்டாதவன் போன்று பெருமிதமான குரலில், "ஆரவள்?" என்று கேட்டான். இவ்வினா அவன் வாயினின்றும் வருவதை ஆவலோடு எதிர்பார்த்திருந்த சூர்ப்பநகை, தான் திட்டம் போட்டபடி அரக்கர் வேந்தன் மனத்தில் காதல் நெருப்பை மூட்டலானாள். தன் சூழ்ச்சி ஆரம்பத்திலேயே பலிப்பதைக்

கண்ட சூர்ப்பநகை, "ஐய! யான் கூறுவதை ஆழ்ந்து தேர்," என்று பீடிகையிட்டு, சீதாபிராட்டியின் வடிவெலாம் பேசி, அவளைத் தன் அகக்கண்முன்னே காண்பவள் போலக் காட்டி, "அவளது அழகை ஒருவராலும் பேசமுடியாது; நான் உனக்குக் கூறவும் வேண்டுமோ? நாளைக்கே நீ காண்பாயன்றோ?" என்றுரைத்து, இன்னும் ஒரு படி அவன் மனத்தைத் தான் விரும்பிய நெறியுய்ப்பதற்கு வசப்படுத்தினாள். இராவணன் மனம் பகற் கனவு காணலுற்றது; பேசும்பொழுதே தமையன் மனநிலையை ஒற்றியுணரும் இயல்பினளாகிய அரக்கி அவன் காணும் பகற் கனவை இன்னும் ஒருபடி மேலெழுவித்தற் பொருட்டு, தொடங்கிய பொருளை மறந்து மற்றொன்று விரிப்பவள்போற் பாவனை செய்து, சீதையை அவன் பெற்றுவிட்டமையினால் எல்லா நன்மையும் சிறப்பும் அவனுக்கே உண்டு என்றெல்லாம் பேசி அவனைப் பித்தேற்றினாள். இந்நிலையில் அவள் நன்மொழியாகவே தன்னுணர்ச்சியோடு விரும்பிப் பேசினாள். ஆனால் பகைமை வேரோடிய உள் மனத்தின் செயலால் அவள் கருதியதற்கு நேர் மாறான அமங்கலப் பொருள் அவள் அறியாமலே சிலேடையாக அடுத்தடுத்து மூன்று செய்யுளிற் புகுந்தது. பின்பு நேராகவே, "சீதை என்னும் மான்கொண்டு ஊடாடுநீ உன் வாள் வலி உலகங்காண" என்று கூறி அவனைத் தூண்டிய அளவோடு நில்லாது, அவனது வாள் வலியால் தானும் இராமனையடையலாம் என்று மனப்பால் குடித்து, "யான்கொண்டு ஊடாடும் வண்ணம் இராமனைக் கருதி என்பால்" என்று பேச்சோடு பேச்சாகச் சொல்லிவைத்தாள். ஆனால் தன்னை மறந்து வேறு சிந்தனையில் ஈடுபட்டிருந்த இராவணன் அதனைக் கவனிக்கவில்லை. அரக்கி மறுபடியும், "ஒருபது முகமும் தோள்கள் இருபதும் பெற்ற செல்வம் எய்துவது இனி நீ எந்தாய்" என்று தான் கூறிய கருமத்தை உறுதிப்படுத்தினாள். இவ்வளவோடு நில்லாது முதலில் அண்ணன் கேட்ட வினாவிற்கு விளக்கமான விடையளிப்பவள் போன்று ஆரம்பித்து, "இன்னவள் தன்னை உன்பால் உய்ப்பல் என்றெடுக்கலுற்ற என்னை அவ்விராமன் தம்பி மூக்கரிந்து விட்டான்" என்று தானே அவளைத் தூக்கிவா முற்பட்ட செய்தியை உணர்த்தும் முகத்தால் அவன் மனத்தை மீட்க ஒண்ணாதபடி சீதை பால் முடுக்கிவிட்டாள். அவ்வளவோடு நில்லாது தமையன் மூலமாகத் தான் இராமனைப் பெற இடமுண்டோ என்பதை அறியும் அவாவுடன், "முடிந்தது என் வாழ்வு; உன்னிடம் சொன்னபின் உயிரை நீப்பான் துணிந்தனன்" என்றும் கூறினாள்.

[தே. ப:— மாரீசன்வதைப் படலம்: 45, 49-60, 62-77, 79-81.]

96 என்றினைய வன்துயர் இலங்கைநகர் எய்த
நின்றவர் இருந்தவரொடு ஓடுநெறி தேடக்
குன்றினடி வந்துபடி கொண்டலென மன்னன்
பொன்றினி கருங்கழல் விழுந்தனள் புரண்டாள். 1

97 மடித்தபில வாய்கள்தொறும் வந்துபுகை முந்தத்
துடித்ததொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்பக்
கடித்தகதிர் வாளெயிறு மின்கஞல மேகத்து
இடித்தஉரும் ஒத்துரறி யாவர்செயல் என்றான். 2

98 கானிடை யடைந்துபுவி காவல்புரி கின்றார்
மீனுடை நெடுங்கொடியி னோன்அனையர் மேல்கீழ்
ஊனுடை உடம்புடைமை யோருவமை ஒவ்வா
மானுடர் தடிந்தனர்கள் வாளுருவி என்றாள். 3

99 செய்தனர்கள் மானுட ரெனத்திசை அனைத்தும்
எய்தநகை வந்ததெரி சிந்தினகண் எல்லாம்

---

96. என்று இனைய வன்துயர்—முந்தின செய்யுள்களிற் கூறிய வலிய துயரம். அதாவது சூர்ப்பநகையின் நிலையை இராவணன் அறிந்தால் என்ன ஆபத்துநேருமோ என்று மக்கள் எய்திய துயரம் முதலியன. இராவணன் கோபம் காரணமாகத் தங்களுக்கும் ஆபத்து வரும் என்று அஞ்சி நின்றவர் இருந்தவர்களோடு சேர்ந்து ஓடி உயிர்தப்புதற்குரிய வழிகளை ஆராய. பொன் தினி—அழகு மிக்க. கருங் கழல்—கரிய நிற முள்ள பாதங்கள். விழுந்தனள் புரண்டாள்—விழுந்து புரண்டாள்.

97. பில வாய்—மலைக்குகை போன்ற வாய். மடித்த வாய்—கோபத்தினுல் மடிப்புற்ற வாய். புகை முந்த—மூக்கின் வழி நெருப்புக் காற்று வெளிப்படுமுன் வாய்வழியே கோபப்புகை வெளிப்பட. துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்ப—கோபத்தினுல் மேலுதடு நடுங்க எல்லா மீசைகளும் துடித்தலாலே நெருப்புப் பற்றும்படி பெருமூச்சுவிட்டு. கடித்த கதிர் வாள் எயிறு மின் கஞல—மடித்த வாயைக் கடித்த கூரிய ஒள்ளிய பற்கள் மின்னலின் ஒளியை எழுப்ப. மேகத்திலே இடித்த இடியைப்போலப் பேரொலி செய்து, 'இது யாவர் செயல்!' என்று வினவினுன்.

98. காட்டிலிருந்தபடியே உலகைக் காப்பவர். அழகில் மன்மதனை ஒப்பர். ஊனுடை உடம்புடைமையோர் — மாமிச சரீர மெடுத்தவரில். தடிந்தனர்—அறுத்தனர்.

99. நகை — அலட்சியச் சிரிப்பு. எரி சிந்தின கண். முன்பு எழுந்த கோபம் தடித்தமையால். நொய்து அவர் வலித்தொழில் — அம்மானிடர்

நொய்தவர் வலித்தொழில் நுவன்றமொழி ஒன்றே
பொய்தவிர் பயத்தையொழி புக்கபுகல் என்றான். 4

100 மன்மதனை ஒப்பர் மணிமேனிவட மேருத்
தன்னெழில் அழிப்பர் திரள்தோளின்வலி தன்னால்
என்னதனை இப்பொழு திசைப்பதுல கேழின்
நன்மத னழிப்பரோர் இமைப்பின்தனி வில்லான். 5

101 வந்தனை முனித்தலைவர் பாலுடையர் வானத்து
இந்துவின் முகத்தரெறி நீரிலெழு நாளக்
கந்தமல ரைப்பொருவு கண்ணர்கழல் கையர்
அந்தமில் தவத்தொழிலர் ஆரவரை ஒப்பார். 6

102 வற்கலையர் வார்கழலர் மார்பினணி நூலர்
விற்கலையர் வேதமுறை நாவர்தனி மெய்யர்
உற்கலையர் உன்னையோர் துகள்தனையும் உன்னார்
சொற்கலையெனத்தொலைவில் தூணிகள் சுமந்தார். 7

---

செய்யும் வல்லமைச்செயல் அற்ப அளவினையுடையதன்றோ? (ஆதலால்) நுவன்ற மொழி ஒன்றோ — நீ சொன்னதும் ஒரு பேச்சோ? அதை மெய் யென்று நம்பமுடியுமோ? பொய் தவிர்—இது போன்ற பொய்களை விட்டு விடு. பயத்தை ஒழி—பயத்தை விடு. புக்க புகல்—நிகழ்ந்தவற்றை உள்ள படி சொல்.

100. இது முதல் ஆறு கவிகளில் மானிடர் பெருமையை விரித்துக் கூறுவாள். மணி மேனி—அழகிய மேனியால். எழில்—அழகு. என் அதனை இப்பொழுது இசைப்பது—அவர் வலித்தொழிலைப் பற்றிக் கூறுவது இந் நிலையில் எப்படி இயலும்? நன் மதன்—நல்ல வலிமையை. தனி வில்—பெருமை பொருந்திய வில்.

101. வந்தனை—வணக்கம். எறி நீரில் எழு—அலைகள் வீசுகின்ற நீரிலே தோன்றுகின்ற. நாளக் கந்த மலர்—பூந்தண்டினையுடைய வாசனை பொருந் திய தாமரை மலரை. பொருவு—ஒக்கின்ற. அந்தம் இல் தவம். அந்தம்— முடிவு.

102. வற்கலையர்—மரவுரி தரித்தவர். வில் கலையர்—வில்வேத முணர்ந் தவர். உறை—நிலை பெற்ற. தனி மெய்யர்—மிகவும் மெய்ம்மையை மேற் கொண்டு ஒழுகுபவர். உற்கு அலையர்—உனக்கு அஞ்ச மாட்டார். உன்னை ஒரு தூசிக்குச் சமமாகவும் மதியார். சொல்கலை—சொல்லாகிய கலை; காவியக் கலை. தொலைவு இல் தூணிகள் — எடுக்க எடுக்கக் குறையாத அம்பறாத் தூணிகள்.

103 ஆறுபுலன் அஞ்சினம் அரக்கரை யெனச்சென்று
ஏறுநெறி அந்தணர் இயம்பஉல கெல்லாம்
வேறுமெனும் நுங்கள்குலம் வேரொடு மடங்கக்
கோறுமென முந்தைஒரு சூளுறவு கொண்டார். 8

104 மாரருள ரேஇருவர் ஓருலகின் வாழ்வார்
வீரருள ரேஅவரை வில்லதனின் வெல்வார்
ஆரொருவர் அன்னவரை ஒப்பவர்கள் ஐயா
ஓரொருவ ரேஇறைவர் மூவரையும் ஒப்பார். 9

105 தராவலய நேமியுழ வன்தயர தப்பேர்ப்
பராவரு நலத்தொருவன் மைந்தர்பழி இல்லார்
விராவரு வனத்தவன் விளம்பஉறை கின்றார்
இராமனும் இலக்குவனும் என்பர்பெயர் என்றாள். 10

---

103. ஆறு புலன் — ஆறுகிய அறிவும். ஏறும் நெறி அந்தணர் — உயர்ந்த ஒழுக்க நெறியிலே நின்ற முனிவர். உலகெல்லாம் வேறும் எனும் நுங்கள் குலம்—உலகம் முழுவதையும் வெல்லுவோம் என்று அறைகூவித் திரிகின்ற உங்கள் குலத்தை: உள் மனத்தின் சேட்டையால் 'எங்கள் குலம்' என்னுது 'நுங்கள் குலம்' என்று அவள் இராமன் கட்சியினள் என்று பிறர் கருதும்படி, தன்னுணர்வின்றியே கூறினாள். வேரொடும் அடங்கக் கோறும் என—மறுபடி கிளைப்பதற்கு இடமின்றி ஒருவரையும் தப்பவிடாமற் கொல்லுவோம் என்று. முந்தை—முன்பு. ஒரு சூளுறவு கொண்டார்—ஒரு சபதஞ் செய்துள்ளார்கள்.

104. மாரர் உளரே இருவர்—உருவிலியாகிய மன்மதன் ஒருவனையன்றி இருவர் இருக்கின்றார்களோ? ஓர் உலகில் வாழ்வார் — அவ்விருவர் தாமும் ஒருங்கு வாழ்பவராக உளரோ? அங்ஙனம் இருவர் ஒருலகில் வாழ்பவர் உளரெனின் மேனியழகளவில் இவருக்கு ஒப்பாகக் கூறத்தகுவர். வீரர் உளரே அவரை வில் அதனின் வெல்வார்—வில் வித்தையில் அவர்களை விஞ்சிய வீரர் இருக்கின்றார்களோ? அப்படி இருந்தால் வடிவில் ஒவ்வாவிடினும் வீரத்திற்கு ஒப்பாகக் கூறத்தக்கவராவர். ஆர் ஒருவர் அன்னவரை ஒப்பவர்கள்—அழகு, வீரம் இவற்றிற்குத் தனித்தனியே ஒப்பாரில்லையான பின்பு அவர்களை முழுவதும் ஒப்பவர் இருக்கமுடியுமோ? ஐயா—அண்ணுவோ! என்று விளியாது, இப்பொழுது 'ஐயா!' என விளிக்கின்றாள்: 'நுங்கள் குலம்' என்ற பொழுதே தன்னை வேருகக் கருதிய தன்மை இன்னும் பின்னுட்டுதலால். அவர்களுக்கு மும்மூர்த்திகளுள் ஒப்பாவார் இல்லையோவெனில் அவர்கள் ஒவ்வொருவரே மூவரையும் ஒரு சேர நிகர்வர்; ஆதலால் அவர்களும் ஒப்பாகார்.

105. தராவலயம் நேமி உழவன்—பூமண்டலம் முழுவதும் தன் ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தியவன். தயரதன் என்னும் பெயரையுடைய புகழ்தற்கரிய நற்குணத்தையுடைய ஒருவனுக்கு மைந்தர். பழி—குற்றம். விராவு அரு—சேர்தற்கு அரிய.

106 மருந்தனைய தங்கைமணி நாசிவடி வாளால்
அரிந்தவரு மானுடர் அரிந்துமுயிர் வாழ்வார்
விருந்தனைய வாளொடும் விழித்திறையும் வெள்காது
இருந்தனன் இராவணனும் இன்னுயிர்கொ டின்னும். 11

107 கொற்றமது முற்றிவலி யாலரசு கொண்டேன்
உற்றபயன் மற்றிதுஒல் காவுரை யிறந்தேன்
முற்றவுல கத்துமுதல் வீரர்முடி எல்லாம்
அற்றபொழு தத்திது பொருந்துமென லாமே. 12

108 மூளுமுள தாயபழி என்வயின் முடிந்தோர்
ஆளுமுள வாமவர தாருயிரு முண்டாம்
வாளுமுள வோதவிட முண்டவன் வழங்கும்
நாளுமுள தோளுமுள நானுமுள னன்றே. 13

109 என்றுரை செயாநகை செயாஎரி விழிப்பான்
வன்றுணை யிலாவிருவர் மானுடரை வாளாற்
கொன்றிலர்க ளாநெடிய குன்றுடைய கானிற்
நின்றகர னேமுதலி னோர்நிருதர் என்றான். 14

---

106. மருந்தனைய தங்கை—மூவர் ஆண் மக்களுக்கிடையின் அருமையாகத் தோன்றியவள். மணி நாசி—அழகிய மூக்கை. விருந்து அனைய வாள்—புதுமையின் வடிவு போன்ற வாள்; உறை கழற்றித் தொழிற்படாத வாள். விழித்து—மூக்கறுபட்ட கோலத்தைப் பார்த்துக் கொண்டு. இருந்தனன்—இருக்கின்றான்: கால வழுவமைதி.

107. கொண்டேன்—கொண்டவனாகிய யான். உற்ற பயன் இது கொல். ஒல்கா உரை இறந்தேன்—நீங்காத புகழை இழந்தேன். பொழுது—பொழுதிலே. இது பொருந்தும் எனலாமே—இந்த ஒல்கா உரை மறுபடி பொருந்து மென்று கூற முடியுமோ? அறுப்புண்ட மூக்கு மறுபடி பொருந்தினும் இது பொருந்துமோ?.

108. மூளும் பழி—வர வர வளரும் பழி. உளதாய பழி—நீங்காப்பழி. ஆளும் உளவாம்—மனிதரும் உயிரோடிருக்கின்றார்களாம். ஓத விடம் உண்டவன்—பாற் கடலிலே தோன்றிய விடத்தையுண்ட சிவ பெருமான். வழங்கும் நாளும் உள—வழங்கிய முக் கோடி வாழ்நாளும் உள்ளன.

109. எரி விழிப்பான் — நெருப்பைப்போற் பார்ப்பவனாகிய இராவணன்.

## வேறு

110 அற்றவ னுரைத்த லோடும் அழுதிழி அருவிக் கண்ணள்
எற்றிய வயிற்றள் பாரி னிடைவிழுந் தேங்கு கின்றாள்
சுற்றமுந் தொலைந்த தைய நொய்தெனச் சுமந்த கையள்
உற்றது தெரியும் வண்ணம் ஒருவகை யுரைக்க லுற்றாள். 15

111 சொல்லென்றன் வாயிற் கேட்டார் தொடர்ந்தெழு சேனை யோடுங்
கல்லென்ற ஒலியிற் சென்றார் கரன்முதற் காளை வீரர்
எல்லொன்று கமலச் செங்கண் இராமனென் றிசைத்த ஏந்தல்
வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணில் என்றாள். 16

112 தாருடைத் தானை யோடுந் தம்பியர் தமியன் செய்த
போரிடை மடிந்தா ரென்ற உரைசெவி புகாத முன்னங்
காரிடை உருமின் மாரி கனலொடு பிறக்கு மாபோல்
நீரொடு நெருப்புக் கான்ற நிறைநெடுங் கண்கள் எல்லாம். 17

---

110. அற்று—அத்தன்மையான மொழியை. அழுது இழி அருவிக் கண்ணள்—அழுதலாற் பெருகி இழிகின்ற அருவிபோல நீர் பாயுங் கண்ணினளாகி. எற்றிய—அடித்த. பாரினிடை விழுந்து ஏங்குகின்றாள்—பூமியின் கண்ணே விழுந்து அழுகின்றவளாகிய சூர்ப்பநகை. 'சுற்றமும் தொலைந்தது; ஐயனே! அதுவும் மிக விரைவில்' என்று கூறி. சுமந்த கையள்—'தலையின் மேல் வைத்த கையளாய்'. உற்றது—நடந்தது. உற்றது ஒரு வகை தெரியும்வண்ணம் உரைக்கலுற்றாள்.

111. கரன் முதலியோர் அழிவை நினைத்து அழுதனளாயினும் போர் நிகழ்ச்சியை வருணிக்கும்பொழுது, துக்கத்தைக் காட்டிலும் இராமபிரான் அழகிலும் வீரத்திறலிலும் அவள் கொண்ட ஈடுபாடு அதிகம் வெளிப்பட்டது. நேரிற் கண்டாற் போன்ற உணர்ச்சி தோன்றக் கூறுகின்றாள். எல் ஒன்று—ஒளி பொருந்திய. ஏந்தல்—பெருமையிற் சிறந்தவன்.

112. தாருடைத்.........மடிந்தார்--அவள் கூற்றில் அமைந்த வருணனை நயங்கள் ஒன்றையும் அவன் கவனிக்கவில்லை; தனக்கு வேண்டியதைமட்டும் உட் கொண்டான்: அதாவது இராமன் தனியே புரிந்த போரில் கரன் வெற்றிச் சேனையுடன் மாண்டான் என்பது. காரிடை உருமின் மாரி கனலோடு பிறக்குமாபோல்—மேகத்தின்கண் இடியோடு கூடிய மழை நெருப்புடனே தோன்றுவதுபோல. நீரொடு நெருப்புக் கான்ற—கண்ணீரோடு நெருப்பையுஞ் சொரிந்தன. சோகமும் கோபமும் ஒருங்கு அடைந்தான்.

113 ஆயிடை எழுந்த சீற்றத் தழுந்திய துன்பம் ஆழித்
தீயிடை உகுக்கு நெய்யிற் சீற்றத்திற்கு ஊற்றஞ் செய்ய
நீயிடை இழைத்த குற்றம் என்னைகொல் நின்னை இன்னே
வாயிடை இதழும் மூக்கும் வலிந்தவர் கொய்ய என்றான். 18

114 என்வயின் உற்ற குற்றம் யாவர்க்கும் எழுதொணாத
தன்மையன் இராமனோடும் தாமரை தவிரப் போந்தாள்
மின்வயின் மருங்குல் கொண்டாள் வேய்வயின் மென்றோள் கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள் பொருட்டினாற் புகுந்த தென்றாள். 19

115 ஆரவள் என்னலோடும் அரக்கியும் ஐய ஆழ்ந்து
தேரவள் திரண்ட கொங்கை செம்பொன்செய் குலிகச் செப்பு
பாரவள் பாதந் தீண்டப் பாக்கியம் படைத்த தம்மா
பேரவள் சீதை யென்று வடிவெலாம் பேச லுற்றாள். 20

---

113. ஆழ்துயரத்தால் அதிகரித்த கோபம் சூர்ப்பநகைமீது செல்ல, அந்நிலையில் அவளை வினவுகின்றான். அப்பொழுது ஓங்கி நின்ற கோபத்தினாற் கீழே அழுத்தப்பட்ட துயரம் வடவாமுகாக்கினியில் நெய் சொரிந்தாற் போன்று சீற்றத்திற்கு வலிமையை அளித்தலாலே. நீ இடை இழைத்த குற்றம்—நீ அவர்கள் மாட்டுச் செய்த குற்றம்.

114. இவ்வளவு கோபத்திற்கும் சிறிதும் அசையாத சூர்ப்பநகை தன் இயற்கைப்படியே மெய் போன்ற பொய்யை அஞ்சாமற் கூறுகின்றாள். என் வயின் உற்ற குற்றம்—யான் உண்மையில் ஒரு குற்றமும் செய்திலேன்; நன்மை கருதிச் செய்த ஒன்று குற்றமாக நேர்பட்டது. அஃது என்னையோ எனின்:— யாவர்க்கும் எழுதொணாத தன்மையன் இராமனோடும்—சீதாபிராட்டியைப்பற்றிக் கூறுமுன் இராமன் அழகில் ஈடுபடுகின்றாள். இருவரையுஞ் சேரக் கண்ட காட்சி அகக்கண்முன் எழுதலாலே. பின்பு தொடங்கிய விஷயத்தில் இழிகின்றாள். தான் இனி விரிவாகக் கூறப் போகும் பொருளையெல்லாம் ஒரு சில சொற்களிலே தொகுத்துக் கூறுகின்றாள். தவிர—நீங்க. மின் வயின்—மின்னலினிடம். வேய்—மூங்கில். இராமனோடும் போந்த இத் தகைய அழகுள்ளவள் காரணமாக என்மீது குற்றம் வந்துற்றது என்றாள்.

115. அவளை இன்னள் என்று அறியும் ஆவல் தலையெடுப்பக் கோபம் ஒருபுறம் ஒதுங்கப்பெற்ற இராவணன் தன் மனநிலையை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளாமல் பெருமித நடையில் 'ஆர் அவள்!' என்று வினவ. தன்னுடைய பேச்சு அவனுடைய மனத்தை வேதித்தமையை அறிந்தவள் தான் ஏற்கனவே திட்டம் போட்டபடி தன் விரிவுரையைத் தொடங்கி விட்டாள். 'நான் கூறுவதை ஆழ்ந்து தேர்; இப் பூமியும் அவள் பாதம் தீண்டும் பேறு பெற்றது ஓர் ஆச்சரியம். அவள் பெயர் சீதை' என்று பீடிகையிட்டு அவளது அழகை யெல்லாம் பேசலுற்றாள்.

116 காமர முரலும் பாடல் கள்ளெனக் கனிந்த இன்சொல்
தேமலர் நிரந்த கூந்தல் தேவர்க்கும் அணங்கா மென்னத்
தாமரை இருந்த தையல் சேடியாந் தரமு மல்லள்
யாமுரை வழங்கு மென்பது ஏழைமைப் பால தன்றே. 21

117 மஞ்சொக்கும் அளக ஓதி மழையொக்கும் வடித்த கூந்தல்
பஞ்சொக்கும் அடிகள் செய்ய பவளத்தின் விரல்கள் ஐய
அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவள் வதனம் மைதீர்
கஞ்சத்தின் அளவிற் றேனும் கடலினும் பெரிய கண்கள். 22

118 ஈசனுர் கண்ணின் வெந்தான் என்னுமி திழுதைச் சொல்லிவ்
வாசநா றோதி யாளைக் கண்டனன் வல்ல வாற்றாற்

---

116. காமரம் முரலும் பாடல்—வண்டுகள் இசைக்கும் பாடல் போலவும். கள் என—தேன் போலவும். தேம் மலர் நிரந்த கூந்தல்—வாசனை பொருந்திய மலர்கள் நிறைந்த கூந்தல். தேவர்-தேவலோகத்துப் பெண்கள். அணங்கு ஆம் என்ன—கொண்டாடத்தகும் தேவ மாதாம் இவள் என்று கூறும்படி. தரம்—தகுதி. உரை வழங்கும் என்பது—விரித்துக் கூறுவோம் என்பது. ஏழைமைப் பாலது அன்றே—அறியாமையின் பாற்பட்டதல்லவா?

117. அளக ஓதி மஞ்சு ஒக்கும்—சுருட்டி முடிக்கப்பட்ட தலைமயிர் மேகத்தைப் போன்றது. வடித்த கூந்தல் மழை ஒக்கும்—அவிழ்த்துவிடப் பட்ட கூந்தல் மழையைப் போலும். அடிகள் பஞ்சு ஒக்கும். செய்ய பவளத்தின் விரல்கள்—சிவந்த பவளத்தின் அழகினையுடையன விரல்கள். அம் சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவள்—அழகிய சொற்களை அமுதினின்றும் வாரிக்கொண்ட அவளது. வதனம் மைதீர் கஞ்சத்தின் அளவிற்றேனும் கண்கள் கடலினும் பெரிய—முகம் பனிக்குத் தேம்புதல் முதலிய குறைபாடில்லாத தாமரைமலரின் அளவினையுடையதாயினும் மாநிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்கள் கடலினைவிடப் பெரியனவாய் அழகு முடியக் காண முடியாதன.

118. இழுதைச் சொல்—பொய்வார்த்தை. கண்டனன்—கண்டு. வல்ல ஆற்றால் பேசலாம் தகைமைத்து அல்லாப் பெரும் பிணி — பேசவல்லவர் தமக்கு இயைந்த திறங்களாற் பேசி முடிக்க இயலாத காதல் நோய். பிணிப்ப—வேறொன்றிலே மனத்தைச் செல்லவிடாது வருத்தலாலே. நீண்ட ஆசையால்—அளவுக்கு விஞ்சிப் பெருகிய ஆசையாலே. அழிந்து தேய்ந்தான்—மனமழிந்து முடிவில் உடலும் முற்றுந் தேயப்பெற்றான். அனங்கன்—அப்படித் தேய்ந்தபடியினாலே அனங்கனாயினான். அம்மா—உண்மை இது

பேசலாந் தகைமைத் தல்லாப் பெரும்பிணி பிணிப்ப நீண்ட
ஆசையால் அழிந்து தேய்ந்தான் அனங்கனவ் வுருவம்
அம்மா. 23

119 தெவ்வுல கத்துங் காண்டி சிரத்தினிற் பணத்தி னோர்கள்
அவ்வுல கத்துங் காண்டி அலைகடல் உலகிற் காண்டி
வெவ்வுலை யுற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள்
இவ்வுல கத்தார் அங்கம் யாவர்க்கும் எழுதொ ணாதாள். 24

120 தோளையே சொல்லு கேனோ சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ வல்லவை வழுத்து கேனோ
மீளவும் திகைப்ப தல்லால் தனித்தனி விளம்ப லாற்றேன்
நாளையே காண்டி யன்றே நானுனக் குரைப்ப தென்னோ. 25

---

வாக நெற்றிக்கண்ணால் வென்றான் என்று உலகினர் கூறுவது என்ன நூதனம்!

119. தெவ் உலகம்—அரக்கருக்குப் பகைவராகிய தேவர் உலகம். சிரத்தினில் பணத்தினோர்கள் அவ்வுலகம்—தலையிலே படத்தையுடைய நாகர் வாழும் உலகம். அலை கடல் உலகம்—மண்ணுலகம். மூன்று உலகினும் இவளை ஒப்பவரைக் காணாய். வெவ் உலை உற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள்—வெப்பம் பொருந்திய கொல்லன் உலையை யடைந்த வேலையும் வாளையும் வென்ற கண்ணாள். முன்பு ‘கொல்லும் வேலும் கூற்றமும் என்னு மிவையெல்லாம் வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழிகொண்டாள்.’ இப்பொழுது அவற்றை யெல்லாம் வென்று விட்டாள். அங்கம் யாவர்க்கும் எழுதொணாதாள் — ‘மதனற்கும் எழுத ஒண்ணாச் சீதை’ (மிதிலைக் காட்சிப் படலம்: 4.)

120. எழுத வொண்ணாதது போலவே அவளது அழகு பேசவும் ஒண்ணாதது என்கின்றாள்; அப்படிக் கூறுமுகத்தான் நாளையே போய்ப் பார்க்கும்படி தூண்டுகின்றாள். தன் அகக்கண் முன்னே தோன்றிய பிராட்டியின் உருவத்தைப் பார்த்தபடி இராவணனிடம் பேசுகின்றாள். என் கண் முன்னே தோன்றுகின்ற வேய்வயிற் கொண்ட மென்றோள் அழகையே முதலிற் கூறுவேனோ! அன்றி அத்தோளழகைக் கூறத்தொடங்குதலும் குறுக்கிட்டு வாள்விசினாற் போல அத்தோளழகினிடையே அலையெறிகின்ற ஒளிபொருந்திய கண்ணின் அழகைப் பேசுவேனோ? இப்படி அதைவிட்டுக் கண்ணழகைக் கூறப்புக்கால் ஏனைய உறுப்புக்கள் தோன்றி நிற்றலாலே அவற்றைப் பேசுவேனோ? இப்படி மீண்டும் மீண்டும் எங்கே தொடங்குவதென்று திகைப்பதல்லால், ஒவ்வொன்றாகப் பேசி முடிக்கும் ஆற்றல் இல்லேன். ஆதலால் நீயே நாளையதினமே போய்ப் பார்த்து அறிவாயாக. இவ்வளவும் கேட்ட நீ அவளைக் காணுமலிராய்; அப்படியான உனக்கு நான் சொல்லவும் வேண்டுமோ?

121 வில்லொக்கும் நுதலென் றாலும் வேலொக்கும் விழியென்
றாலும்
பல்லொக்கும் முத்தென் றாலும் பவளத்தை இதழென் றாலும்
சொல்லொக்கும் பொருளொவ் வாவால் சொல்லலாம்
உவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் றாலும் நேருரைத் தாக வற்றே. 26

122 இந்திரன் சசியைப் பெற்றான் இருமூன்று வதனத் தோன்தன்
தந்தையும் உமையைப் பெற்றான் தாமரைச் செங்க ணானும்
செந்திரு மகளைப் பெற்றான் சீதையைப் பெற்றாய் நீயும்
அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கில்லை உனக்கே
ஐயா. 27

---

121. அவளுடைய அழகு உவமானமில்லாதது என்று கூறுகின்றாள். சொல் ஒக்கும்—சொல்லளவில் ஒக்கும்: உவமானம், உவமேயம் இவை கிடத்தல் பற்றி. பொருள் ஒவ்வா—அச் சொல்லாற் கூறப்பட்ட வில், வேல், முத்து, பவளம் முதலிய பொருள்கள் உவமிக்கப்படும் நுதல், கண், பல், இதழ் முதலியவற்றிற்கு நேர் ஆகா; ஆகவே 'வில் ஒக்கும் நுதல்' என்பன போன்ற உவமைகள் 'நெல் ஒக்கும் புல்' என்று கூறுவது போன்று நகைப்பிற்கு இடமாகுமே யன்றி எடுத்துக் கழிக்கவும் உரியன அல்ல.

122. தான் பேசும் பொழுதே இராவணன் மனநிலையை ஒற்றி யுணருகின்ற சூர்ப்பநகை நாளை அவன் சீதையைக் காண்பது நிச்சயம்; கண்டால் அவளைப் பெருமலிரான் என்று அவன் காண்கின்ற கற்பனைக் கனவை உட்கொண்டு, அவளைப் பெறும் எண்ணம் வேர்க்கொள்ளும்படி, அவளைப் பெற்ற பின் அடையப் போகும் தனிச் சிறப்பையும் பேசுகின்றாள். அங்ஙனம் பேசுமிடத்து அரக்கியின் உள்ளத்தின் ஆழத்திற் கிடந்த பழைய வெறுப்புக் காரணமாக அமங்கலஞ் சுட்டிய எதிர்மறைப் பொருள் அவள் கூற்றில் தன்னுணர்ச்சியின்றித் தானாகவே வந்து பொருந்துகின்றது. அடுத்த இரண்டு செய்யுள்களிலும் இங்ஙனம் உள்மனம் எதிர்மறை அமங்கலப் பொருளைப் புகுத்துவது காண்க.

பெற்றாய் — நாளையே காண்பாய்; கண்டாற் பெறுவது நிச்சயம்; ஆதலால் பெற்றாய். அந்தரம்—வித்தியாசம்: அம் தரம்—அழகிய உயர்வு. நன்மை—சுகம்: மேன்மை, அவர்க்கு இல்லை. உனக்கே—முழுவதும் உனக்கே. அமங்கலப் பொருள் —அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கு; இல்லை உனக்கு: இதுவே மெய்ம்மையாக நிகழப்போவதாகும்; ஐயமில்லை.

123 பாகத்தில் ஒருவன் வைத்தான் பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான் அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தின் மின்னை முன்னே வென்றநுண் ணிடையை நீயும்
மாகத்தோள் வீர பெற்றால் எங்ஙனம் வைத்து வாழ்தி. 28

124 பிள்ளைபோற் பேச்சினாளைப் பெற்றபின் பிழைக்க லாற்றாய்
கொள்ளைபோ கின்ற செல்வம் அவளுக்கே கொடுத்தி ஐய
வள்ளலே உனக்கு நல்லேன் மற்றுநின் மனையில் வாழும்
கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாம் கேடுசூழ் கின்றே
னன்றே. 29

125 மீன்கொண்டு டாடும் வேலை மேகலை உலக மேத்தத்
தேன்கொண்டு டாடுங் கூந்தற் சிற்றிடைச் சீதை என்னும்

---

123. ஆகம் — மார்பு. அந்தணன் — பிரமன். நுண்ணிடை — சீதா பிராட்டி. மாகத் தோள்—ஆகாயத்தை அளாவும்படி பருத்த தோள்; 'சீதையைப் பெற்றாய்' என்பது முதலியவற்றைக் கேட்டபொழுதைய கிளர்ச்சியைக் கண்டு இங்ஙனம் விளித்தாள். எங்ஙனம் வைத்து வாழ்தி—1. எந்த இடத்தில் வைத்து வாழப் போகின்றாய்? தோளில் வைத்து வாழ்வாயோ? அன்றித் தலையிலே சுமந்து திரிவாயோ? என்பது குறிப்பு: 2. உனக்குக் கெடு காலம் கிட்டியபடியால் அவளைப் பெற்றால் நீ உயிர் வாழாய்; நீ இறந்துபடுவது ஒருதலை.

124. பிழைக்கலாற்றாய்—1. அவள் மனங் கோணும்படி பிழைசெய்ய இடங்கொடாய்: 2. இவளைப் பெற்ற பின் நீ உயிரோடு தப்பியிருக்கமாட்டாய். கொள்ளை போகின்ற செல்வம்—உனது பெரிய செல்வத்தையெல்லாம். அவளுக்கே கொடுத்தி—1. அவள் காலடியிலேயே இட்டு வைப்பாய். 2. அவளால் உன் செல்வம் முழுவதையும் இழக்கப்போகின்றாய். உனக்கு நல்லேன்—1, நீ உகக்கும் உதவி செய்தலால் நீ என்னைக் கொண்டாடுவாய். 2. இராமன் அம்பால் மோக்கமடையும் உனக்கு நன்மையே செய்தவளாவேன். நின் கிள்ளை போன் மொழியார்க் கெல்லாம் கேடு சூழ்கின்றேன் அன்றே—1. உனது மனைவிமாரைக் கண்ணெடுத்தும் பாராயாதலால் அவர்களுக்கு நான் கேடு சூழ்பவளாகின்றேனே! 2. நின்.........சூழ்கின்றேன்; நன்றே—ஆனால் உன் மனைவிமார் நூலிழப்பர்; அவர்களுக்குக் கேடு செய்தவளாகின்றேன். என்னை நீ அமங்கலியாக்கினமைக்கு அது நல்ல தண்டனையாகுமல்லவா?.

195. ஊடாடும்—நடமாடும். வேலை மேகலை—கடலாகிய மேகலையையுடைய. ஊடாடு—பழகுவாயாக. ஊடாடும் வண்ணம்—விளையாடும்படி.

மான்கொண்டு டாடு நீயுன் வாள்வலி உலகங் காண
யான்கொண்டு டாடும் வண்ணம் இராமனைத் தருதி
என்பால். 30

126 தருவது விதியே யென்றால் தவம்பெரி துடைய ரேனும்
வருவது வருநா ளன்றி வந்துகை கூட வற்றோ
ஒருபது முகமுங் கண்ணும் உருவமும் மார்புந் தோள்கள்
இருபதும் பெற்ற செல்வம் எய்துவது இனிநீ எந்தாய். 31

127 இன்னவள் தன்னை உன்பால் உய்ப்பலென் றெடுக்க லுற்ற
என்னையவ் விராமன் தம்பி இடைபுகுந் திலங்கு வாளான்
முன்னைமூக் கரிந்து விட்டான் முடிந்ததென் வாழ்வும்
உன்னின்
சொன்னபின் உயிரை நீப்பான் துணிந்தனன் என்னச்
சொன்னாள். 32

---

வாள் வலியாற் போர் செய்து கைப்பற்றிச் சீதையை அவன் வைத்துக் கொண்டு இராமனைத் தனக்களிக்கும்படி கூறுகின்றாள்.

126. எய்துவது இனி—அடைவதும் இனிமேல்தான். இவளை நீ பெறு விட்டாற் பயனில்லை.

127. இவ்வளவும் வழிவிலகிப் பேசி, இராவணன் மனத்தைப் பேதித்த பின், முன்பு அவன் கேட்ட வினவிற்கு விடை கூறுகின்றான். இடை புகுந்து—குறுக்கே வந்து. முன்னை—முதலில். மூக்கரிந்தான்: பின்பு காது முதலிய வற்றையும் அறுத்தான்.

---

## 31. இருவர் கண்ட உருவெளித் தோற்றம்.

சீதாபிராட்டியைப் பற்றித் தன் தங்கை கூறியதைக்கேட்ட இராவணன் எல்லாவற்றையும் மறந்தான்; கேட்ட நங்கையை மட்டும் மறந்திலன். விரகதாபம் மேலிட அது தணியப் பற்பல உபாயம் நாடியும் பலியாமையால் இருளைத் தருக என, இருள் வந்தடர்ந்தது. அவ்விருளில் முன்பு ஒருபொழுதுங்கண்டிராத பெண்ணுருவ மொன்றைக் கண்டு, அது உருவெளித் தோற்றம் என்றுணரமாட்டாது, தன்மீது அன்புள்ள தங்கை அப்பெண்ணைத் தேடிக்கொணர்ந்தனள் என்று அறிவின் கலக்கத்தினாலே எண்ணிச் சூர்ப்பநகையை வரவழைத்து விசாரித்தான். இந்நிகழ்ச்சியே இப்பகுதியிற் கூறப்படும் பொருளாகும்.

தன்முன்னே வந்து நின்ற அரக்கியை நோக்கி, "இவள் தானோ இயம்பிய சீதை?" என்று கேட்டான். இராமனது உருவத்தைக் காண்கின்ற அரக்கி, "இவன்தான் அவ்வல்வில் இராமன்" என்றாள். அதிசயம் மேலிட்ட அரக்கன் "நான் கண்டது ஒரு பெண்ணுரு; நீ கண்டது ஓர் ஆணுரு; மனிதர்களே எங்களை மாயை விளைக்க வல்லவராயினரோ?" என்று வினவ, தன்முயற்சி நன்கு பலித்த உவகை மேலிட்ட அரக்கி, தன்னை மறந்து, உருவெளித் தோற்றத்தின் பண்பினைத் தெளிவுறக் கூறலானாள். அதைக் கேட்ட இராவணன், "அது சரி; நீ அவ்விராமனைக் காண்பது என்னே?" என்று இயம்பினான். பின்விளைவை ஆராயாமற் பேசிய அரக்கி, முன்பு தன் காதலை வெளிப்படையாகக் கூறியவள், தான் எதிர்பாராது அகப்பட்டுக் கொண்டநிலையில், அப்பொழுது அதனை வெளிப்படையாகக் கூறின் கள்ளம் வெளிப்பட்டுக் கருமம் பிழைக்கக்கூடு மென்றுன்னி, சமத்காரமாக மெய்போலும் பொய்ம்மொழி கூறி, ஒருவாறு சமாளித்துக்கொண்டாள். பின்பு "வினையேற்கு என்விடிவாகும்?" என்று கேட்ட இராவணனுக்கு, "நீ குறைகின்ற தென்னே; அவளை வௌவுதி போதி" என்று சீதாபிராட்டியைக் களவாக எடுத்துவரும்படி ஊக்கிவிட்டாள்.

இப்பகுதியில் நகைச் சுவையும் நாடக விகற்பமும் வந்துள்ளமை வெளிப்படை.

[தே. ப:— மாரீசன் வதைப்படலம் : 145—153.]

128 பண்டேயுல கேழினும் உள்ள படைக்க லுரைக்
கண்டேனிவர் போல்வதோர் பெண்ணுருக் கண்டி லேனால்
உண்டேயெனின் வேறினி எங்கை உணர்த்தி நின்ற
வண்டேறு கோதை மடவாரிவ ராகு மன்றே. 1

129 பூண்டிப்பிணி யானுறு கின்றது தான்பொ ருடாள்
தேண்டிக்கோடு வந்தனள் செய்வதோர் மாறு முண்டோ

128. இனி வேறு உண்டே எனில்—இனி வேறொரு பெண் வடிவம் உண்டெனின். எங்கை—என் தங்கை. வண்டு ஏறு—வண்டு மொய்த்த.

129. பூண்டு — கொண்டு. யான் இப்பிணி பூண்டு உறுகின்றது. உறுகின்றது —உறுகின்ற துன்பத்தை. பொருள்—பொருளாகி. தேண்டிக்

காண்டற்கினி யாளுருக் கண்டவட் கேட்கு மாற்ருல்
ஈண்டிப்பொழு தேவிரைந் தெங்கையைக் கூவு கென்ருன். 2

130 என்ருனென லுங்கடி தேகினர் கூவு மெல்லை
வன்ருணிரு தக்குலம் வேரற மாய்த்தல் செய்வாள்
ஒன்ருத காமக் கனலுட்டெற லோடு நாசி
பொன்ருழ்குழை தன்னெடும் போக்கினள் போய்ப்பு
குந்தாள். 3

131 பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள்புகுந் தாளை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வா ளவன்நேருற நோக்கு நங்காய்
மைந்நின்ற வாட்கண் மயில்நின்றென வந்தென் முன்னர்
இந்நின்றவ ளாங்கொல் இயம்பிய சீதை என்ருன். 4

132 செந்தாமரைக் கண்ணெடுஞ் செங்கனி வாயி னேடும்
சந்நார்தடந் தோளொடுந் தாழ்தடக் கைக ளோடும்
அந்தாரக லத்தொடும் அஞ்சனக் குன்ற மென்ன
வந்தானிவ னுகுமவ் வல்வில் இராமன் என்ருள். 5

---

கொடு வந்தனள் — தேடிக்கொண்டு வந்தனள். ஓர் மாறும் உண்டோ— செய்வதொரு கைம்மாறும் உளதோ? காண்டற்கு இனியாள் உருக்கண்ட வள்—அவளுருவத்தை நேரே முன்னங் கண்டவளாகிய என் தங்கையை. கேட்கும் ஆற்ருல்—கேட்டு ஐயந்திரும்படி. எங்கையை ஈண்டு இப்பொழுதே விரைந்து கூவுக— இவ்விடத்தே வரும்படி கூவுக; இப்பொழுதே கூவுக: விரைந்து வரும்படி கூவுக.

130. கூவும் எல்லை — கூவின அளவிலே. வன் தாழ் நிருதக்குலம்— வலிமை படைத்த, ஆனுல் ஒழுக்கத்திலே தாழ்ந்த அரக்கர் குலத்தை. ஒன்ருத காமக்கனல் உள் தெறலோடு—பொருந்தாத காமாக்கினி உள்ளுள்ளே இருந்து சுடுதலோடு (போனுள்.)

131. பொய்ந்நின்ற நெஞ்சில் கொடியாள் — அவள் புகுந்து நின்ற போதைய நிலைமை. நேருற நோக்கு—இங்கே நேராகப் பார். வாள்கண்— வாள்போன்ற கண். இந்நின்றவள்—இதோ நின்றவள்.

132. சூர்ப்பநகை அவன் குறிப்பிட்ட இடத்தை நோக்கவும் இல்லை; சற்று யோசிக்கவும் இல்லை. தானும் காணப்புக்க உருவத்தை வருணிக்கத் தொடங்கிவிட்டாள். அவளது உள்ளக்கிளர்ச்சி பாட்டின் ஓசையில் வெளிப் படும்படி கூறுகின்ருள். செங்கனி வாய்—சிவந்த கொவ்வைப் பழம் போன்ற வாய். சந்து ஆர்—அழகு பொருந்திய. அம் தார் அகலம்—அழகிய மாலை யணிந்த மார்பு.

133 பெண்பாலுரு நானிது கண்டது பேதை நீகண்டு
எண்பாலு மிலாததோர் ஆணுரு என்றி என்னே
கண்பாலுறு மாயை கவற்றுதல் கற்ற நம்மை
மண்பாலவ ரேகொல் விளைப்பவர் மாயை என்றான். 6

134 ஊன்றும் உணர்வு அப்புறம் ஒன்றிலும் ஓடலின்றி
ஆன்றும் உளநாம் நெடிதாசை கனற்ற நின்றாய்க்கு
ஏன்றுன் எதிரே விழிநோக்கும் இடங்கள் தோறும்
தோன்றும் அனையாள் இதுதொன்னெறித் தாகும் என்றாள். 7

135 அன்னாளது கூற அரக்கனும் அன்ன தாக
நின்னாலவ் விராமனைக் காண்குறு நீரென் னென்றான்
எந்நாளவன் என்னை இத்திர்வரும் இன்னல் செய்தான்
அந்நாள்முதல் யானும் அயர்த்தில னாகும் என்றாள். 8

---

133. இது கண்டது—பெண்பாலுரு என்று பேசத் தொடங்கிய அளவில் உருவெளித்தோற்றம் கண் முன்னே எழ அதனை 'இது' என்றுசுட்டிக் காட்டுகின்றான். பேதை—மூடி! எண்பாலும்—எண்ணத்தின் பகுதியிலும்; நினைவிலும். என்னே—இப்படி இருவர் கண்டது வெவ்வேறு உருவமாகத் தோன்றக் காரணம் யாது? கண்பால் உறு மாயை—கண்ணிடத்துற்ற மாயச் செயலினாலே. கவற்றுதல்—வருத்துதல்; மயக்குதல்.

134. தன்னுடைய நிலைமையை முற்றும் மறந்து தான் விரும்பியபடியே காரியம் பலித்த உவகையினால் உருவெளித் தோற்றத்தின் தத்துவத்தை விரிக்கலுற்றாள். ஊன்றும் உணர்வு—நன்கு ஆழமாகப் பதிந்த அறிவு. அப்புறம் ஒன்றிலும்—வேறு விஷயம் எதிலும். ஓடலின்றி—செல்லுதலின்றி. ஆன்றும்—மிகவும். ஆசை கனற்ற—ஆசை சுட. ஏன்று நோக்கும் இடம்—பொருந்திப் பார்க்கும் இடம். தொல் நெறித்தாகும்—பழைய முறைமை யாகும்.

135. தன் பேச்சினாலே தன்னை வெளிப்படுத்திக் கொண்ட பொய்ந் நின்ற நெஞ்சிற் கொடியாள் இராவணன் கேட்ட கேள்விக்குத் திரிபு விடை கூறிச் சமாளிக்கின்றாள். சொல்லளவில் மெய் போன்றதாயினும் பொருளள வில் பொய் கூறுகின்றாள். இத்திர்வரும் இன்னல் செய்தான்—நீக்கமுடியாத இத்துன்பத்தைச் செய்தான்; 1. மூக்கு முதலியன அறுத்தான் 2. வேட்கை நோய் செய்தான். அயர்த்திலன்—மறந்திலேன். ஆகும்—ஆசை.

136 ஆமாம நடுக்குமென் ஆக்கையொடு ஆவி நைய
வேமாலவினை யேற்கினி என்விடி வாகு மென்னக்
கோமானுல குக்கொரு நீகுறை கின்ற தென்னே
பூமான்குழ லாள்நனை வெளவுதி போதி என்றான். 9

---

136. ஆம் ஆம் அது அடுக்கும்—அவள் கூறியதை அவன் அப்படியே நம்பி ஏற்றுக் கொண்டான்; அவனும் பொய்ந்நின்ற நெஞ்சினனாகலாலே. இராமபிரானிடம் முன்பின் முரண்படப்பேசி அகப்பட்டவள் இராவணனை ஏமாற்றிவிட்டாள். நைய—மெலிய. விடிவு—நோய் தீரும் வகை. குறைகின்றது என்னே—இப்படிச் சிறுமையடைகின்றது என்ன ஆச்சரியம். பூ மான் குழலாள்—பூக்களை யணிந்த பெருமை பொருந்திய கூந்தலை யுடையவள். வெளவுதி-எடுத்து வருவாயாக. போதி-கால தாமதஞ் செய்யாமற் செல்வாய். 'விலக்குதி வீர'—என்று இராமபிரானிடம் கூறியது போலவே தட்டிக் கொடுத்துக் கூறுகின்றான். (ஆரணிய : 37.)

---

## 32. மாரீசன் அரக்கர்கோனுக்கு நன்மதி கூறியது.

சூர்ப்பநகை சொல்லிய உபாயத்தைக் கேட்ட இராவணன் வேறு சில வழிகளை மேற்கொண்டு முயன்றும் வெப்பம் தணியாமையால் தன் மந்திரிமார்களோடு ஆராய்ந்து பின்பு தன் மாமன் மாரீசனிடம் சென்றான். இருவருக்குமிடையே நடந்த பேச்சு முதலியவற்றைக் கூறுவது இப்பகுதி.

இப்பகுதியில் இராவணன் குணமும் மாரீசன் குணமும் நன்கு வெளிப்படுகின்றன. சூர்ப்பநகையின் அண்ணனாகிய இராவணன் அவளைப்போலவே பொய், வஞ்சனை முதலிய வற்றின் உதவியால் சிந்தையில் நினைத்த காரியத்தைச் செய்ய முயல்கின்றான். இராமபிரான் அம்பின் வலிமையை நேர்பட்டறிந்து இந்திய மடக்கித் தவநெறிமேற்கொண்டு ஒதுங்கி வாழ்பவனாகிய மாரீசன் இராவணன் வருதலைக் கண்டதும் அஞ்சி நடுங்கினான். வந்தவனை வந்த காரியம் என்னென வினவினான். இராவணன் தனக்கு நேர்ந்த அவமானத்தால் நெஞ்சம் உலர்ந்து, தனிவருந்துவதாகப் பாசாங்குசெய்து, "இப்பழி தீரும் பொருட்டுச் சீதையை வெளவ நின் துணைவேண்டி வந்தேன்" என்றான். அதுகேட்ட மாரீசன் முன்பு கொண்ட அச்சமகற்றிச் செற்றமனத்தோடு பல நன்மதிகளை எடுத்துக் கூறி அச்செயலை விடும்படி கெஞ்சினான். அவன் கூறிய காரணங்

களுக்கு ஏற்ற விடை கூறமாட்டாது இராவணன் கோபங் கொண்டு இனித் தன்னை அலட்சியம் செய்து பேசவேண்டாம் என்று எச்சரிக்கை செய்தான். இராவணன் கொண்ட கோபம் மாரீசன் கொண்ட கோபத்தை இன்னும் அதிகப்படுத்திற்று. மறுபடியும் அவன் கோபிப்பான் என்பதையும் பொருட்படுத் தாது இராமபிரான் வலிமை மிகுதியை எடுத்துக்காட்டி, "கெடு காலத்தினால் நீயே அழிவைத் தேடுகின்றாய்; இதனை விடுக" என்று இடித்துரைத்தான். அது கேட்ட இராவணன் கடுங் கோபங்கொண்டு அவனைப் பலவாறு ஏசி, இகழ்ந்துரைத்துத் தன் முழு அதிகாரத்தையுங் காட்டி, தாறுமாறுகப் பேசுவதை விட்டுத் தன் கட்டளைப்படி ஒழுகவேண்டும் என்றான். அதிகாரத்தின் அடிப்படையினின்றெழுந்த இராவணன் கடுஞ் சீற்றத்துக்கு முன்னால் அச்சத்தின் நிலைக்களத்தினின்றெழுந்த மாரீசன் செற்றம் தணியலாயிற்று. இருவரும் கோபம் துணையாகச் செய்த போராட்டத்தில் இராவணன் வென்றான்; மாரீசன் வாயடங்கினான். பின்பு வஞ்சனையால் ஒருவரை யொருவர் ஏமாற்ற முயன்றனர். இராவணன் தான் சீதையைக் களவாக எடுக்க எண்ணியமை கூறக்கேட்ட மாரீசன், "போரிலே வென்று அவளைப் பெறுதலே உன் வீரத்திற் குகந்தது" என்று சொன்னான். 'தேவியைத் தீண்டா முன்னம் இவன் தலை சரத்திற் சிந்திப் போம்வகை புணர்ப்பன்' என்று மாமன் கருதிக் கூறியதைக் கேட்ட இராவணன் சமத்காரமாக, "ஏனையர் இறக்கின் தானும் தமியளாய் இறக்கும்; ஆதலால் மாயையிற் கவர்வோம்" என்று சொல்லி மாரீசனைத் தப்பவிடாமல் அகப் படுத்தினான். வஞ்சனைப் போரிலும் மாரீசனே தோற்றான். விதி வலிது என்றெண்ணித் தான் செய்ய வேண்டுவது யாதென அவன் வினவ, அரக்கன், "நீ பொன்மானாகி, சீதையை ஆசைப் படும்படி செய்வாய்" என்ன, "அன்னது செய்வேன்" என்றான். இருவரும் வெவ்வேறு திசையிற் சென்றனர். அதிகார அடிப் படையைக் கொண்ட கோபம் வஞ்சனை, அச்சத்தினால் விளைந்த கோபம் வஞ்சனை, இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட போராட் டத்தை இராவணன் மாரீசன் இவர்களுக்கிடையே நிகழ்ந்த பேச்சின் வாயிலாக ஆசிரியர் இங்கே காட்டுகின்றார்.

[தே. ப:—மாரீசன் வதைப்படலம்: 169-178, 180-193, 196-209.]

137 வந்நமந் திரிய ரோடு மாசற மனத்தின் எண்ணிச்
சிந்தையில் நினைந்த செய்யுஞ் செய்கையன் தெளிவில்
நெஞ்சன்
அந்தரஞ் செல்வ நாண்டோர் விமானத்தில் ஆரு மின்றி
இந்திய மடக்கி நின்ற மாரீச னிருக்கை சேர்ந்தான். 1

138 இருந்தமா ரீசன் அந்த இராவணன் எய்த லோடும்
பொருந்திய பயத்தன் சிந்தை பொருமுற்று வெருவு கின்றான்
கருந்தட மலையன் னானை எதிர்கொண்டு கடன்கள் யாவுந்
திருந்திய செய்து செவ்வித் திருமுக நோக்கிச் செப்பும். 2

வேறு

139 சந்த மலர்த்தன் கற்பக நீழற் றலைவற்கும்
அந்தக னுக்கும் அஞ்ச அடுக்கும் அரசாள்வாய்
இந்த வனத்தென் இன்ன லிருக்கைக் கெளியோரின்
வந்த கருத்தென் சொல்லுதி என்றான் மருள்கின்றான். 3

140 ஆன தனைத்தும் ஆவி தரித்தேன் அயர்கின்றேன்
போனது பொற்பும் மேன்மையும் மற்றென் புகழோடும்

---

137. மாசு அற—குற்றமில்லாமல்; மந்திரிகளோடு கலந்து ஆராயாமை யாகிய குற்றம் இல்லாதிருக்கும்படி. மனத்தின் எண்ணி—அந்தரங்கமாக் கலந்தாலோசித்து. அப்படி யோசித்த பின் அவன் நிலைமை யாதெனின்:— சிந்தையில் நினைந்த செய்யும் செய்கையன்—தான் மனத்திலே எண்ணிய காரியம் பாவமும் பழியுமாயினும் அதனை நிறைவேற்ற முற்படும் பிடிவாத முடையவன். தெளிவு இல் நெஞ்சன்—காமவிடம் மேலிட்டதனால் குழம்பிய மனத்தையுடைய இராவணன். அந்தரம்—ஆகாயம். இந்தியம்—ஐம்பொறிகள்.

138. பொருந்திய பயத்தன்—தான் இருக்கும் தனியிடம் தேடி வந்த படியினால் ஏதோ ஆபத்து வரும் என்ற இயற்கை யுணர்வினால் ஏற்பட்ட அச்சத்தையுடையவன். (அதனால்): சிந்தை பொருமுற்று வெருவுகின்றான் —மனம் திடுக்கிட்டுக் கலங்குகின்றவன். கடன்கள்—உபசாரங்கள். திருந்திய- செவ்வையாக. செவ்வி—அழகு.

139. சந்தம்—அழகு. தலைவன்—இந்திரன். அந்தகன்—யமன். அடுக் கும் —பொருந்திய. இன்னல் இருக்கை—துன்பந்தருவதான இருப்பிடத்திற்கு. எளியோரின்—சாதாரண மனிதரைப் போலத் துணையுமின்றித் தமியையாக. மருள்கின்றான்—அச்சமுற்று மனம் பொருமிக் கலங்கியவன் இப்படிக் கேட் கும்பொழுதே அறிவு மயங்கினான்: அச்சம் வர வர வளரலாயிற்று.

140. இதுமுதல் நான்கு கவிகள் இராவணன் கூறிய விடை. ஆனது அனைத்தும்—வரக்கடவ துன்பம், அவமானம் எல்லாம் வந்துகழிந்தன; இனி

யான துனக்கின் றெங்ஙன் உரைக்கேன் இனிதென்னு
வானவ ருக்கும் நாண நடுக்கும் வசைமன்னே. 4

141 வன்மை தரித்தோர் மானுடர் மற்றங் கவர்வாளால்
நின்மரு கிக்கும் நாசி யிழக்கும் நிலைநேர்ந்தார்
என்மர புக்கும் நின்மர புக்கும் இதன்மேலோர்
புன்மை தெரிப்பின் வேறினி எற்றே புகல்வேலோய். 5

142 திருகு சினத்தார் முதிர மலைந்தார் சிறியோர்நாள்
பருகின ரென்றால் வென்ற நலத்தின் பழியன்றோ
இருகை சுமந்தாய் இனிதின் இருந்தாய் இகல்வேலுன்
மருகர் உலந்தார் ஒருவன் மலைந்தான் வரிவில்லால். 6

---

இவற்றிற்கு மேலாக வரக்கூடியது ஒன்றும் இல்லை. ஆவி தரித்தேன்—அரும் பாடுபட்டு உயிர்போகாதபடி தரித்துவைத்தேன். அயர்கின்றேன்—உயிர்ப் பாரந் தாங்கமுடியாது தளர்கின்றேன். காமவிடம் மேலிட வந்த தளர்ச்சியை அவமானந் தாங்காமல் வந்ததாகக் கூறி நடிக்கின்றான். என்ன நேர்ந்தது எனின்:— போனது பொற்பும், மேன்மையும் அற்று, என் புகழோடும்—என்னுடைய பொலிவு போயிற்று; மேன்மையும் போயிற்று; என் புகழும் அவற்றோடு போயினமையின் மறுபடி பெற இடமின்றி ஒவ்வொன்றும் போயிற்று. நடந்தது யாது எனின்:— இப்படியான துன்பத்தினால் வருந்துகின்ற யான் உனக்கு எப்படி இதைச் சொல்லுவேன்!, அந்த அவமானம் உனக்கும் உரியதாதலின் உனக்கு அதைக் கேட்கப் பொறுக்குமோ? அப்படி என்ன அவமானம் வந்துற்றது எனின்:— வானவருக்கும் நாணது அடுக்கும் வசை—(ஒரு சொல்லிலே கூறப்புகின்) எங்களுக்கு அஞ்சி மறைவிடந்தேடும் தேவர்களுக்கு நாணித் தலை குனியும்படியான பழியன்றோ வந்துவிட்டது.

141. இவ்வளவு பாயிரங் கூறி, சூர்ப்பநகை பங்கமுற்றதைக் கூறுகின்றான். ‘போனது பொற்பு’ என்பதன் விரி. வன்மை தரித்தோர்—மிகுந்த வலிமை பெற்றவர். மானுடர்—ஆனால் மனிதர். நின் மருகிக்கும்—‘என் தங்கை’ என்னாது ‘நின் மருகி’ என்று கூறுகின்றான் வஞ்சனையினால் மாரீசனையும் பேதிக்கும் பொருட்டு. நேர்ந்தார்—செய்தார்கள். புன்மை—இழிவு. தெரிப்பின்—ஆராய்ந்து கூறுமிடத்து.

142. ‘போனது மேன்மை’ என்பதன் விரி. திருகு சினத்தார்—மேன்மேலும் அதிகரிக்கும் கோபத்தையுடையராகி, முதிர மலைந்தார்—முற்ற அமர்செய்தவர்களாகிய’ சிறியோர்—இளைஞர்; என் தம்பி, நின் மருகர். நாள் பருகினர்—‘வில் ஒன்றில் கடிகை மூன்றில் விண்ணவரில் ஏற்றினர்.’ நலம்—மேன்மை. இரு கை சுமந்தாய்—இரண்டு கையையுங் கட்டிக்கொண்டு. இனிதின் இருந்தாய்-தான் கூறப் போகும் பொருளில் ஆராயவிடாது மாரீசன் உள்ளத்தில் கோபத்தையும் அவமான உணர்ச்சியையும் தூண்டி விடுகின்றான். வரி—கட்டமைந்த.

143 வெப்பழி யாதேன் நெஞ்சு முலந்தேன் விளிகின்றேன்
ஒப்பழி வென்றே போர்செயல் ஒல்லேன் உடன்வாழும்
துப்பழி செவ்வாய் வஞ்சியை வெளவத் துணைகொண்டிட்டு
இப்பழி நின்னால் தீரிய வந்தேன் இவண்என்றான். 7

144 இச்சொல் அனைத்துஞ் சொல்லி அரக்கன் எரிகின்ற
கிச்சி னுருக்கிட் டுய்த்தன னென்னக் கிளராமுன்
சிச்சி எனத்தன் மெய்ச்செவி பொத்தித் தெருமந்நான்
அச்ச மகற்றிச் செற்ற மனத்தோ டறைகின்றான். 8

---

143. கடைசியில் தான் வந்த காரியத்தை ஒருவாறு கூறுகின்றான். வெப்பு அழியாது—மனத்துயர் நீங்காது. நெஞ்சும் உலந்தேன்—அவமானந் தாங்காமல் உடம்புடன் மனமும் வற்றியது. விளிகின்றேன்—சாதலுக்கு ஒப்பான நிலையை அடைந்துவிட்டேன். போர் செய்து இந்த அவமானத்தை நீக்கலா மெனின்:— ஒப்பு அழிவு—அந்த அற்ப மனிதரோடு போர் செய்வது ஈடில்லை; ஆதலால் போர் செய்ய உடன்படேன்: எனவே அவர்களோடு வாழ் கின்றவளை உன் துணை கொண்டு வெளவி, இப்பழியைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இங்கே வந்தேன் என்றான்.

முதலிரண்டு அடிகளுக்கு இராவணன் உண்மை நிலைக்கேற்ற மற்றொரு பொருளும் அமைந்து நிற்பது அறியற்பாலது.

வெப்பு அழியாது—காம வெப்பம் கூடுகின்றதே யன்றி எவ்வித உபாயங் களாலும் குறையக்காணோம். நெஞ்சும் உலந்தேன்—அதனால் சரீரம் வாடிய அளவோடு நில்லாது நெஞ்சமும் உலர்ந்துவிட்டேன். விளிகின்றேன்—இதனால் இறப்பது நிச்சயம். ஒப்பு அழிவு என்றே போர் செயல் ஒல்லேன்—போர்செய்து அவளைப் பெறலாமெனின் அவ்விருவரோடு சமமாக இந்நிலையில் போர்செய்வது எனக்கு இறுதிபயக்கு மாதலின் அது செய்யும் வல்லமையுடை யேன் அல்லன். ஆதலால் இத்துன்பத்தினின்றும் நீங்கும் பொருட்டு அவளை வெளவுதலே ஏற்றது.

144. அரக்கன் இச்சொல் அனைத்தும் சொல்லி. கிச்சின் உருக்கிட்டு உய்த்தனன் என்னக் கிளராமுன்—நெருப்பிலே உருக்கிரும்பை இட்டுக் காதிலே அடிக்கடி செலுத்தினாற் போல மனவேதனையைக் கிளர. சிச்சி என—இதுவும் ஒரு பேச்சா என்று. மெய்ச் செவி—உடம்பிலுள்ள காது. தெரு மந்தான்—மனஞ் சுழன்றான். அச்சம் அகற்றி—பயத்தை நீக்கி. செற்ற மனத்தோடு—கோபங்கொண்ட மனத்தோடு. அறைகின்றான்—உரைக்கும் படி கூறுகின்றான்.

145 மன்னு நீநின் வாழ்வை முடித்தாய் மதியற்றாய்
உன்னு னன்றீது ஊழ்வினை யென்றே உணர்கின்றேன்
இன்னு நெஞ்ச னேனும் உரைப்பல் இதமென்னுச்
சொன்னு னன்றே அன்னவ னுக்குந் துணிவெல்லாம். 9

146 அற்ற கூரத்தோ டுன்றலை தீயேய் அனல்முன்றிற்
பற்றினை யுய்த்தாய் பற்பல காலம் பசிகூர
உற்றுயி ருள்ளே தேய உலந்தா யுழையன்றே
பெற்றனை செல்வம் பின்ன திகழ்ந்தாற் பெறலாமோ. 10

147 நாரங் கொண்டார் நாடு கவர்ந்தார் நடையல்லா
வாரங் கொண்டார் மற்றொரு வர்க்காய் மனைவாழும்
தாரங் கொண்டார் என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங் கண்டாய் கண்டகர் உய்ந்தார் எவரையா. 11

148 அந்தர முற்றான் அகலிகை பொற்பால் அழிவுற்றான்
இந்திரன் ஒப்பார் எத்தனை யோர்தாம் இழிபுற்றார்

---

145. இன்னு நெஞ்சனேனும்—முன்பு தீய நெஞ்சையுடையேனுயினும். இதம்—நன்மை. துணிபு—சான்றோர் துணிபு.

146. இது முதல் ஒன்பது செய்யுள் மாரீசன் வார்த்தை.

இராவணன் கோகர்ணச்சிரமம் சேர்ந்து ஓராயிரம் ஆண்டு பட்டினியிருந்து தவம் புரிந்து அதன் முடிவில் தனது தலை ஒன்றையும் கைகள் இரண்டையும் அறுத்து நெருப்பிலிட்டான்: இப்படி ஒன்பதினுயிரம் ஆண்டு ஒன்பது தலையையும் பதினெட்டுக் கைகளையும் அறுத்து இட்டான். பிறகு மறு ஆயிரமாண்டு முன்போற் பட்டினியிருந்து எஞ்சிய தலையையுங் கையையும் அறுக்கத் தொடங்கப் பிரமதேவன் வெளிப்பட்டு அவனுக்கு வேண்டிய வரங்களை அளித்தான். அனல் இல் முன்—அனல் நிரம்பிய ஓமகுண்டத்தின் முன்; முன்றில்—மரூஉ. பசி கூர உற்று—பசியை மிகுதியாக அடைந்து. உலந்தா யுழையன்றே—அப்படி அழிந்த இடத்திலன்றே செல்வம் பெற்றனை.

147. நாரம் கொண்டார்—அன்பு கொண்டவரது. நடை அல்லா வாரம்—நீதி நெறிக்கு ஒவ்வாத குடி இறை. தருமம்—அறக்கடவுள். ஈரும்—அறுத்து அழிக்கும். கண்டகர்—கொடியவர்களில். எவர்—ஒருவருமிலர்.

148. அந்தரமுற்றான்—வானுலகைப்பெற்ற இந்திரன். பொற்பு—அழகு. இழிபுற்றார்—மேலேயிருந்து கீழ்நிலையடைந்தவர். திரு உண்பார்—அழகை அநுபவிப்பவர். மந்திரமற்றார் உற்றது—ஆலோசனை இல்லாதவருக்

செந்திரு ஒப்பார் எத்தனை யோர்நின் திருவுண்பார்
மந்திர மற்றார் உற்ற துரைத்தாய் மதியற்றாய். 12

149 செய்தா யேனுந் தீவினை யோடும் பழியல்லால்
எய்தா தெய்தா தெய்தின் இராமன் உலவின்றான்
வைதா லன்ன வாளிகள் கொண்டும் வழியோடுங்
கொய்தா னன்றே கொற்ற முடித்துன் குழுவெல்லாம். 13

150 என்றா லென்னே எண்ணலை யேநீ கரனென்பான்
நின்றா னைக்கும் மேலுள னென்னும் நிலையம்மா
தன்றா னைக்குற் றாரொடு மாளத் தனுவொன்றாற்
கொன்றான் முற்றுங் கொல்ல மனத்திற் குறிகொண்டான். 14

151 வெய்யோர் யாரே வீர விராதன் துணைவெய்யோர்
ஐயோ போனான் அம்பொடும் உம்பர்க் கவனென்றால்
உய்வார் யாரே நம்மி னெனக்கொண் டுணர்தோறும்
நையா நின்றேன் நீயி துரைத்து நலிவாயோ. 15

152 மாண்டார் மாண்டார் நீயினி மாள்வார் தொழில்செய்ய
வேண்டா வேண்டா செய்கெனின் உய்வான் விதியுண்டோ

---

குத் தோன்றும் தீய விஷயத்தை. உரைத்தாய்: அதற்குக் காரணம்:—மதியற்றாய்—உன் அறிவு கெட்டாய்.

149. எய்தாது எய்தாது—நீ விரும்பியது ஒரு பொழுதும் கைகூடாது: தீவினை பழி முதலியனவே எய்தும். எய்தின்—நீ அவளைப் பிரித்தல் ஒருவாறு கைகூடினும். வைதால் அன்ன வாளிகள்—'சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம்' (பால: 86.) வழியோடும்—குலத்தோடும்: தரும யுத்த நெறியினால். கொய்தான்—நிச்சயம் கொய்வான்; காலவழுவமைதி; தேற்றப் பொருள். கொற்றம் முடித்து—உன் வெற்றிகளுக்கெல்லாம் ஒரு முடிவு செய்து.

150. என்னே நீ எண்ணலையே—நீ கொஞ்சமும் சிந்தியாதது என்ன ஆச்சரியம். தானை உற்றார்—சேனைத்தலைவர் பதினால்வர். முற்றும்—அரக்கர் குழாம் முழுவதையும்.

151. வெய்யோர்—கொடியவர். வீரனாகிய விராதனளவு கொடியோர் யார்? அம்பொடும்—ஓரம்பினாலே. நையா நின்றேன்—மனந்தளராநின்றேன். நீ இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லிக் கெடுவாயோ!

152. மாண்டார் மாண்டார்—உன்னைவிடப் பெரிய வலிமை படைத்தவர்கள் தீவினையால் இறந்துபட்டார்கள். வேண்டா வேண்டா—கனவிலும்

ஆண்டார் ஆண்டார் எத்தனை என்கோ அறம்நோனார்
ஈண்டார் ஈண்டார் நின்றவ ரெல்லாம் இலரன்றே. 16

153 எம்பிக் கும்மென் அன்னை தனக்கும் இறுதிக்கோர்
அம்புய்க் கும்போர் வில்லி தனக்கும் அயல்நிற்கும்
தம்பிக் கும்நம் மாண்மை தவிர்ந்தே சயநிற்கும்
கம்பிக் கும்மென் நெஞ்சவ னென்றே கவல்கின்றேன். 17

154 நின்றுஞ் சென்றும் வாழ்வன யாவும் நிலையாவால்
பொன்றும் மென்றும் மெய்ம்மை யுணர்ந்தாம் புலையாடற்கு
ஒன்றும் முன்னாய் என்னுரை கொள்ளாய் உயர்செல்வத்து
என்றும் மென்றும் வைகுதி ஐயா இனியென்றான். 18

---

நினைக்க வேண்டாம். செய்கு எனின்—பிடிவாதமாக, 'செய்வேன்' என்றால். விதி—வழி. ஆண்டார் ஆண்டார்—ஒரு நாயகமாய் நெடுங்காலம் உலகம் முழுவதையும் ஆண்டவர்கள். எத்தனை என்கொ—எவ்வளவுபேர் என்று கணக்கிடமுடியுமோ? 'கடல் எக்கரின் நுண்மணலின் பலர் எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டு கழிந்தவர்'. ஆகவே அறம் நோனார்—அறத்தை மேற்கொண்டு ஒழுகாதவர். ஈண்டார் ஈண்டார்—ஒரு பொழுதும் விருத்தியடையார்; அழிவது திண்ணம். நின்றவரெல்லாம் இலரன்றே—அப்படி இன்றைக்கு நின்றவராகத் தோன்றுபவ ரெல்லாம் நாளை இல்லாதவரன்றோ? 'மனைப்பால் மருங்கற மாய்வதல்லால் மற்றுக்கண்டிலம்'. (திருவாய்மொழி: 4: 1, 4.)

153. எம்பி—சுபாகு. அன்னை—தாடகை. வில்லி—இராமன். நம் ஆண்மை தவிர்ந்து—நம் ஆண்மை நீங்கி. சயம் நிற்கும்—வெற்றி வில்லிக்கும் தம்பிக்கும் நிற்கும். அவன் என்றே என் நெஞ்சு கம்பிக்கும் கவல்கின்றேன்—அவ்விராமன் அத்தகையன் என்ற காரணத்தினாலே என்மனம் நடுங்குகின்றது; ஆதலால் உன்னைக் குறித்துக் கவலைப்படுகின்றேன்.

154. நின்றும் சென்றும் வாழ்வன—அசரம், சரம் ஆகிய, இப்பொழுது நிலையாக வாழ்வனவற்றுள். யாவும் நிலையா—எவையும் நிலை நிற்கமாட்டா. பொன்றும்—இறத்துபடும். என்றும்—எக்காலத்திலும். மெய்ம்மை உணர்ந்தாம்—இந்த உண்மையை நாம் அனுபவவாயிலாகத் தெரிந்துகொண்டோம். ஆதலால் புலையாடற்கு ஒன்றும் உன்னாய்—பொல்லாங்கு செய்தற்குக் கொஞ்சமும் நினையாதே. என் உரை கொள்ளாய்—நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நட. என்றும் என்றும்—எல்லாக்காலமும்.

## வேறு

155 கங்கைசடை வைத்தவனெ டுங்கயிலை வெற்போர்
அங்கையின் எடுத்தவென தாடெழின் மணித்தோள்
இங்கொர்மனி தற்கெளிய என்றனை யெனத்தன்
வெங்கணெரி யப்புருவ மீதுற விடைத்தான். 19

156 நிகழ்ந்ததை நினைந்திலையென் நெஞ்சின்நிலை அஞ்சாது
இகழ்ந்தனை எனக்கிளைய நங்கைமுக மெங்கும்
அகழ்ந்தனைய தொப்புற அமைத்தவரை ஐயா
புகழ்ந்தனை தனிப்பிழை பொறுத்தனென் இதென்றான். 20

157 தன்னைமுனி வுற்றதறு கட்டகவி லோனைப்
பின்னைமுனி வுற்றிடு மெனத்தவிர்தல் பேணாது
உன்னைமுனி வுற்றன குலத்தைமுனி வுற்றாய்
என்னைமுனி வுற்றிலை இதென்னென இசைத்தான். 21

---

155. அடுத்த இரண்டு செய்யுள் இராவணன் கூறிய விடை.

ஆடு எழில் மணித்தோள்—வெற்றியாகிய அழகும் இயற்கையழகும் பொருந்திய தோள். எளிய—எளியன; இளைப்பன. என—என்று கூற; இப்படிக் கூறுமளவில் கோபம் மூண்டது: அதனால் கண்களினின்றும் கனல் வீசவும் புருவம் நெற்றியின் மேலே ஏறவும் கோபித்தான்.

156. இனி வர வரக் கோபம் அதிகரிக்கின்றது. நிகழ்ந்ததை நினைந்திலை—இப்பொழுது நிகழ்ந்தது எத்தகைய அவமானம் என்பதைக் கருதினை யல்லை. அதனால் என் மனம் என்ன பாடு படுகின்றதென்பதையறிந்து அச்சங் கொள்வதை விட்டு வாய்க்கு வந்தபடி பேசி என் தோள்வலிமையை இகழ்ந் தாய். அம்மட்டோ? என்னுடைய தங்கை முகத்தை இப்படிப் பாழ்படுத்திய மனிதரை என்முன்னே புகழ்ந்தாய். இந்த ஒரு முறை பிழை பொறுத்தேன்.

157. இதைக் கேட்டு முன்னையினும் அதிகப்பட்ட கோபங்கொண்ட மாரீசன் பேச்சு அடுத்த நான்கு கவிகள்.

தன்னை முனிவுற்ற தறுகண் தகவிலோனை—தன்னை அவன் முனிதற்குக் காரணம் அஞ்சுவ தஞ்சாமையும் நடுவு நிலைமையின்மையும் என்று கருதினான். அப்படிப் பட்டவன் தான் மேலுஞ் சில உறுதி கூறின் பின்னையும் கோபிப் பான்; ஆதலால் உறுதி கூறாமல் அவன் கோபத்திற்கு ஆளாகாமல் தப்பலாம் என்பதை விரும்பாமல் தன் மன எழுச்சியின்படியே பேசலானான். இது என் —இது என்ன பயித்தியங் கொண்ட செயல்?

158 எடுத்தமலை யேநினையில் ஈசனிகல் வில்லாய்
வடித்தமலை யேயிது வலித்தியென வாரிப்
பிடித்தமலை நாணிடை பிடித்தொருவன் மேனாள்
ஒடித்தமலை உம்பர்முக டுற்றமலை யன்றோ. 22

159 யாதுமறி யாயுரைகொ ளாயிக லிராமன்
கோதைபுனை யாமுனுயிர் கொள்ளைபடு மன்றே
பேதைமதி யாலிஃதொர் பெண்ணுருவ மென்றாய்
சீதையுரு வோநிருதர் தீவினைய தன்றோ. 23

160 உய்ஞ்சுபிழை யாயுறவி னோடுமென வுன்னா
நெஞ்சுபறை போதுமது நீநினைய கில்லாய்
அஞ்சுமென நாருயிர் அழிந்தருகு நின்றார்
நஞ்சுநுகர் வாரைஇது நன்றெனலு நன்றோ. 24

161 வேதனைசெய் காமவிட மேலிட மெலிந்தாய்
நீதுரைசெய் தாயினைய செய்கைசிதை வன்றோ
மாதுலனு மாய்மரபின் முந்தையுற வந்தேன்
ஈதுரைசெய் தேனிதனை எந்தைதவிர் கென்றான். 25

---

158. எடுத்த மலையே............வடித்த மலையே—நீ எடுத்த மலையைப் பற்றி ஆராயுமிடத்து அஃது வெள்ளி மலையேயன்றி ஈசன் முப்புரத்திற்கு மாறாக வில்லாய் வளைத்த மேருமலையோ! அன்று. இது...........அன்றோ—இதனை வளைப்பாய் என்று கூறிய அளவில் முன்பு, ஒப்பற்ற இராமன் எளிதாகக் கைப்பற்றியதும் அப்படி வளைத்து நாணேற்றும் பொழுதே ஒடித்ததுவுமாகிய வில் ஆகாயத்தை அளாவிய பொன்மலையன்றோ?

159. யாதும் அறியாய்—உன் செயலின் விளைவு இன்னதாகும் என்பதை ஒரு சிறிதும் உணராய். என் உரையையும் ஏற்றுக் கொள்ளாய். கோதை புனையாமுன்—வில்லின் நாணியை ஏற்றுமுன். உயிர் கொள்ளை படுமன்றே—உயிர்கள் பெருவாரியாக அழிந்துபடுமல்லவா! சீதை உருவோ நிருதர் தீவினையது அன்றோ—சீதையின் அழகிய உருவம் அரக்கர் செய்த பாவம் கொண்ட வடிவமேயன்றோ! அதை நீ விரும்பலாமா?

160. உஞ்சு பிழையாய் உறவினோடும்—உன் சுற்றத்தாரோடும் நீ தப்பி உயிர் பிழையாய்—என்று எண்ணி என் நெஞ்சு பறையடிப்பது போலத் துடியா நின்றது. அது—அந்த என் நிலைமை.

161. மேலிட—அதிகப்பட. மெலிந்தாய்—வாட்ட முற்றாய். இனைய செய்கை சிதைவன்றோ—இத்தன்மையான காரியம் அழிவிற்குக் காரண மன்றோ! முந்தையுற—முற்பட.

162 என்னவுரை அத்தனையும் எத்தனையும் எண்ணச்
சொன்னவனை ஏசின அரக்கர்பதி சொன்னான்
அன்னைஉயிர் செற்றவனை அஞ்சியுறை கின்றாய்
உன்னையொரு வற்கொருவன் என்றுணர்கை நன்றோ. 26

163 திக்கயம் ஒளிப்பநிலை தேவர்கெட வானம்
புக்கவர் இருக்கைபுகை வித்துலகம் யாவும்
சக்கர நடத்துமெனை யோதயர தன்றன்
மக்கள்நலி கிற்பரிது நன்றுவலி யன்றோ. 27

164 மூவுலகி னுக்குமொரு நாயக முடித்தேன்
மேவலர் கிடைக்கினிதன் மேலினிய துண்டோ
ஏவல்செய கிற்றியென தாணைவழி எண்ணிக்
காவல்செய் அமைச்சர்கடன் நீகடவ துண்டோ. 28

---

162. இவ்வளவையும் கேட்ட இராவணன் கடுங் கோபங்கொண்டான். நேர் மறுமொழி கூற இயலாது எள்ளி ஏசிப் பேசலுற்றான்: தன் அதிகாரத்தைக் காட்டி அச்சுறுத்த லானான். இது முதல் நான்கு செய்யுள் அவன் கூறுவன.

என்ன உரை அத்தனையும் எத்தனையும் எண்ணச் சொன்னவனை—என்று சொன்ன அவ்வளவையும் எந்தச் சிறிய அளவேனும் சிந்திக்கட்டும் என்று கூறிய மாரீசனை. ஏசின அரக்கர் பதி சொன்னான்—எண்ணுவதற்குப் பதில் தொடங்கும் பொழுதே ஏசினபடி ஆரம்பித்த இராவணன் சொன்னான். அவன் சொன்னது;—தாயைக் கொன்றவனுக்கு அஞ்சி வாழ்கின்றாய்; உன்னையும் ஓர் ஆண்மகன் என்று நினைப்பது தகுதியோ!

163. தேவர் நிலை கெட. புகைவித்து—நெருப்புக் கொளுத்தி. சக்கரம்—ஆஞ்ஞா சக்கரம், நலிகிற்பர்—வருத்துவர். இது நன்று வலியன்றோ—இது நல்ல சாமர்த்திய மன்றோ? பரிகாசஞ் செய்து கூறினான்.

164. ஒரு நாயகம்—ஓரரசு. முடித்தேன்—நிறைவேற்றினேன், நிலை நாட்டினேன். மேவலர்—பகைவர். இனியது—மகிழ்ச்சி தருவது. ஏவல் செயகிற்றி—ஏவியதைச் செய்யக்கடவாய். எனது கட்டளையின் வழியிலே நின்று எண்ணிக் காவல்புரிகின்ற மந்திரிமார் கடமையைக் கடப்பதற்கு உனக்கு உரிமையுண்டோ!

165 மறுத்தனை யெனப்பெறினும் நின்னைவடி வாளால்
ஒறுத்தென மனக்குறை முடிப்பதொழி கல்லேன்
வெறுப்பன கிளந்தனுறும் இத்தொழிலை விட்டேன்
குறிப்பின்வழி நிற்றி உயிர் கொண்டுழலின் என்றான். 29

## வேறு

166 அரக்கனஃ துரைத்த லோடும் அறிந்தனன் அடங்கி நெஞ்சந்
தருக்கினர் கெடுவ ரன்றே தத்துவ நிலையிற் றன்றோ
செருக்கினில் தீர்தும் என்பார் தம்மினார் செருக்கர் என்னா
உருக்கிய செம்பி னுற்ற நீரென உரைக்க லுற்றான். 30

167 உன்வயின் உறுதி நோக்கி உண்மையின் உணர்த்தி
னேன்மற்று
என்வயின் இறுதி நோக்கி அச்சத்தால் இசைத்தே னல்லேன்
நன்மையுந் தீமை யன்றோ நாசம்வந் துற்ற போது
புன்மையின் உற்ற நீராய் செய்வது புகறி என்றான். 31

---

165. மறுத்தனை யெனப்பெறினும் — மறுத்துவிட்டாயானாலும். ஒறுத்து—வெட்டி. குறிப்பு—மனக் குறிப்பு; எண்ணம். உயிர் கொண்டு உழலின்—உயிரோடு திரிய வேண்டின்.

166. மாரீசன் கோபம் பயன்படாமையை உணர்ந்து வஞ்சனையினால் தான் உயிர்தப்ப முயல்கின்றான். நெஞ்சம் தருக்கினர்—அகங்காரங் கொண்டவர். தத்துவ நிலை இற்று அன்றோ—உண்மை நிலை இப்படிப்பட்டதல்லவா? செருக்கினில் தீர்தும் என்பார் தம்மில் ஆர் செருக்கர்—காமக் களிப்பினாலே தமது மனக்குறையை நிறைவேற்றுவோம் என்று சொல்பவரைவிடக் கூடிய அகங்காரமுடையவர் ஒருவருமிலர்.

167. நன்மையும் தீமை அன்றோ நாசம் வந்துற்றபோது—கேடு வந்துற்றபோது பிறர் கூறும் நன்மையும் தீமையாகவே தோன்றுமன்றோ! புன்மையின் உற்ற நீராய்-சிறுமையில் மனம் படிந்த குணத்தையுடையவனே! புகறி—சொல்லுதி.

168 என்றலும் எழுந்து புல்லி ஏறிய வெகுளி நீங்கிக்
குன்றெனக் குவிந்த தோளாய் மாரவேள் கொதிக்கும் அம்பாற்
பொன்றலில் இராம னம்பாற் பொன்றலே புகழுண் டன்றோ
தென்றலைப் பகையைச் செய்த சீதையைத் தருதி என்றான். 32

169 ஆண்டையான் அனைய கூற அரக்கரோர் இருவ ரோடும்
பூண்டவென் மானந் தீரத் தவவனம் புக்க போழ்தில்
தூண்டிய சரங்கள் பாயத் துணைவர்பட் டுருள அஞ்சி
மீண்டயான் சென்று செய்யும் வினைஎன்கொல் விளம்பு கென்றான். 33

170 ஆயதாங் கனைய கூற அரக்கர்கோன் ஐய நொய்துன்
தாயையா ருயிருண் டானை யான்கொலச் சமைந்து நின்றேன்
போயையா புணர்ப்ப தென்னே என்பது பொருந்திற் றன்றோ
மாயையால் வஞ்சித் தன்றோ வெளவுதல் அவனை என்றான். 34

171 புறத்தினி உரைப்ப தென்னே புரவலன் தேவி தன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித் தெய்துதல் சிறுமைத் தாகும்

---

168. பொன்றலில்—இறத்தலைவிட. தென்றலைப் பகையைச் செய்த—இனிய தென்றற் காற்றைப் பகையாகும்படி செய்த.

169. ஆண்டையான்—தலைவன். இராமபிரான் பஞ்சவடியில் இருக்கும் பொழுது மாரீசன் முன்பு தன் அன்னையையும் தம்பியையுங் கொன்ற பகைமையைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு, மாறுவேடம் பூண்டு, வேறு இருவர் அரக்கரோடுஞ்சென்று, இராமபிரானைக் குத்திக் கொலை செய்ய முயன்ற போது, அப்பிரான் அம்பினால் உடன்சென்றவர் மடியத் தான் மட்டும் தப்பியோடி ஒளித்தான். மானம்—பகை. தூண்டிய—எய்த.

170, ஆயது ஆங்கு அனைய கூற—அச்சம்பவம் அப்பொழுது நடைபெற்றது போன்று அவ்வரலாற்றை மாரீசன் சொல்ல. நொய்து—எளிதிலே; விரைவில். தாயை ஆருயிர் உண்டானை—இராமனை. சமைந்துநின்றேன்—சித்தமாயிருக்கின்றேன். போய் ஐயா புணர்ப்பது என்னே என்பது பொருந்திற்று அன்றோ—'ஐயனே! யான் போய்ச் செய்ய வேண்டுவது யாது!' என்று என்வழிக்கு வந்து நீ கேட்பது உனக்குப் பொருத்தமான செயல் அல்லவா!

171. திறத்துழி அன்றி—வலிமையினால் அல்லாமல். சிறுமைத்து—தாழ்வானது. அறத்து உளது ஒக்கும் அன்றே—நீதி நூல்கள் கூறுவதோடும்

அறத்துளது ஒக்கு மன்றே அமர்த்தலை வென்று கொண்டுன்
மறத்துறை வளர்த்தி மன்ன என்னமாரீசன் சொன்னான். 35

172 ஆனவன் உரைக்க நக்க அரக்கர்கோன் அவரை வெல்லத்
தானையும் வேண்டு மோஎன் தடக்கைவாள் தக்க தன்றோ
ஏனையர் இறக்கில் தானும் தமியளாய் இறக்கு மன்றே
மானவள் ஆத லாலே மாயையின் வலித்தும் என்றான். 36

173 தேவியைத் தீண்டா முன்னம் இவன்தலை சரத்திற் சிந்திப்
போம்வகை புணர்ப்பன் என்று புந்தியாற் புகல்கின் றேற்கும்
ஆம்வகை ஆயிற் றில்லை யார்விதி விளைவை ஓர்வார்
ஏவது செய்வ தல்லால் இல்லைவே றொன்றென் றெண்ணா. 37

174 என்னமா மாயம் யான்மற் றியற்றுவ தியம்பு கென்றான்
பொன்னின்மா னாகிப் புக்குப் பொன்னைமால் புணர்த்து கென்ன
அன்னது செய்வென் என்னா மாரீசன் அமைந்து போனான்
மின்னும்வேல் அரக்கர் கோனும் வேறொரு நெறியிற் போனான். 38

---

பொருந்துமன்றோ! ஆதலால் போரிலே வென்று உன் வீரச்செயலை வளர்ப்பாயாக என்றான்.

172. மாரீசன் கடுங் கோபத்தை இராவணனது ஏறிய வெகுளி அடக்கியது போலவே அவன் வஞ்சனையையும் இராவணனது நய வஞ்சகம் பயனற்றதாக்கிற்று. ஏனையர்—தன்னுடனிருப்பவர். மானவள்—மானுட மகள். வலித்தும்—கைப்பற்றுவோம்.

173. புந்தி—தந்திரம்: ஆம் வகை ஆயிற்றில்லை—உயிர் பிழைக்கலாகும் வழி கைகூடவில்லை. ஏவது—ஏவியது. வேறு ஒன்று இல்லை—செய்யும் வகை வேறு ஒன்று இல்லை. அடுத்த கவியோடு முடியும்.

174. பொன்னைமால் புணர்த்துக-சீதைக்கு ஆசையூட்டுக. புணர்த்துக என்ன—தொகுத்தல் விகாரம். அமைந்து—சம்மதித்து.

ஆரணிய காண்டம் முற்றிற்று.

---